# அழியாத கோலங்கள்

பால்ய, பதின்மப் பருவத்து நனவிடை தோய்தல்

வ.ந. கிரிதரன்



# நுழைவாயிலில்... - வ.ந.கிரிதரன் -

அண்மையில் நண்பரும் எழுத்தாளருமான டானியல் ஜீவா அவர்கள் 'ஏன் நீங்கள் உங்கள் பால்ய பருவத்து அனுபவங்களை நூலாக்கக் கூடாது? நீங்கள் எழுதும் வவுனியா அனுபவங்களையெல்லாம் விரும்பி வாசிப்பவன் நான்' என்றார். அப்பொழுதுதான் நானும் அது பற்றி யோசித்தேன். நான் முகநூலில், பதிவுகள் இணைய இதழில், என் வலைப்பதிவில் எல்லாம் என் பால்ய, பதின்ம வயது அனுபவங்களை எழுதுவது வழக்கம். என் பால்ய பதின்ம வயதுத்திரைப்பட அனுபவங்களை, வாசிப்பு அனுபவங்களையெல்லாம் நிறைய எழுதியிருக்கின்றேன்.

மீண்டும் அவற்றை நோக்கியபோது ஒரு நூலாக்கும் அளவுக்கு எழுதியிருந்ததை உணர முடிந்தது. அவை அனைத்தையும் தொகுத்து நூலாக்கினால் நல்லதோர் ஆவணமாக அதுவிருக்கும் என எனக்கும் தோன்றியது. அதன் விளைவே இந்த மின்னூல். மேலும் பல தொகுப்புகள் வருவதற்கான சாத்தியங்கள் உள்ளன.

சில பதிவுகள் , ஒன்றுக்கு மேற்பட்டவை, ஒரே விடயத்தைக் கூறுபவையாகவும் இருந்தாலும் அவற்றை நான் நீக்கவில்லை. எழுதப்பட்ட பதிவுகள் என்னும் அடிப்படையில் அவை அனைத்தையும் தொகுப்பில் உள்ளடக்கியுள்ளேன்.

இவை அழியாத கோலங்கள் மட்டும்மல்ல. ஒரு குறிப்பிட்ட காலத்து வரலாற்றை வெளிப்படுத்தும் ஆவணங்களும் கூட. இவ்விதமானதோர் ஆலோசனையினைத் தந்ததற்காக நண்பர் டானியல் ஜீவாவுக்கு நன்றி.

# உள்ளே

## 1. மறக்க முடியாத வவுனியா மகா வித்தியாலயம்....

என் கல்விக்கு அத்திவாரமிட்ட பாடசாலை வவுனியா மகா வித்தியாலயம். என் பால்ய காலத்தில் அரிவரியிலிருந்து ஏழாம் வகுப்பு வரையில் நான் கல்வி கற்ற பாடசாலை இது. அப்பொழுது அங்குதான் அம்மா (நவரத்தினம் டீச்சர்) ஆசிரியையாகப் பணியாற்றிக்கொண்டிருந்தார். என் வாழ்வின் மறக்க முடியாத அப்பருவத்தில்தான் என் வாசிப்புப் பழக்கம் ஆரம்பமாகியது; என் எழுத்துப்பழக்கம் ஆரம்பமாகியது. வீடு முழுவதும் அப்பா வாங்கிக் குவித்த பத்திரிகைகள், சஞ்சிகைகளால் நிறையப்பெற்றிருந்த சூழலில் என் வாசிப்புப் பழக்கமும், எழுத்துப்பழக்கமும் நான் ஆறாம் வகுப்புக் காலகட்டத்திலேயே தொடங்கி விட்டன. என் ஒன்பதாவது வயதிலேயே கல்கியில் மறு பிரசுரமாகத் தொடராக வெளிவந்துகொண்டிருந்த கல்கியின் 'பொன்னியின் செல்வன்' நாவலை வாசிக்கத்தொடங்கி வல்லவரையான் வந்தியத்தேவன், குந்தவைப்பிராட்டியாரிடத்தில் என் உள்ளத்தைப் பறிகொடுத்திருந்தேன். கல்கியின் நகைச்சுவையுடன் கூடிய எழுத்து நடையில் என்னைப்பறிகொடுத்திருந்தேன்.

அண்மையில் நூலகம் தளம் ஈழநாடு , சுதந்திரன் பத்திரிகைகளின் பல அக்காலப்பிரதிகளை ஆவணப்படுத்தியிருந்ததை அவதானித்தேன். ஆனால் இன்னும் அவை வாசிப்பதற்குரிய நிலையிலில்லை. அவற்றை வாசிப்பதற்குக் காத்திருக்கின்றேன். முக்கிய காரணம் அவை என் எழுத்துலகத்தொடக்கத்தின் சாட்சிகளான பிரதிகளை உள்ளடக்கியுள்ளதுதான். 1969ம் ஆண்டு ஈழநாடு பத்திரிகையின் மாணவர் மலர் பகுதி தீபாவளி தொடர்பாகத் 'தீபாவளி இனித்தது' என்னும் கட்டுரைப்போட்டியினை அறிவித்திருந்தது. வவுனியா மகா வித்தியாலயத்து ஆறாம் வகுப்பு மாணவனாகப் படித்துக்கொண்டிருந்த நான் அப்போட்டிக்கு என் கட்டுரையான 'தீபாவளி இனித்தது' கட்டுரையினை அனுப்பி வைத்தேன். அது வெற்றிபெறவில்லையென்றாலும் அது பற்றி ஈழநாடு மாணவர் ,மலர் குறிப்பொன்றினை வெளியிட்டிருந்தது. அதில் 'வவுனியா மகா வித்தியாலய ஆறாம் வகுப்பு மாணவனான கிரிதரனின் கட்டுரையான தீபாவளி இனித்தது ' என்று கட்டுரையைப் பாராட்டி எழுதப்பட்டிருந்தது. அந்தத்தகவலை உள்ளடக்கிய ஈழநாடு பத்திரிகைபப்பிரதியைத்தான் நூலகம் தளத்தில் எதிர்பார்த்துக்காத்திருக்கின்றேன்.

அடுத்தது 1970 ஆண்டு பொங்கல் தின வெளியீடாக வெளிவந்த சுதந்திரன் பத்திரிகைப் பிரதி. அதில்தான் முதல் முறையாக எனது பொங்கல் கவிதையான சிறுவர் கவிதையான் 'பொங்கலோ பொங்கலோ' வெளியாகியிருந்தது. அதுவே அச்சில் வெளியான எனது முதற் படைப்பு. அப்போது நான் வவுனியா மகா வித்தியாலயத்தில் ஏழாம் வகுப்பு மாணவனாகக் கல்வி பயின்று கொண்டிருந்தேன். சொன்னால் நம்ப மாட்டீர்கள் அன்று என்னுடன் படித்த பால்ய காலத்து நண்பர்களில் சிலரை முகநூல் மீண்டும் என்னுடன் இணைத்துள்ளது. அவர்கள் சண்முகராஜா, திருநாவுக்கரசு, விக்கி. & சிவகுமார்.

வவுனியா மகா வித்தியாலயத்தில் என் இறுதியாண்டு 1970. அதன் பின்னர் நான் யாழ் இந்துக்கல்லூரிக்கு மாறி விட்டேன். ஆனால் 1970ஆம் ஆண்டும் எனக்கு நினைவில் நிற்குமொரு வருடம். அவ்வருடம் நடந்த அகில இலங்கைத் தமிழ்த்தின விழாக் கட்டுரைப்போட்டியில் (மட்டக்களப்பு புனித மைக்கல் கல்லூரியில் நடைபெற்றது) அகில இலங்கைரீதியில் முதலாவதாக வந்துள்ளேன். இதற்கான முடிவுகளைத் தினகரன் பத்திரிகை வெளியிட்டிருந்தது. என்னை அழைத்துக்கொண்டு அப்பாவும், சுப்பிரமணியம் மாஸ்ட்டரும் வந்திருந்தார்கள். மறக்க முடியாத மட்டக்களப்புப் பயண அனுபவம் அது. அது பற்றி முன்னரே விரிவானதொரு முகநூல் பதிவொன்றினையிட்டிருக்கின்றேன்.

வவுனியா மகா வித்தியாலயம் என்றதும் என் நினைவில் நிற்கும் இன்னுமொரு விடயம். ஒருமுறை (அறுபதுகளில்) அங்கு கலைவிழாவும் (கண்காட்சியுடன் கூடிய) இரண்டு மூன்று நாள்களாக நடைபெற்றது. அக்கலைவிழாவின் இறுதி நாளன்று அப்பொழுதுதான் மைதானத்தின் ஒரு புறத்தே இவ்விதமான நிகழ்வுகளை நடாத்துவதற்காக அமைக்கப்பட்டிருந்த திறந்தவெளி மேடையில் நடைபெற்ற அரிச்சந்திரா நாடகம். நாடகத்தின் மயானக் காட்சியும் நடிகர்களின் உணர்ச்சிகரமான நடிப்பும் இன்னும் ஞாபகத்திலுள்ளன. அக்காலகட்டத்தில் மூன்று முறிப்பிலுள்ள பாடசாலையொன்றின் அதிபராக இளைஞரொருவர் பணியாற்றிக்கொண்டிருந்தார். ஆங்கிலப்பட்டதாரியான அவர் நீண்ட தலை முடி வளர்த்து ஹிப்பி போன்ற தோற்றத்தில் திரிவார். அவரை அடிக்கடி அக்காலகட்டத்தில் நகரில் காண்பதாலும், அக்கலைவிழாவிலும் கண்டதாலும் அக்கலைவிழாவைப்பற்றி எண்ணியதும் அவரது தோற்றமும் கூடவே ஞாபகத்துக்கு வந்து விடுவது வழக்கம். அவரது பெயர் ஞாபகத்திலில்லை. ஆனால் அக்கலைவிழாவில் ஆசிரியையான அம்மாவுக்கு முன்னர் மாணவனைப்போன்று பவ்வியமாக , மரியாதையுடன் அவர் சிறிது நேரம் கதைத்துக்கொண்டிருந்ததும் நினைவிலுள்ளது.

இயற்கை வளம் மலிந்த வவுனியாவும், அங்கு கழிந்த என் பால்ய காலமும் , ஆரம்பக் கல்வியைக் கற்ற வவுனியா மகா வித்தியாலயமும் இன்னும் பசுமையாக, அழியாத கோலங்களாக நெஞ்சில் படிந்து போயுள்ளன.

## 2. அகில இலங்கைத் தமிழ்த்தின விழாக் கட்டுரைப் போட்டியில் முதற் பரிசு.



இங்குள்ள புகைப்படம் எழுபதுகளில் என்னிடமிருந்த பெட்டிக் கமராவால் எடுக்கப்பட்டது. புகைப்படம் மிகவும் தெளிவற்ற நிலையில், சிதைந்த நிலையிலுள்ளதால் தெளிவான ஒரு பகுதியை மட்டும் இங்கு பதிந்துள்ளேன்.

இங்குள்ள புகைப்படத்தில் என் கைகளிலிருப்பவை புத்தக்கட்டொன்றும், பரிசுக் கேடயமொன்றும். வவுனியா மகா வித்தியாலய மாணவனாக ஏழாம் வகுப்பில் இருந்தபோது, மட்டக்களப்பு புனித மைக்கல் கல்லூரியில் நடந்த அகில இலங்கைத் தமிழ்த்தின விழாக் (1970) கட்டுரைப்போட்டியில் முதற்பரிசு பெற்றபோது எனக்குக் கிடைத்த பரிசுப்பொருட்கள் இவை. இவையெதுவும் என்னிடம் தற்போதில்லை இப்புகைப்படத்தைத்தவிர.

எனக்குக் கிடைத்த புத்தகங்களின் பெயர்களில் நினைவிலுள்ளவை:

1. மட்டக்களப்புத் தமிழகம் - வி.சீ.கந்தையா
2. தமிழ்ச் சிறுகதைகளின் தோற்றமும் , வளர்ச்சியும் - பேராசிரியர் கா.சிவத்தம்பி
3. புலவர்மணி ஏ.பெரியதம்பிப்பிள்ளையின் வெண்பா நூல்.
4. வடமோடி, தென்மோடி நாட்டுக்கூத்து பற்றிய நூல்.
5. மேலும் சில நூல்கள். நினைவிலில்லை.

கேடயம் பற்றிய விபரங்கள்:

இக்கேடயத்தினைக் கட்டுரைப்போட்டியில் முதற்பரிசு பெற்றதற்காக நூல்களுடன் தந்தார்கள். பலவருடங்களுக்குப் பின்னரே இதனை வழங்கியவர் யாரென்பதை அறிந்தேன். கிழக்கு மாகாணத்தின் முக்கியமான ஒருவரால் வழங்கப்பட்ட கேடயமிது. அவர் இவ்விருதினை வழங்கியபோது அரசியலில்லை. பின்னர் எழுபத்தேழில் தமிழர் விடுதலைக் கூட்டணி சார்பில் போட்டியிட்டு, ஆளும் கட்சிக்கு மாறிய பொத்துவில் பா.உ. கனகரத்தினமே வழங்கியிருந்தார். அவரைப்பற்றிய விபரங்கள் கேடயத்தின் பின்னால்

பொறிக்கப்பட்டிருந்தன. நாட்டின் போர்ச்சூழலில் நானிழந்த பலவற்றுள் இவையுமடங்கும்.

*இன்னுமொரு விடயம்: மேற்படி போட்டியில் நான் எழுதி முதற் பரிசு பெற்ற கட்டுரையின் தலைப்பு 'எனது பயணம்'. அவர்கள் எழுதுவதற்குத் தந்த தலைப்புகளில் பயணமும் ஒன்று. மட்டக்களப்புக்கு அப்பொழுதுதான் முதன் முறையாகப் புகையிரதத்தில் சென்றிருந்தேன். நீண்ட பாலங்களூடு சென்ற புகையிரதப் பயணம் எனக்கு மிகவும் பிடித்திருந்தது. அப்பயண அனுபவத்தையே எழுதினேன்.முதற் பரிசு கிடைத்தது.

## 3. பால்ய காலத்து வவுனியா நினைவுகள்.....

என்னுடன் வவுனியா மகாவித்தியாலயத்தில் ஏழாம் வகுப்பு வரை படித்த சண்முகராஜா (சங்கீத வாத்தியார் பொன்.நடராஜா அவர்களின் புதல்வன்), 'மொடேர்ன் ஸ்டோர்ஸ்' திருநாவுக்கரசு சிற்றம்பலம் மற்றும் யாழ் இந்துக்கல்லூரியில் க.பொ.த (சாதாரணம்) என்னுடன் படித்த முரசுமொட்டை ராஜரத்தினம் போன்றவர்களையெல்லாம் இணையம் குறிப்பாக முகநூல் மீண்டும் சந்திக்க வைத்துள்ளது. இவர்களைப்போல் சிறிது காலத்துக்கு முன்னர் 'கட்டை விக்கி' என்று அக்காலத்தில் செல்லமாக அழைக்கப்பட்ட விக்கியுடனும் இணையத்தின் மூலம் மீண்டும் அறிமுகம் கிடைத்தது. முகநூலின் ஆரோக்கியமான வலிமையினை வெளிப்படுத்தும் அறிமுகங்களிவை. .

வவுனியா என்றதும் நகர் இப்பொழுது எப்படியிருக்கிறது என்றறிய மனம் அவாவுற்றது. Google Map மூலம் சிறிது நேரம் நகரைச்சுற்றிப்பார்த்தேன். நகரே முற்றாகவே மாறியிருந்ததை அவதானிக்க முடிந்தது. ஒரு காலத்தில் காடு மண்டிக்கிடந்த இடங்களெல்லாம் இப்பொழுது முற்றாகவே கட்டடங்களாக மாறியிருந்தன. அக்காலகட்டத்தில் நாங்கள் அலைந்து திரிந்த வீதிகளையெல்லாம் மீண்டுமொருமுறை பார்த்தபொழுது சிந்தனை அக்காலகட்டத்துக்கே சென்றுவிட்டது. குளங்களும், காடும் மண்டி இயற்கையுடன் ஒன்றிக்கிடந்த அக்கால வவுனியாவில் கூழாம் பழம், பாலைப்பழம், வீரைப்பழம் பறிப்பதற்காக அலைந்து திரிந்த வீதிகள் வழியே சிறிது நேரம் பயணித்தபொழுது நகரில் நீண்டிருந்த புதியதொரு வீதியையும் கண்டேன். ஹொரவப்பொத்தானை வீதியிலிருந்து, மடுக்கந்தை - ஈரப்பெரியகுள வீதி வரையில் நீண்டிருந்த அந்த வீதியின் பெயர் உமாமகேசுவரன் வீதி.

வவுனியா என்றதும் என் நினைவுக்கு வருபவர்கள், வரும் விடயங்கள் வருமாறு:

1. குருமண்காடு பகுதியில் வாழ்ந்த எம் அயலவர்கள் பற்றிய நினைவுகள். அக்காலகட்டத்தில் காடு மண்டிக்கிடந்த குருமண்காட்டில் ஒற்றையடிப்பாதையை மட்டுமே கொண்டிருந்தது. இப்பொழுது மிகவும் அபிவிருத்தியடைந்துவிட்ட பகுதி. அக்காலத்தில் அதற்கு வீதிப்பெயர் இல்லை. குருமண்காடு என்பார்கள். தற்போது அதற்கு கோவில் வீதி என்று பெயர்.

2. பட்டாணிச்சுப் புளியங்குளம். மாரியென்றால் வான் பாயும் ஒலியினை எங்கள் வீட்டிலிருந்து இரவுகளில் கேட்கலாம். வான் பாயும் சமயங்களில் வெங்கணாந்திப்பாம்பு (மலைப்பாம்பின் சகோதர வகைப்பாம்பினம்) விரால் பிடிப்பதைப் பலர் பார்த்திருக்கின்றார்கள். இங்குதான் நான் நீந்தப்பழகியது.

3. விலாட் , கறுத்தக்கொழும்பான் என்று பல்வேறு வகைகளிலான மாம்பழங்கள்.

4 பல்வேறு வகைப்புள்ளினங்கள்: ஆலா, மாம்பழத்தி, கொண்டை விரிச்சான், குக்குறுபான், மீன்கொத்தி, நீர்க்காகம், பச்சைக்கிளி, சிட்டுக்குருவியினங்கள், தேன்சிட்டு,, காடை, கௌதாரி

5. நகரின் திரையரங்குகள்: றோயல், ஸ்ரீமுருகன் & நியூ இந்திரா டாக்கிஸ்

6. நகரின் முக்கியமான நாம் அலைந்து திரிந்த வீதிகள்.

7. நகரின் முக்கியமான வர்த்தக நிலையங்கள்.

8. 'பாண்சாலை' எனப்படும் பெளத்த வழிப்பாட்டிடங்கள்.

9. குருமண்காட்டிலிருந்த நெசவு சாலையும், அதனை அண்டிய பரந்த வயல்வெளியும்.

10. வவுனியா மகாவித்தியாலயம்.

11. மகாவித்தியாலயத்துக்கு முன்பாக கடலை, வீரைப்பழம், பாலைப்பழம் மற்றும் முதலிப்பழம் விற்கும் ஆச்சிமார்கள்.

12.சிறிது காலம் வவுனியா மகா வித்தியாலயத்தின் மைதானத்துடன் இணைந்திருந்த 'ட்றக்டர் யூனிற்' என்னும் காணியும், அங்கு சில காலம் கட்டப்பட்டிருந்த யானையும். அந்த யானைக்கு மாணவர்களாகிய நாம் எமது இடைவேளை நேரங்களில் சென்று எமக்கு வழங்கப்படும் 'பணிஸ்' போன்ற உணவு வகைகளைக்கொடுப்பது வழக்கம்.

13. ஸ்ரீ முருகன் புத்தகசாலை.

14. பல்வேறு வகை விருட்சங்கள்: பாலை, வீரை, முதிரை, கருங்காலி, போன்ற விருட்சங்கள்.

15. மூன்று முறிப்பில் அமைந்துள்ள விமானப்படைத்தளம். ஒருமுறை அங்கு வந்திறங்கிய விமானப்படையினரின் விமானமொன்றின் அருகில் சென்று அதன் சில்லுகளையெல்லாம் மாணவர்களாகிய நாம் தொட்டுப்பார்த்திருக்கின்றோம்.

16. வைரவர் புளியங்குளம்.

17. வவுனியா முன்னாள் எம்.பி. சிவசிதம்பரத்தின் வீடு. மாலை வேளைகளில் பாடசாலையிலிருந்து ஆசிரியையான அம்மாவுடன் வீடு திரும்புகையில் , வீட்டு வாசலில் நிற்கும் திருமதி சிவசிதம்பரத்துடன் அம்மா சிறிது நேரம் நின்று உரையாடுவது ஞாபகத்திலுள்ளது.  18. எம்.பி.யின் வீட்டுக்கருகில் இராமச்சந்திரன் டீச்சரின் வீடிருந்தது. அம்மாவின் நல்லதொரு சிநேகிதியாகவுமிருந்தார். அவரிடம் மொரிஸ் மைனர் காரொன்றிருந்தது. அவரது கணவர் இராமச்சந்திரன் ஒரு வழக்கறிஞர். பல காலைகளில் பாடசாலைக்குச் செல்லும் வேளைகளில் அவர் தனது காரில் எங்களையும் அழைத்துச் சென்றிருக்கின்றார். தனது மகனை இறம்பைக்குளக் கிறிஸ்தவக் கல்லூரியில் இறக்கிவிட்டு எல்லாரையும் மகாவித்தியாலயம் அழைத்துச்செல்வார். ஒருமுறை அவரது கணவரும், அம்மாவும், அவரும் அக்காரில் பயணித்துக் கொண்டிருந்தபொழுது, மன்னார் வீதியிலிருந்த புகையிரத இருப்புப்பாதையைக்கடக்கும் சமயம் (காமினி மகாவித்தியாலயத்துக்கருகில்) விபத்துக்குள்ளாகி தப்பியிருக்கின்றார்கள். திரு.இராமச்சந்திரனுக்கு மட்டும் பலத்த உட்காயங்கள். புகைவண்டி காரை இழுத்துத் தலைகீழாக எறிந்து விட்டது.

18. வவுனியா நகரசபையும் அதன் மைதானமும்.

19. தங்கராசா டீச்சர் வீடும் மாமரங்கள் நிறைந்திருந்த காணியும். மாணவர்களாகிய நாம் வீடு திரும்புகையில் மாங்காய் பிடுங்கும் வீடுகளிலொன்று.

20. மன்னார் வீதியும், குருமண்காடும் சந்திக்கும் பகுதியில் அமைந்திருந்த முஸ்லீம் மக்களுக்குச் சொந்தமான சிறிய மயானம். இரவுகளில் இங்கிருந்து நரிகள் குழுவாக ஊளையிடுவதைக்கேட்கலாம். பல தடவைகள் நாலைந்து நரிகள் குழுவாக ஓடி மறைவதைப்பார்த்திருக்கின்றேன்.

21. வவுனியா மகாவித்தியாலயத்தின் மைதானத்தின் தெற்குப்புறமாகவிருந்த ஆலமரம். அதன் விழுதுகளைப்பிடித்துக்கொண்டு ஊஞ்சலாடுவது எமது வழக்கங்களிலொன்று.

22. எம்.ஜி.ஆரின் 'எங்க வீட்டுப்பிள்ளை' ; நினைவு தெரிந்து நான் பார்த்த முதல் திரைப்படம் 'எங்க வீட்டுப் பிள்ளை'. நியூ இந்திரா திரையரங்கில் பார்த்தது. இந்தப்படத்தில் வரும் 'நான் ஆணையிட்டால்' மற்றும் 'ஆயிரத்தில் ஒருவன்' திரைப்படப்பாடல்களைக்கேட்கும்போதெல்லாம் என் நினைவுகளில் வவுனியாவில் கழிந்த என் பால்ய காலத்து நினைவுகள் சிறகடித்துப்பறக்கத்தொடங்கி விடுவது வழக்கம்.

23. குறவர்கள், குடுகுடுப்பைக்காரர்கள், பொய்க்கால் குதிரை ஆடியபடி காலைகளில் வரும் கலைஞர்கள், வீடு வீடாகத் தோசை, இடியப்பம் சுட்டுக்கொண்டு வந்து விற்கும் மூதாட்டி.

24. ஆறாம் வகுப்பில் தமிழ் படிப்பித்த யோககுமாரன் டீச்சர். அவரிடம் நளவெண்பா படித்தது பற்றி 'குருமண்காட்டு நினைவுகள்' என்னும் கட்டுரையில் ஏற்கனவே எழுதியிருக்கின்றேன்.

பால்ய காலத்து நண்பர்களின் முகநூல் சந்திப்பு மீண்டும் நெஞ்சின் ஆழத்தே புதைந்து கிடந்த அக்காலத்து வவுனியா நகரைப்பற்றிய நினைவுகளை மேலெழச்செய்து விட்டதன் விளைவு இந்தப் பதிவு. இன்னும் பலர், பல விடயங்கள் ஞாபகத்துக்கு வருகின்றன. அக்காலத்தில் நான் இருந்த தோற்றத்தையே இங்கு காண்கின்றீர்கள். அஜந்தா ஸ்டுடியோவில் எடுக்கப்பட்ட புகைப்படமொன்றிலிருந்து எடுத்தாளப்பட்டுள்ளது.

# 4. வவுனியா நகரத்திரையரங்குகள்: அன்றும் இன்றும்

அண்மையில் மகேஸ்வரன் முருகையா அவர்கள் தமது முகநூலில் வவுனியா நகரிலுள்ள திரையரங்குகளின் அன்றைய , இன்றைய நிலையினை வெளிப்படுத்தும் புகைப்படங்களைப் பதிவிட்டிருந்தார். அவை எனக்கு என் பால்ய காலத்து நினைவுகளைச் சிறகடிக்க வைத்து விட்டன. என் பதின்ம வயதுப்பருவம் யாழ் மாவட்டத்தில் கழிந்தால், என் பால்ய காலத்துப்பருவம் வன்னி மண்ணில், வவுனியா நகரில், குருமண்காட்டுப்பகுதியில் கழிந்தது. அப்பருவத்தில்தான் நான் முதன் முதலில் வாசிக்கத்தொடங்கினேன். முதன் முதலில் திரைப்படங்கள் பார்க்கத்தொடங்கினேன். அப்பருவத்தில்தான் முதன் முதலில் எழுதத்தொடங்கினேன். ஆக,என்னைப் பொறுத்தவரையில் , என் வாழ்வைப்பொறுத்தவரையில் மிக முக்கியமானதொரு காலகட்டத்தை உள்ளடக்கிய பருவம் அம்மண்ணில்தான் கழிந்தது. என் அக்காலப்பருவத்தின் அனுபவங்களை மையமாக வைத்து நாவலொன்றும் எழுதியிருக்கின்றேன். 'வன்னி மண்' என்னும் அந்நாவல் 'தாயகம் (கனடா)' சஞ்சிகையில் தொடராக வெளிவந்தது. பின்னர் தமிழகத்தில் வெளியான 'மண்ணின் குரல்' தொகுப்பிலும் இடம் பெற்றுள்ளது. மறக்க முடியாத அனுபவங்களை உள்ளடக்கிய பால்ய காலத்துப் பருவம்.

அன்றிருந்த ஸ்ரீமுருகன் திரையரங்கு இன்றில்லை. அதற்குப்பதிலாக வர்த்தக நிறுவனமொன்றுள்ளது. 'றோயல்' திரையரங்குக்கு திருமண மண்டபமாக உருமாறிக் காட்சியளிக்கின்றது. நியு இந்திரா திரையரங்கின் 2005 காலப்புகைப்படத்தைப் பார்க்க முடிகின்றது. அத்திரையரங்கும் தற்போது இல்லை என்றே கருதுகின்றேன். வசந்தி திரையரங்கின் இன்றைய காட்சியினைக் காண முடிகின்றது.

என் மனம் அக்காலகட்டத்தில் அத்திரையரங்குகளில் நான் பார்த்த திரைப்படங்களைப்பற்றிச் சிறிது நனவிடை தோய்கின்றது. நான் முதன் முதல் பார்த்த திரைப்படம் (நினைவு தெரிந்து) எம்ஜிஆரின் 'எங்க வீட்டுப் பிள்ளை'. நியூ இந்திரா டாக்கிஸில் பார்த்தது. அப்பொழுது நாங்கள் சிறுவர்களாதலால் திரையை வியாபித்து வரும் பெரிய எம்ஜிஆர்கள், நம்பியார் எல்லாம் நெஞ்சைக் கவர்ந்தன. முதல் பார்த்ததிலேயே எம்ஜிஆரைப் பிடித்துப் போனதற்குக் காரணமான திரைப்படம் எங்க வீட்டுப் பிள்ளை. அதில் வரும் 'நான் ஆணையிட்டால்' பாடலை இப்பொழுது கேட்டாலும் அன்று அத்திரைப்படத்தைப் பார்த்த ஞாபகமே உடனடியாகத் தோன்றும்.

கண்டி றோட்டும், ஸ்டேசன் றோட்டும் சந்திக்கும் சந்தியில், பொலிஸ் நிலையத்துக்கு முன்பாக, இரு புறமும் அப்பொழுது நகரில் நடக்கும் திரைப்படங்களுக்குரிய விளம்பரப்பலகைகள் வைத்திருப்பார்கள். சந்தியின் வடக்குப்புறத்தில் றோயல் திரையரங்க விளம்பரமும், தெற்குப் புறத்தில் ஸ்ரீ முருகன், நியூ இந்திரா திரையரங்குகளின் விளம்பரப்பலகைகளும் காட்சியளிக்கும். அத்திரைப்பட விளம்பரங்களுக்கு அருகில் , வவுனியா பஸ் நிலையத்துக்கு அருகில் நடை பாதை வியாபாரிகள் சிலர் தம் வியாபாரத்தைக் கவனித்துக்கொண்டிருப்பார்கள். ஃபிலிம் றோல்களை வெட்டி துண்டுகளாக்கி விற்பனை செய்யும் நடைபாதை வியாபாரிகளும் அவர்களில் அடங்குவர்.

நியூ இந்திராவில் பார்த்த திரைப்படங்களில் இன்னும் நினைவிலுள்ளவை: சித்ராங்கி, துலாபாரம் (தமிழ் & மலையாளம்), மாதர் குலத்து மாணிக்கம், . Ten Commandments
ஸ்ரீமுருகன் திரையரங்கில் பார்த்த திரைப்படங்களில் இன்னும் நினைவிலுள்ளவை: ஆயிரத்தில் ஒருவன், பாமா விஜயம், நாணல், கலங்கரை விளக்கம், திருவிளையாடல், Barabas, Benhur, You only live twice, மோட்டார் சுந்தரம் பிள்ளை. ஆயிரத்தில் ஒருவன்,

கலங்கரை விளக்கம் இரு திரைப்படங்களும் எனக்கு மிகவும் பிடித்தவை. அப்படப்பாடல்கள் அனைத்துமே இனிய பாடல்கள். திரையரங்குக்கு முன்பாக ஆச்சிமார்கள் சிலர் கடலை விற்றுக் கொண்டிருப்பார்கள். ஞாபகமிருக்கின்றது.

றோயல் திரையரங்கில் பார்த்தவை: காவல்காரன், பவானி, சபாஷ் தம்பி, பெண்ணே நீ வாழ்க, & விவசாயி. வவுனியாக் குளத்தின் அண்மையில் இறம்பைக்குளப்பகுதியில் அமைந்திருந்த றோயல் தியேட்டர் அருகே கள்ளுத்தவறணையொன்று இருந்ததாக நினைவு. அதனருகில் கள்ளுடன் தொட்டுச் சாப்பிடுவதற்காக இறைச்சித் துண்டுகளை வதக்கி ஒருவர் விற்றுக் கொண்டிருந்ததாகவும் ஒரு நினைவு.

மானுடரின் பால்ய காலம் அவர்தம் வாழ்வில் பிரதானமானதொரு பங்கினை வகிக்கின்றது. என்றுமே அழியாத கோலங்களாக இறுதிவரையில் இருந்து விடும் பருவமது.

வசந்தி திரையரங்கு நாங்கள் வவுனியாவை விட்டு மீண்டும் யாழ் மாவட்டத்துக்குத் திரும்புகையில் கட்டப்பட்டிருந்த திரையரங்கு. யாழ் ராஜா திரையரங்கு உரிமையாளருக்குச் சொந்தமானது. அதில் பார்த்த திரைப்படங்கள் எதுவும் ஞாபகத்திலில்லை.

# 5. மறக்கமுடியாத 'பட்டாணிச்சுப் புளியங்குளம்!'



நேற்றிரவு சிறிது நேரம் கூகுள் 'வீதிக் காட்சியி'னூடு என் பால்ய காலம் கழிந்த வவுனியா நகரைப்பார்த்துக்கொண்டிருந்தபோது என் கண்களில் பட்டது இந்தக் குளம். வவுனியா நகரிலுள்ள குளங்களில் இதுவுமொன்று. மன்னார் வீதியும், குருமண்காடு பகுதியும் சந்திக்கும் பகுதியில் அமைந்துள்ள குளம் இது. இதுதான் பட்டாணிச்சுப்புளியங்குளம். என் வாழ்க்கையில் மறக்க முடியாத குளம் இது. நாங்கள் குருமண்காட்டுப்பகுதியில் வசித்த காலம் அப்பகுதி வனப்பிரதேசமாக ஒற்றையடிப்பாதையுடன் மட்டுமே காணப்பட்ட பிரதேசம். இயற்கை வனப்புடன் விளங்கிய பகுதி. வானரங்களும், பல்வகைப்பறவையினங்களும், உயிரினங்களும், விருட்சங்களும் நிறைந்திருந்த பகுதி. என்னுடைய வன்னி மண் நாவலில் என் பால்ய காலத்து அனுபவங்களைப் பதிவு செய்திருக்கின்றேன்.

இந்தக் குளத்தில்தான் நான் முதன் முதலில் நீந்தப் பழகினேன். தாமரைகளும், பல்வகை மீனினங்களும் புள்ளினங்களும் நிறைந்துள்ள குளம். விண்ணில் கோடிழுக்கும் நீர்க்காகங்கள் அவ்வப்போது இறங்கித் தங்கிக் களிக்கும் குளங்களிலொன்று இக்குளம்.

இங்குள்ள புகைப்படத்தில் காணப்படும் குளப்பகுதி மாரிகளில் குளம் நிறைந்து வழியும் நீரை வெளிப்படுத்த அமைக்கப்பட்டுள்ள பகுதி. அவ்விதம் நீர் வழிவதை வான் பாயுதல் என்பர். அவ்விதம் வான் பாய்கையில் ஏற்படும் நீரொலி , இரவுகளில் படுக்கையில் சாய்ந்திருக்கும் தருணங்களில், இரவின் அமைதியையும் கிழித்துக்கொண்டு வந்து காதினுள் புகுகையில் நாம் அடையும் இன்பத்துக்கு நிகரேது.

குளத்தின் இப்பகுதியினூடு வழியும் நீரோடு அடித்துச் செல்லப்படும் விரால் மீன்களைப் பிடிப்பதற்காக வெங்கணாந்திப்பாம்புகள் காத்திருக்கும். அச்சமயத்தில் அங்கு சென்று விரால் பிடிப்பார்கள் அப்பகுதி மக்கள்.

இக்குளத்தைப் பற்றி எண்ணியதும் என் வாழ்வில் மறக்க முடியாத சம்பவமொன்று நினைவுக்கு வருவதை என்னால் தடுக்க முடிவதில்லை. அது பற்றிப் பின்னர் கூறுவேன்.

## 6. மறக்க முடியாத ஆரம்பப்பள்ளி ஆசிரியர்கள் சிலர்..

என் பால்ய காலம் வவுனியாவில் கழிந்தது. ஏழாம் வகுப்பு வரை வவுனியா மகாவித்தியாலயத்திலேயே என் ஆரம்பக் கல்வியைக் கற்றேன். அதன் பிறகு யாழ் இந்துக்கல்லூரியில் கல்வியைத் தொடர்ந்தேன்.

என் ஆரம்பப்பள்ளிக்காலகட்டத்தில் எனக்குக் கற்பித்த ஆசிரியர்கள் சிலர் இன்னும் ஞாபத்திலிருக்கின்றார்கள். அரிவரியில் என் ஆசிரியையாக இருந்தவர் செல்வி சிவசம்பு டீச்சர். சிவசம்பு டீச்சர் என்று அழைக்கப்பட்டவர். முதலாம் வகுப்பும் அவராகத்தானிருக்க வேண்டும். இரண்டாம் வகுப்பில் வகுப்பு ஆசிரியையாக இருந்தவர் திருமதி குணரத்தினம் டீச்சர். கதிரேசன் வீதியில் வாழ்ந்தவர் இவர். ஏனைய ஆசிரியர்களில் இன்னும் ஞாபகத்திலிருப்பவர்கள்: யோககுமாரன் டீச்சர், சுப்பிரமணியம் மாஸ்ட்டர், ராசையா டீச்சர், ஆறுமுகம் டீச்சர், ஆறுமுகம் மாஸ்ட்டர், சங்கீத வாத்தியார் பொன் நடராஜா, சண்முகானந்த மாஸ்ட்டர். எனது அம்மாவும் பூமி சாத்திரம், ஆங்கிலம் ஆகிய பாடங்கள் எடுத்திருக்கின்றார்.

ஆறுமுகம் மாஸ்ட்டரிடம் நெசவு படித்திருக்கின்றோம். அவரது மனைவியான ஆறுமுகம் டீச்சரிடம் படிக்கும்போது அவரிடம் கைப்பணி படித்தது ஞாபகத்துக்கு வருகின்றது. அவர் தென்னம் மட்டையிலிருந்து எப்படி கயிறு செய்வது என்பதைக் கூறித்தந்ததோடு மாணவர்கள் அனைவரையும் அவ்விதம் கயிறு செய்து வரும்படியும் கூறியிருந்தார். மட்டையைத் தண்ணீரில் ஊற வைத்துத் தும்பைப்பிரித்து எடுத்துக் கயிறாகத்திரித்து பாடசாலைக்கு எடுத்துச் சென்றது ஞாபகத்தில் படம் விரிக்கின்றது.

ஆறுமுகம் டீச்சரை எண்ணியதும் ஞாபகத்தில் வரும் இன்னுமொரு விடயம்... அவருக்கு அக்காலத்தில் பிறந்த குழந்தையொன்று இறந்த விடயம்தான். அவருக்கு ஏற்கனவே இரு பிள்ளைகள். அவர்களின் பாதுகாப்பில் குழந்தையை விட்டு விட்டுப் பாடசாலைக்கு வந்திருந்த வேளையில் அந்தக் குழந்தை தவறித் தண்ணீரில் விழுந்து இறந்ததாகக் கூறிக்கொண்டார்கள்.

சங்கீத வாத்தியார் பொன் நடராஜா என்றால் நினைவுக்கு வருவது அவரது சிரித்த முகமும் சந்தனப்பொட்டும்தாம். சங்கீதத்தை இயலுமானவரையில் எமக்குக் கற்றுத்தர அவரும் தன்னால் முடிந்த வரையில் முயன்று பார்த்தார். எம்முடன் படித்த மாணவியொருத்தி தவிர வேறு யாரும் எம் வகுப்பில் இனிமையாகப்பாடியதாக ஞாபகமில்லை. இவர் 1977இல் நடைபெற்ற இனக்கலவரத்தில் அநுராதபுரப்புகையிரத நிலையத்தில் காடையர்களின் தாக்குதலில் பலியாகியது மிகவும் துயரகரமானது.

சண்முகானந்த மாஸ்ட்டர் சிறிது குள்ளமானவர். மிகவும் சாந்தமான முகம் வாய்க்கப்பெற்றவர். அவரைப்பார்த்தால் யாருமே அமைதியாகிவிடுவார்கள். அவ்வளவுக்கு அவரது முகத்தில் சாந்தம் நிலவிக்கொண்டிருக்கும். அவர்தான் அப்பொழுது புதிதாகக் கட்டப்பட்டிருந்த விஞ்ஞான கூடத்துக்குப் பொறுப்பாகவிருந்தார். அக்கூடத்தில் சாடிகளில் 'ஃபோர்மல்டிகைட'டில் பதப்படுத்தப்பட்டு வைக்கப்பட்டிருந்த பல்வகை உயிரினங்களைப் பார்ப்பது எமக்கு விருப்பமானதொரு விடயம். அவ்விதமான உயிர்களில் பிறந்த இறந்த சிறு குழந்தையுமிருந்தது ஞாபகத்திலிருக்கிறது.

யோககுமாரன் டீச்சர் என்றால் ஞாபகத்து வருவது அவரிடம் விரும்பிப் படித்த 'நளவெண்பா'வும் , சோமசுந்தரப்புலவரின் 'இலவு காத்த கிளி'யும்தாம். இவரைப்பற்றி ஏற்கனவே பல தடவைகள் எழுதியிருக்கின்றேன்.

எனது ஏழாம் வகுப்பில் சுப்பிரமணியம் மாஸ்ட்டர்தான் தமிழாசிரியராக இருந்தார். அச்சமயம் மட்டக்களப்பு புனித மைக்கல் கல்லூரியில் நடைபெற்ற அகில இலங்கைத்தமிழ்த் தின விழாக்கட்டுரைப்போட்டியில் கலந்து கொண்டபோது அப்பாவும், இவரும் என்னுடன் கூட வந்திருந்தார்கள். அக்கட்டுரைப்போட்டியில் முதற் பரிசு பெற்றபோது எனக்குப்பெரியதொரு கேடயமும், புத்தகங்கள் சிலவும் தந்திருந்தார்கள். கேடயத்தை வழங்கியவராக அதன் பின்னால் பொறிக்கப்பட்டிருந்த பெயர் பொத்துவில் கனகரத்தினம். எனக்குப் பரிசாக வழங்கப்பட்ட புத்தகங்களில் வி.சீ.கந்தையாவின் 'மட்டக்களப்புத்தமிழகம்', ' பேராசிரியர் கார்த்திகேசு சிவத்தம்பியின் 'ஈழத்துத் தமிழ்ச்சிறுகதைகளின் தோற்றமும், வளர்ச்சியும்', 'மட்டக்களப்பின் வடமோடி, தென்மோடி நாடகங்கள் பற்றிய நூலொன்றும் ஞாபகத்திலுள்ளன. இவற்றுடன் மேலும் சில நூல்கள்

இராசையா டீச்சரென்றால் ஞாபகத்துக்கு வருவது : அப்பொழுது ஏழாம் வகுப்பில் படித்துக்கொண்டிருந்தேன். இவர் மாணவர்களுக்காக இலக்கிய அமைப்பொன்றை உருவாக்கியிருந்தார். அதன் தலைவராக இருந்திருக்கின்றேன். வாரத்தில் ஒரு நாளில் அல்லது மாதத்தில் ஒரு நாளில் (சரியாக ஞாபகமில்லை) பாடசாலை முடிந்ததும் எம் வகுப்பில் கூடுவோம். மாணவர்களில் பாட்டுத்திறமையுள்ளவர்கள் பாடுவார்கள். அந்நிகழ்வொன்றில் மாணவியொருத்தி 'காகித ஓடம் கடலலை மீது' பாடியதும் ஞாபகத்திலுள்ளது. மேலும் பல விடயங்களைப்பற்றி உரையாற்றுவார்கள். இறுதியில் நான் அவை பற்றி என் விமர்சனத்தை வைப்பேன். இந்த அமைப்பு நீண்ட காலமாக நடந்ததாக ஞாபகமில்லை. இருந்தாலும் இந்த அமைப்பு இயங்கியதும், அதற்கு நான் தலைவராக இருந்ததும் இன்னும் ஞாபகத்திலுள்ளன.

# 7. மறக்க முடியாத 'யார் நீ'

இந்தப்படம் வவுனியா ஸ்ரீமுருகனில் வெளியானபோது நான் வவுனியா மகாவித்தியாலயத்தில் மூன்றாம் வகுப்பு மாணவன். மன்னார் றோட்டும், ஸ்டேசன் றோட்டும் சந்திக்குமிடத்திலிருந்த பலசரக்குக் கடையில் ,பெயர் மறந்துவிட்டது, பொருட்களை வாங்கி, 'குவார்ட்டர்ஸ்' (அரசினால் கட்டிக் கொடுக்கப்பட்டிருந்த வீடுகளை உள்ளடக்கிய வீடமைப்புத் திட்டமென்று நினைக்கின்றேன்) நாங்கள் வசித்து வந்த குருமண்காட்டுப் பகுதியை நோக்கித் திரும்புகையில் , 'குவார்ட்டர்ஸ்'ஸின் வடக்குப் பகுதியிலிருந்த வீதியினைக் கடக்கையில் பலர் அங்கு நின்றிருந்தார்கள். அனைவரின் பார்வையும் புகையிரதப்பாதை இருந்த பக்கத்தை நோக்கியிருந்தது.

அருகிலிருந்தவர்கள் கதைத்துக்கொண்டதிலிருந்து நாங்கள் அறிந்து கொண்டது ஜேக்கப் என்னும் மாணவன் புகைவண்டியின் முன் குதித்துத் தற்கொலை செய்துகொண்டான் என்னும் தகவலைத்தான். நாங்களும் நின்று விடுப்புப் பார்க்கவே பெரியவர்கள் சிலர் எங்களை அங்கு நிறகவேண்டாமென்று வீட்டுக்குப் போகும்படி கூறினார்கள். நாங்களும் வீடு திரும்பினோம்.

வீடு திரும்பினாலும் எங்கள் நினைவில் ஜேக்கப் என்னும் அந்த மாணவனின் முகமே நினைவுக்கு வந்துகொண்டிருந்தது. இன்றுவரை அந்த முகம் நினைவிலுள்ளது. ஜேக்கப் என்னும் மாணவன் எங்களைவிடப் பல வருடங்கள் வயதில் மூத்தவர். அவ்வப்போது வீதிகளில் கண்டிருக்கிறேன். அவரும் அந்தக் குவார்ட்டர்ஸ் பகுதியிலேயே வசித்து வந்தார். அவரது தற்கொலையின் பின் ஊரவர்கள் கதைத்துக்கொண்டவற்றிலிருந்து நாம் திரட்டிய தகவல்கள் வருமாறு:

!. அவர் வீட்டுக்கு அருகிலிருந்து 'போக்'கினுள் புகையிரதம் வரும் வரையில் ஒளிந்திருக்கின்றார். ஆனால் அவரைத் தேடிச் சென்றவர்கள் தொலைவு வரை சென்று தேடினார்கள், ஆனால் அந்த 'போக்'கை மட்டும் தேடவில்லையாம்.

2. ஜேக்கப் அன்று யார் நீ படம் பார்த்து விட்டு வந்துதான் புகையிரதத்தின் முன் தண்டவாளத்தில் தலைவைத்துத் தன்னுயிரைப் போக்கிக்கொண்டாராம். யார் நீ ஒரு பேய் பற்றிய படமாம். அதிலிருந்து யார் நீ என்னும் படம் எங்கள் உள்ளங்களில் திகிலை ஏற்படுத்தும் , ஜேக்கப்பின் மரணத்துக்குக் காரணமான படமாக நிலைத்து நின்று விட்டது.

யு டியூப்பில் இந்த 'யார் நீ' பாடலைக் கேட்டபோது இந்த நினைவுகள் ஆழ்மனப்புற்றிலிருந்து நினைவுச் சர்ப்பங்களாக எழுந்து படம் விரித்தாடின. அக்காலகட்டத்தில்தான் ஜெய்சங்கரும், ஜெயலலிதாவும் திரையுலகுக்கு அறிமுகமாகியிருந்தார்கள். இருவருமே மிகுந்த எழிலுடன் விளங்கிய காலகட்டம். மெல்லிய . அழகான ஜெய்சங்கர் இளம் பெண்களிம் கனவுக் காளையாகத் திகழ்ந்த காலகட்டம். தென்னக ஜேம்ஸ் பாண்ட்டாகக் கலக்கிய காலகட்டம். அவர் மட்டும் தன் உடலைக் கட்டுக்கோப்பாக வைத்திருந்தாரென்றால் நீண்ட காலத்துக்குத் திரையுலகில் கதாநாயகனாகவே நிலைத்திருப்பார். அக்காலகட்டத்தில் வெளியான ஜெய்சங்கரின் படங்கள் எமக்குப் பிடித்திருந்தன. பஞ்சவர்ணக்கிளி, குழந்தையும் தெய்வமும், சபாஷ் தம்பி, பஞ்சவர்ணக்கிளி, பட்டணத்தில் பூத,ம், பெண்ணே நீ வாழ்க... என்று அவரது பல திரைப்படங்கள் எம்மைக் கவர்ந்திருந்தன.

முகநூலிலிருக்கும் சிவானந்தன் முத்துலிங்கம் , எமக்குப் பல வருடங்கள் வயதில் மூத்தவர், அப்போது மகா வித்தியாலயத்தில் மாணவராகவிருந்தார். ஒருவேளை

அவருக்கு ஜேக்கப்  என்னும் மாணவன் பற்றிய மேலதிகத்தகவல்கள் தெரிந்திருக்கக் கூடும்.

மன்னார் வீதியில், காமினி சிங்கள மகாவித்தியாலயத்துக்கருகிலிருந்த புகையிரப் பாதையில் எனக்குத் தெரிந்து மூன்று பேர் தம் உயிரைப் போக்கியிருக்கின்றார்கள். அதிலிருந்த புகையிரதக் கடவையும் 'சிக்னல்' அற்ற நிலையில் பாதுகாப்பற்றதாகவிருந்தது.

யார் நீ பாடலொன்று - 'என் வேதனையில் உன் கண்ணிரண்டும் என்னோடு அழுவதேன் கண்ணா?'.  கவிஞர் கண்ணதாசனின் வரிகளில், வேதாவின் இசையில், பி.சுசீலாவின் குரலில், ஜெய்சங்கர் & ஜெயலலிதாவின் நடிப்பில் ஒலிக்கும் காலத்தால் அழியாத கானம்.

## 8. பாம்புகள் மலிந்த வவுனியா..

'பாம்பைக் கண்டால் படையும் நடுங்கும்' என்போம். பாம்புகள் நடமாடும் வனப்பிரதேசங்களில் பலர் பாம்புக்கடியினால் பாதிப்புறுவது வழக்கம். என் பால்ய பருவம் வனம் மலிந்த வவுனியாவின் குருமண்காட்டுப் பகுதியில் கழிந்தது. ஒரு காலகத்தில் இன்றைய நகரான வவுனியா வனம் மலிந்த இயற்கையின் தாலாட்டில் தூங்குமொரு நகராகத்தானிருந்தது.

அக்காலகட்டத்தில் பல்வகைப் பாம்புகளையும் எதிர்கொண்டிருக்கின்றேன்; அறிந்திருக்கின்றேன். பச்சைப்பாம்பு, நீர்ப்பாம்பு, பல்வகைப்புடையன்கள், வெங்கணாந்திப்பாம்பு மற்றும் பல்வகை மலைப்பாம்புகள் எனப் பல்வகைப்பாம்புகளையும் பார்த்திருக்கின்றேன்.

ஒரு தடவை ஆடொன்றை விழுங்கிய நிலையிலிருந்த மலைப்பாம்பொன்றைப் பிடித்து , ஆட்டின் ஊரவர்கள் வவுனியா பொலிஸ் நிலையத்துக்குக் கொண்டு வந்தார்கள். பாடசாலையிலிருந்து வீடு திரும்பிக்கொண்டிருந்த மாணவர்களாகிய நாங்களும் மலைப்பாம்பைப் பெரிய பெட்டியொன்றில் போட்டுக் கொண்டு வந்திருந்தவர்களைப் பின் தொடர்ந்து சென்று ஆட்டை விழுங்கிய நிலையிலிருந்த மலைப்பாம்பினைப் பார்த்தோம்.

பட்டாணிச்சுப் புளியங்குளம் ஊரவர்கள் நீராடுமொரு குளமாகப்பிரசித்தி பெற்றிருந்தது. வார இறுதி நாட்களில் அங்கு சென்று நீராடுவோம். ஒரு புறத்தில் நீர்ப்பாம்புகளும் தம் பாட்டில் ஓடித்திரியும். இன்னொரு புறத்தில் நாமும் நீந்திப்பழகுவோம். அங்குதான் நான் நீந்திப்பழகினேன். இரு தடவைகள் மூழ்கிக் காப்பாற்றப்பட்டுமுள்ளேன். ஒரு முறை சிறுவனான நான் அப்பா குளத்தில் நீராடுவதைக் குளக்கட்டிலிருந்து பார்த்துக்கொண்டிருந்தபோது தவறி விழுந்து விட்டேன். தண்ணீரில் மூழ்கி நன்றாக நீரைக் குடித்து விட்டேன். அப்பா சுழியோடி ஆழத்தை நோக்கிச் சென்றுகொண்டிருந்தவனைத் தூக்கிக் காப்பாற்றினார்.

இன்னுமொரு சமயம் கட்டையைப்பிடித்து நீந்தப்பழகிக்கொண்டிருந்தவன் பிடி நழுவி நடுக்குளத்தில் மூழ்கி விட்டேன். என்னுடன் கட்டையைப்பிடித்து நீந்திக்கொண்டிருந்த அயலவரான சிங்கள இளைஞன் என்னைக்காப்பாற்ற வந்து என்னுடன் சேர்ந்து மூழ்கிக்கொண்டிருந்தான். எங்களிருவரையும் கரையில் 'சோப்' போட்டுக்கொண்டிருந்த அவ்விளைஞன் வசித்த வீட்டுக்கார 'பாஸ்' நீந்திவந்து காப்பாற்றினார். ஆனால் பின்னாளில் போர்ச்சூழல் அவரையும், குடும்பத்தவரையும் பலிவாங்கி விட்டது சோகமானது. இதனை மையமாக வைத்து நாவலொன்றையும் (வன்னி மண்), குறுநாவலொன்றையும் (சுமணதாஸ பாஸ்) எழுதியுள்ளேன். முதலாவது தாயகம்(கனடா) சஞ்சிகையிலும், பின்னது ஞானம் சஞ்சிகையிலும் வெளியானது.

# 9. அரை நூற்றாண்டு இரகசியம்!



அண்மையில் முகநூலில் அம்மா பற்றிய என் நனவிடை தோய்தலைப் பகிர்ந்திருந்தேன். அதற்கு எதிர்வினையாற்றிய நண்பர் வவுனியா விக்கி (எழுத்தாளர் ஸ்ரீராம் விக்னேஷ், தமிழகம்) பின்வருமாறு எழுதியிருந்தார்:

"'கனேடியன் கான்ட் பேக்' கையில் ஏந்தியபடி, எங்களுக்கு 'புவியியல்' வகுப்பு எடுக்கும்போது, 'மா....ரி.......... மழையும், கோ.......டை......... அனலும்......' என்ற வார்த்தையை அபிநயமாக உச்சரித்துக்காட்டி, மனதிலே பதியவைத்தவர். மாலை பள்ளிக்கூடம் விட்டதும், பஸ்ஸை எதிர்பாராமல், நடந்துபோகும் சூழ்நிலை வந்தால், குருமண் காடு சந்திவரையில் நான் கிரியோடுதான் நடந்து செல்வேன். சிலவேளைகளில் எங்கள் குரூப் அதிகமானால் (கிரியின் அக்கா, கிரியின் தம்பி, மற்றும் வரதன் என்ற சக மாணவர், அவரது தம்பி) என ஒரு பட்டாளமே நடந்து செல்லும். சத்தமும் சிரிப்பும் தெருவில் போவோரை முறைத்துப் பார்க்கச் செய்யும். ஆனால், எப்போதாவது கிரியின் அம்மாவும் (எங்களின் ஆசிரியை) கூட நடந்துவரும் சூழ் நிலை வந்தால், 'இந்தப் பூனையா பால் குடிக்கும்....' எனப் பார்ப்பவர் எண்ணும்படி அமைதியாகப் போவோம். மேலும், என் வாழ்நாளில் அடிவாங்காமல் பாடம் கற்றுக்கொண்ட ஆசிரியை என்றால், அது நவரத்தினம் டீச்சர் மட்டுமே. (ஆசிரியர்களில் பொன். நடராசா சங்கீத ஆசிரியர் மட்டும்.) இதிலே வேடிக்கையென்னவென்றால், இந்த இரு ஆசான்களும் 'அமரர்'களாகி விட்டபோதிலும், இவர்களின் மைந்தர்கள் கிரிதரன், சண்முகராஜா ஆகியோரின் இனிய நட்பு,. அன்று 3ம் வகுப்பிலிருந்து - இன்று முகநூல் நடப்புவரை தொடுகிறது........ தொடர்கிறது..... சாந்திபெற்ற ஆத்மாக்கள் இரண்டும் எங்களை வாழ்த்துகின்றன..."

இதற்கு நான் பின்வருமாறு பதிலளித்திருந்தேன்:

"விக்கி , இருப்பு நினைவுகளின் தொகுப்பே. காலம் நில்லாமல் சென்றுகொண்டேயிருக்கின்றது. ஒவ்வொரு கணமும் கடந்து சென்று கொண்டேயிருக்கின்றது. அடுத்த கணமே அதுவும் கடந்தகாலமாகி நினைவாகி விடுகின்றது. இவ்வகையில் இருப்பு என்பதும் நினைவுகளின் தொகுப்பே. நினைவுகளை இரை மீட்டலில்தான் வாழ்வே இயங்கிக்கொண்டிருக்கின்றது. ஆனால் அவை அழிவதில்லை. ஆழ்மனத்தில் அழியாமல் பதிந்துகிடக்கின்றன. பாடசாலை முடிந்து ஆடிப்பாடி, ஸ்டேசன் றோட் வழியாக நடந்து வீடு திரும்பியதும் நினைவில் விரிகின்றது. வீடு திரும்புகையில் மாங்காய்கள் பறித்துத் தின்பதும் நினைவிலெழுகின்றது."

இதற்குப் பதிலளித்த விக்கி 'அரை நூற்றாண்டு இரகசிய'மொன்றினைப் போட்டுடைத்திருந்தார். அது:

"கிரி...! மாங்காய் சமாச்சாரம் ஒரு தனிக்கதை.... உள்வட்ட வீதியிலும், லேபர் ஒபிஸ் வளவிலும் மாங்காய் திருடி, நடுத் தெருவிலே உட்கார்ந்து உடைத்து தின்றது வரையில்தான் உமக்குத் தெரியும்..... நினைவிலும் இருக்கும்..... ஆனால், உம்மிடம் நான் சொல்லாத ஒரு சமாச்சாரம் உண்டு கிரி.... இந்த சமாச்சாரத்தை நேரிலே பார்த்த ஒரு 'குடிகாரப் பாவி' (என் அப்பனின் நண்பர்) ஒன்றாக சங்கமித்து தண்ணி போடும்போது, போட்டுக் கொடுத்துவிட்டார். இதுக்காகவே மினக்கெட்டு 'மப்பை' ஏத்திக்கொண்டு வந்த எங்கப்பன், என்னைப்போட்டு மிதி,மிதி என மிதித்து எடுத்துவிட்டார். யாருக்குமே சொல்லாதிருந்த இந்த சமாச்சாரம் அரை நூற்றாண்டு கழித்து, இன்று தெரிவிக்கின்றேன்." இது எப்படி இருக்கு?

# 10. வன்னி நினைவுகள்: சந்தேகம் மிக்க ஆட்காட்டிப் பறவைகள்...

வவுனியா இயற்கை வளங்கள் மலிந்த பிரதேசம். குளங்கள், பல்வேறு பட்சியினங்கள், மிருகங்கள், பரந்திருக்கும் கானகப்பிரதேசங்கள் என்று நெஞ்சை அள்ளும் மண் வன்னி மண். ஆலா, ஆட்காட்டி, கொண்டை விரிச்சான், குக்குறுபான், பருந்து, கொக்கு, நாரை, மீன் கொத்தி, மரங்கொத்தி, மாம்பழத்தி, தேன் சிட்டுக்குருவி, பருந்து, தவிட்டுக்குருவி, பச்சைக்கிளி , ஊருலாத்தி என்று புள்ளினங்கள் மலிந்த பூமி. அஞ்ச வைக்கும் அரவங்களில்தான் எத்தனை இனங்கள்! வெங்கணாந்திப்பாம்பு (மலைப்பாம்பினம்), நாகபாம்பு, கண்ணாடி விரியன் என்று பல்வேறு பிரிவுகள். வானரங்கள், மர அணில்கள் மலிந்த பூமி.

மன்னார் வீதியில் குருமண்காட்டுப் பிரதேசமும், பட்டாணிச்சுப்புளியங்குளமும் இருந்தன. இன்று குருமண்காட்டுப் பிரதேசம் அபிவிருத்தி அடைந்த பகுதி. அன்று, நாங்கள் அங்கு வசித்த காலகட்டத்தில் ஒற்றையடிப் பாதையுடன் , குறிப்பிடத்தக்க குடும்பங்களையும் உள்ளடக்கிய பகுதி. மன்னார் வீதியும், குருமண்காட்டுப் பகுதியும் சந்திக்குமிடத்தில் இஸ்லாமியர்களுக்குச் சொந்தமான மயானமொன்றுமிருந்தது. நள்ளிரவுகளில் அங்கு நரிகள் கூட்டம் கூட்டமாக நின்று ஊளையிடுவதைக் கேட்கலாம்.

மாரிகாலங்களில் பட்டாணிச்சுப் புளியங்குளம் நிறைந்து வான் பாயும். (குளம் நிறைந்தால் மேலதிக நீர் வெளியேறும் வசதியுள்ள குளம். அவ்விதம் நீர் வெளியேறுவதை வான் பாயுது என்பர். இரவு நேரங்களில் கவிந்திருக்கும் அமைதியைக் கலைத்தபடி வான் பாயும் ஓசையினைக் கேட்டபடி படுத்திருப்பதில் உள்ள சுகம் வார்த்தைகளால் விபரிக்க முடியாதது. அச்சமயங்களில் அவ்விதம் வெளியேறும் நீருடன் சேர்ந்து வெளியேறும் விரால் மீன்களைப் பிடித்துண்ணுவதற்காக மலைப்பாம்பினத்தைச் சேர்ந்த வெங்கணாந்திப் பாம்புகள் காத்திருக்கும்.

"உழவர் ஓதை, மதகோதை,
உடைநீர் ஓதை தண்பதங் கொள்
விழவர் ஓதை, சிறந்தார்ப்ப
நடந்தாய் வாழி காவிரி!"

என்னும் சிலப்பதிகாரக் கானல் வரிப்பாடலின் வரிகளில் வரும் மதகோதை எப்பொழுதும் எனக்கு மாரிகளில் நீர் மூட்டி, வான் பாயும் பட்டாணிச்சுப் புளியங்குளத்தையே நினைவு படுத்தும்; அன்று மட்டுமல்ல எப்பொழுதும்தான்.

ஆட்காட்டிப் பறவைகளைப் பற்றிக் கதைகள் பல உண்டு. ஆட்கள் வருவதை மிருகங்களுக்குக் காட்டிக்கொடுத்து , அவற்றைத் தப்பச்செய்வதால் அப்பட்சிகளுக்கு 'ஆட்காட்டி' என்று பெயர் வந்ததாகக் கூறுவார்கள். ஆட்காட்டிப் பறவை பற்றி இன்னுமொரு சுவாரசியமான கதையுமுண்டு. இந்தப் பறவைகள் மரங்களில் படுப்பதில்லையாம். காரணம்: தங்கள் பாரத்தால் கொப்புகள் உடைந்து விட்டால் என்ற சந்தேகமாம். இந்த வகைப் பறவைகள் தரையில் படுக்கும்போதும் மல்லாந்து கால்களை மேலே நீட்டியவாறே தூங்கும் தன்மை மிக்கனவாம். காரணம்: தப்பித்தவறி நித்திரையாயிருக்கும்போது ஆகாயம் கீழே விழுந்து விட்டால் தாங்கிப் பிடிக்கத்தானாம். இந்தக் கதையில் எவ்வளவு உண்மை உண்டோ நான் ஆராய்ந்ததில்லை. ஆனால் இவ்விதமானதொரு கதை ஆட்காட்டி பற்றி வழக்கிலிருந்தது என்பதை வெளிப்படுத்தத்தான் இந்தப் பதிவு இங்கே.

## 11. மங்கையர்க்கரசி அமிர்தலிங்கத்திடம் பெற்ற 'ஓட்டோகிராப்'



ஓடையிலே என் சாம்பர் கரையும் போதும்
ஒண்தமிழே சலசலத்து ஓய வேண்டும்.

இந்த வரிகளைப் பார்த்ததும் என் மனதிலொரு காட்சி விரியும். சிறுவனான என்னைக் கைப்பிடித்து அப்பா வவுனியா நகரசபை மைதானத்துக்குக் கூட்டிச்செல்கின்ற காட்சிதான் அது. வவுனியா வேட்பாளராகப்போட்டியிட்ட செல்லத்தம்புவை ஆதரித்து நடைபெற்ற தமிழரசுக்கட்சியினரின் கூட்டம். என் வாழ்க்கையில் முதல் முறையாக அரசியல் கூட்டமொன்றுக்குச் செல்வது அதுதான் முதல் முறை.

அப்பொழுதே குடுகுடு கிழவராகக் காட்சியளித்த தந்தை செல்வாவைத் தாங்கிப்பிடித்தபடி அருகில் 'தானைத்தலைவர்' அமிர்தலிங்கம் காட்சியளித்தார். திருமதி அமிர்தலிங்கத்தின் தமிழ் வாழ்த்துப்பாடலுடன் கூட்டம் ஆரம்பமாகியது. அக்கூட்டத்தில் பங்குபற்றி அன்று என்னைக் கவர்ந்த இன்னுமொருவர் ஆலாலசுந்தரம். அவரது கிண்டலும் , சுவையும் மிக்க உரை கேட்டவுடனேயே அனைவரையும் கவர்ந்துவிடும் தன்மை மிக்கது.

அந்தக்கூட்டத்துடன் அக்காலத்தில் என் அபிமானத்துக்குரிய அரசியல் தலைவர்களாகத் தமிழரசுக்கட்சியினர் ஆகிவிட்டனர்.

அந்தக் கூட்டத்தின் இறுதியில் நான் என்னிடமிருந்த 'ஆட்டோகிராப்'பில் மேடையின் பின்னாலிருந்து திருமதி அமிர்தலிங்கத்திடம் கையெழுத்தினை நாடியபோது அவர் அதில் எழுதிய வரிகள்தாம் மேலுள்ள வரிகள். என்னைப்போல் மேலும் பலர் அவரிடம் கையெழுத்து வாங்கிக்கொண்டிருந்தார்கள். அக்காலத்தில் மாணவர்களாகிய நாம் 'ஆட்டோகிராப்'பில் வருடாவருடம் வகுப்பு மாறிச்செல்லும்போதெல்லாம் கையெழுத்து வாங்குவது வழக்கம். நீண்ட காலமாக என்னிடமிருந்த அந்த 'ஆட்டோகிராப்' 83ற்குப்பின் தோன்றிய அரசியற் சூழலில் தொலைந்துபோன எனது நூல்களுடன் தொலைந்து போனது.

என்னை நீண்ட காலமாக ஆட்கொண்டிருந்த கேள்வியொன்று திருமதி மங்கையர்க்கரசி எழுதிய அந்த வரிகளுக்குச்சொந்தக்காரரான கவிஞர் யார் என்பதுதான். அண்மையில்தான் அதற்கான விடை கிடைத்தது. சிலோன் விஜயேந்திரன் தொகுப்பில் வெளியான 'ஈழத்துக்கவிதைக்கனிகள்' தொகுப்பில் அந்த விடையிருந்தது, அதனை எழுதியவர் அமரர் ராஜபாரதி (மட்டக்களப்பு) அவர்கள். 'தமிழ்த்தாகம்; என்ற தலைப்பிலுள்ள அந்தக் கவிதையின் முழு வடிவமும் கீழே:

கோடையிலே எரிவெயிலிற் காயும்போது
கொப்பளிக்கும் தமிழ்வெள்ளம் தோயவேண்டும்.
வாடைதரு மூதலிலே நடுங்கும் போது
வயந்ததமிழ்க் கதிரென்னைக் காயவேண்டும்.
பாடையிலே படுத்தூரைச் சுற்றும்போதும்
பைந்தமிழில் அழுமோசை கேட்கவேண்டும்.
ஓடையிலே என்சாம்பர் கரையும் போதும்
ஒண்தமிழே சலசலத்து ஓயவேண்டும்.

மேற்படி தொகுப்பிலுள்ள க.சச்சிதானந்தனின் 'தமிழ்க்கவிப்பித்து' என்னும் கவிதையின் இறுதியும் இதனை ஒத்ததாக அமைந்திருக்கின்றது. அது கீழே:

சாவிற் தமிழ் படித்துச் சாகவேண்டும் - என்றன்
சாம்பல் தமிழ் மணந்து வேக வேண்டும்,

என்னதான் சொல்லுங்கள் மொழிவளமும், கற்பனைச்சிறப்பும் மிக்க மரபுக்கவிதைகளை வாசிப்பதில் அடையும் இன்பமே தனி. மேற்படி கவிஞர் ராஜபாரதியின் கவிதை வரிகள் ஏற்படுத்திய நனவிடை தோய்தலிது. நீங்களும்தாம் சிறிது தோயுங்களேன்.

# 12. அப்பாவின் பெயரிலெழுதிய சித்திரைப் புத்தாண்டுக் கவிதை




ஈழநாடு மாணவர் மலர் என் 'தீபாவளி தித்தித்தது' கட்டுரைக்குத் தந்த ஊக்கம் என்னை மேலும் மேலும் எழுதத்தூண்டியது. மேலும் சில கதைகளை என் பாடசாலை அப்பியாசப் புத்தகத்தில் எழுதினேன். அவற்றில் ஒன்றின் தலைப்பு மட்டும் இன்னும் நினைவிலுள்ளது. கதையின் தலைப்பு - 'மழை பெய்து ஓய்ந்தது'. கதை ஆரம்பிக்கும்போதும் , முடியும் போதும் இடம்பெற்றிருக்கும் வசனங்கள்: 'மழை பெய்து ஓய்ந்தது'. அதனை வழக்கம்போல் அப்பாவுக்குக் காட்டினேன். அவர் படித்துப்பாராட்டினார். அக்காலகட்டத்தில் எங்கள் வீட்டு அயல்வீட்டில் குடியிருந்த 'அன்ரி' ஒருவரும் அக்கதைக் 'கொப்பி'யை இரவல் வாங்கிச்சென்று வாசித்துவிட்டு வந்து பாராட்டினார்.

இதற்கிடையில் பொங்கல் திருநாளும் நெருங்கிக்கொண்டிருந்தது. அப்பொழுது அப்பா சுதந்திரன் பத்திரிகையையும் வாங்கிக்கொண்டிருந்தார்.அதில் நா.பாலேஸ்வரியின் 'எங்கே நீயோ நானும் அங்கே உன்னோடு' தொடராக வெளிவந்துகொண்டிருந்ததாக நினைவு. அவரது எழுத்து நடையும் என்னை அக்காலகட்டத்தில் மிகவும் கவர்ந்திருந்தது என்பேன். அப்பருவ நினைவுகள் அழியாத கோலங்கள் என்பவை என்பதால் அவர் பற்றிய நினைவுகளும் அவரது தொடர்கதையின் சில பக்கங்களை மட்டுமே வாசித்திருந்தபோதிலும் நினைவில் பதிந்து விட்டன.

சுதந்திரனுக்குப் பொங்கலைப்பற்றிய கவிதையொன்றினை எழுதி அனுப்பி வைத்தேன். சுதந்திரனில் சிறுவர்களுக்கான பக்கமெதுவும் ஒதுக்கப்பட்டிருக்கவில்லை. இருந்தாலும் அக்கவிதையை ஏன் ஈழநாடு மாணவர் மலருக்கு அனுப்பாமல் , சுதந்திரனுக்கு அனுப்பினேன் என்பதற்கான காரணம் இன்றுவரை புரியவில்லை. என்ன ஆச்சரியம்! சுதந்திரனின் பொங்கல் தின இதழில் என் கிறுக்கலும் வெளியாகியிருந்தது. இன்னும் அக்கவிதை வரிகள் நினைவிலுள்ளன.

"பொங்கல் பொங்கல் பொங்கலாம்.
புது வருடப் பொங்கலாம்.
எங்கும் எங்கும் சிறுவர்கள்
எலிவாணம் கொளுத்தி மகிழ்வார்கள்.
உலகைக் காக்கும் கதிரவனுக்கு
உலகைக் காக்கும் உழவர்கள்
பொங்கல் பொங்கிப் படைத்திடுவார்
பொங்கல் என்னும் திருநாளில்."

இதுதான் அக்கவிதை வரிகள். இன்னும் சுதந்திரனின் அப்பிரதியை அவ்வப்போது தேடிக்கொண்டுதானிருக்கின்றேன்.

இவ்விதமாக நாட்கள் ஓடிக்கொண்டிருக்கையில் சித்திரை வருடப்பிறப்பும் நெருங்கியது. இம்முறை மீண்டும் ஈழநாடு பத்திரிகைக்கு அனுப்ப வேண்டுமென்று நினைத்துக் கொண்டேன். அக்காலகட்டத்தில் சஞ்சிகைகள், பத்திரிகைகளில் வெளியான பண்டிகைக் காலக் கவிதைகளின் வடிவைக் கவனித்து விட்டு, அதைப்போன்றதொரு கவிதை எழுதி அப்பாவின் பெயரில் எழுதி ஈழநாடு பத்திரிகைக்கு அனுப்பி வைத்தேன். வெளிவந்தால் காட்டி அப்பாவை ஆச்சரியப்பட வைக்க வேண்டுமென்று எண்ணி அனுப்பியிருந்தேன்.

என்ன ஆச்சரியம் அக்கவிதையை ஈழநாடு அப்பாவின் பெயரில் தனது வருடப்பிறப்பிதழில் பிரசுரித்திருந்தது. அதனையே இங்கு நீங்கள் காண்கின்றீர்கள். இதில் வரும் விழவுகள் என்னும் சொல் மட்டும் ஈழநாடு தேர்வு செய்திருந்தது. ஏன் ஈழநாடு விழவுகள் என்னும் சொல்லைப்பாவித்தது என்பது புரியவில்லை. நான் அதற்குப் பதிலாகப்பாவித்திருந்த சொல் எதுவென்பதையும் மறந்து விட்டேன்.

## கவிதை: சித்திரைத் திருநாள்

**- ந.நவரத்தினம் -**

தமிழர் திருநாள் சித்திரையாம்
தரணி புகழும் பெருநாளாம்
உழவர் மகிழும் நன்னாளாம்
உலகம் மகிழும் பொன்னாளாம்

விழவுகள் பெருகும் பெருநாளாம்
வீரம் பொங்கும் மணிநாளாம்
வளங்கள் கொழிக்கும் திருநாளாம்
வாழ்வு செழிக்கும் தனிநாளாம்

புத்தாடை அணிந்து மகிழ்ந்திடுவோம்
புதுப்புதுப் படமும் பார்த்திடுவோம்
சித்தி வீட்டுக்குச் சென்றிடுவோம்

சிரித்துச் சிரித்துப் பேசிடுவோம்

மத்தாப்பு வாணம் கொளுத்திடுவோம்
மகிழ்வுடன் பாடி ஆடிடுவோம்
தித்திப்புப் பட்சணம் தின்றிடுவோம்
தினமும் புன்னகை புரிந்திடுவோம்.

சித்தி, மத்தாப்பு போன்ற சொற்களெல்லாம் தமிழகத்துச் சஞ்சிகைகளின் பாதிப்பு. இக்கவிதை வெளியானதும் அதனைக்கொண்டுபோய் அப்பாவிடம் காட்டினேன். அப்பா அதைக்கண்ட் 'ஏனிப்படி செய்தாய். இப்படி இனிச்செயாதே' என்று மென்மையாகக் கடிந்து கொண்டார். அப்பா அதைப்பார்த்து மகிழ்வாரென்று பார்த்தால் இவ்விதம் கூறுகிறாரே என்று மனம் சிறிது வாடினாலும், அவர் கூறுவதும் சரியென்றே பட்டது. அதன்பின் ஒருபோதுமே அவ்விதமான விளையாட்டில் நான் இறங்கவில்லை.

அடுத்து இன்னுமொரு கவிதை என் பெயரில் 'மழை பொழிந்தது' என்னும் தலைப்பில் எழுதி ஈழநாடு மாணவர் மலருக்கு அனுப்பினேன். அது 19-6-70 ஈழநாடு வாரமலரில் வெளியானது. வழக்கமாக ஞாயிறு வாரமலராக வெளியாகும் ஈழநாடு அம்முறை வெள்ளியன்று வாரமலராக வெளியாகியது. அக்கவிதை இதுதான்:

மழை பொழிந்தது
**- ந.கிரிதரன் -**

வானம் எங்கு மிருண்டிடவே
வண்ண மயில்க ளாடிடவே
மான்கள் துள்ளி யோடிடவே
மகிழ்ந்து குலாவிக் கொஞ்சிடவே
தேன்சுவை தேங்கும் மலரினங்கள்
சிலிர்த்துத் தலையை நிமிர்த்திடவே
வானம் மழையைப் பொழிந்ததம்மா
வையம் யாவும் மகிழ்ந்ததம்மா.

இதற்கிடையில் ஆகஸ்ட் மாதம் ,மட்டக்களப்பில் அகில இலங்கைரீதியில் தமிழ்த்தின விழா நடக்கவிருந்தது. அதையொட்டிப்பல்வேறு போட்டிகள் வவுனியா மகாவித்தியாலயத்தில் நடக்கவிருந்தன, முதலில் என்னை காமினி மகாவித்தியாலயத்தில் நடந்த சொல்வதெழுதல் (சிங்களப்பாடசாலை) போட்டிக்கே அனுப்பினார்கள். அங்கு சென்றால் என் பெயர் இல்லையென்று திருப்பி அனுப்பி விட்டார்கள். என் கையெழுத்து அவ்வளவு அழகாக இருக்காது. எதற்காக அப்போட்டிக்கு என்னை அனுப்பினார்கள் என்பது இன்னும் விளங்காத புதிர். திரும்பிய என்னை வவுனியா நகரத்துப்பாடசாலைகளுக்கிடையில் நடைபெறவிருந்த கட்டுரைப்போட்டியில் பங்குபற்ற அனுமதித்தார்கள். எவ்விதத்தயாரிப்புகளுமில்லாமல் அப்போட்டியில் கலந்துகொண்டேன்.

அப்போட்டியில் நான் மூன்றாவதாக வந்தேன். அதில் முதல் மூன்றுக்குள் வந்தவர்களைப்பின்னர் வவுனியா மாவட்டப்பாடசாலைகளுக்கான போட்டியில் கலந்துகொள்ள அனுமதித்தார்கள். 'அப்போட்டியில் முதலாவதாக வரும் மாணவர் மட்டும் மட்டக்களப்பில் நடக்கவுள்ள அகில இலங்கைரீதியிலான கட்டுரைப்போட்டியில் பங்குபற்ற அனுமதிக்கப்படுவார்கள்' என்று கூறினார்கள். அதுவரையில் மட்டகளப்பு சென்றிராத எனக்கு எப்படியும் அப்போட்டியில் வென்று மட்டக்களப்பு செல்ல வேண்டுமென்ற ஆவல் பெருகத்தொடங்கியது. அப்போட்டிக்கான தலைப்புகளிலொன்று

'நான் இந்நாட்டின் பிரதமரானால்'என்பது. அத்தலைப்பிலேயே கட்டுரையை எழுதினேன். நானே முதலாவதாக வந்தேன்.

அப்போட்டியில் கலந்து கொள்ளச்சென்ற என்னுடன் அப்பாவும், வகுப்பு வாத்தியாரான சுப்பிரமணிய 'மாஸ்ட்டரும்' வந்திருந்தார். மேற்படி தமிழ்த்தின விழா ஆகஸ்ட் 15,16, & 17 (1970) நாள்களில் நடைபெற்றது. பல்வேறு பிரிவுகளில் போட்டிகள் நடைபெற்றன. மட்டக்களப்பில் புனித மைக்கல் கல்லூரியில் கட்டுரைப்போட்டி நடைபெற்றது/ போட்டியில் தந்த தலைப்புகளில் ஒன்றான 'எனது பிரயாணம்' என்னும் தலைப்பைத் தெரிவு செய்து மட்டக்களப்புக்கு வவுனியாவிலிருந்து மேற்கொண்ட அப்பயண அனுபவத்தையே மையமாகக்கொண்டு கட்டுரையை எழுதினேன். அப்போட்டியில் எனக்கே முதற்பரிசு கிடைத்தது. ஏ.எல்.பரீத் (இவ்விதமானதொரு பெயரே நினைவிலுள்ளது. சிலவேளைகளில் தவறாகவிருக்கலாம். முடிவுகள் வெளியான தினகரன் பத்திரிகை யாரிடமாவதிருந்தால் சரி பிழை அறிந்து அறியத்தரவும்) என்னும் முஸ்லீம் சிறுவன் கட்டுரைப்போட்டியில் இரண்டாவதாகவும், பேச்சுப்போட்டியில் முதலாவதாகவும் வந்தான். அவ்வருடத் (1970) தமிழ்த்தின விழாப்போட்டி முடிவுகள் தினகரன் போன்ற கொழும்புத்தமிழ்ப்பத்திரிகைகளில் வெளியாகியிருந்தன. அப்போட்டியில் எனக்குப்பெரியதொரு வெள்ளிக்கேடயமும், நூல்கள் சிலவும் பரிசாகத்தந்தார்கள். பேராசிரியர் கா.சிவத்தம்பியின் 'தமிழ்ச்சிறுகதைகளின் தோற்றமும் வளர்ச்சியும்', வீ.சி.கந்தையாவின் 'மட்டக்களப்புத்தமிழகம்', புலவர்மணி பெரியதம்பிப்பிள்ளையின் நூல், மட்டக்களப்புப்பகுதியின் வடமோடி, தென்மோடி நாட்டுக்கூத்துகள் பற்றிய நூல் போன்றவற்றுடன் வேறு சில நூல்களும் பரிசாகக்கிடைத்தன. பல வருடங்களுக்குப்பின்னரே அவ்வெள்ளிக் கேடயத்தை வழங்கியவர் பொத்துவிலைச் சேர்ந்த வர்த்தகர் கனகரத்தினம் (பின்னர் அரசியலில் ஈடுபட்டுச் சுடப்பட்டவர்) என்பதை அக்கேடயத்தின் பின்பக்கம் பொறிக்கப்பட்டிருந்த வாசகங்கள் மூலம் அறிந்துகொண்டேன்.

வவுனியா மகா வித்தியாலயத்தில் காலை நேரம் பாடசாலை தொடங்குவதற்கு முன் அதிபரின் காரியாலயத்தின் முன் கூட்டம் நடைபெறும். அப்போது அதிபராகவிருந்தவர் அரியரத்தினம். அவர் நாங்கள் மட்டக்களப்பிலிருந்து திரும்பியது நடைபெற்ற காலை வணக்கக் கூட்டத்தில் என் பெயரைக்குறிப்பிட்டு அகில இலங்கைத்தமிழ்த்தின விழா நிகழ்வில் அகில இலங்கைரீதியில் நடைபெற்ற கட்டுரைப்போட்டியில் பரிசு பெற்ற விபரத்தை அறிவித்தது நினைவிலுள்ளது. பின்னர் என்னிடம் எனக்குக் கிடைத்த வெள்ளிக்கேடயத்தையும் பள்ளிக்கூடத்தில் வைப்பதற்காகக்கேட்டதாக அறிந்தேன். நானோ அது எனக்குக்கிடைத்தது என்று அம்மாவிடம் கூறி என்னிடமே வைத்திருந்தேன். அதன் பிறகு யாருமே அது பற்றிக்கேட்கவில்லை. பின்னர் அவ்வெள்ளிக் கேடயம் என்னிடமேயிருந்தது.

## வெற்றிமணி என்னும் சிறுவர் இதழ்

அக்காலகட்டத்தில் வெற்றிமணி என்னும் சிறுவர் இதழ் யாழ்ப்பாணத்திலிருந்து வெளியாகிக்கொண்டிருந்தது. அதன் கெளரவ ஆசிரியராகவிருந்தவர் மு.க.சுப்பிரமணியம். ஆலோசகர் குழுவில் இரசிகமணி கனக.செந்திநாதன், கவிஞர் வி.கந்தவனம், ஏ.ரி.பொன்னுத்துரை, கவிஞர் காரை செ.சுந்தரம்பிள்ளை ஆகியோரிருந்தனர். விடுமுறைகளில் யாழ்ப்பாணம் செல்லும்போது நகரின் மையத்திலிருந்த அன்பு புத்தகசாலை சென்று வெற்றிமணி வாங்குவேன். எழுத்தாளர் புதுமைலோலனின் புத்தக்கடை அது. அவர் எழுத்தாளர் செங்கை ஆழியானின் சகோதரர். வெற்றிமணிக்கும் என் படைப்புகளை அனுப்பி வைத்தேன். உருவகக்குட்டிக்கதையான 'மரங்கொத்தியும், மரப்புழுவும்' வெற்றிமணியின் நவம்பர் 1969 இதழிலும், பொங்கல்




பற்றிய குட்டிக்கட்டுரை ஜனவரி 1970 இதழிலும் வெளியாகின. அவை ஒரு சிறுவனின் சிறு படைப்புகள். ஆனால் அச்சிறுவனைப் பொறுத்தவரையில் மிகுந்த ஊக்கத்தைக்கொடுத்த விலை மதிப்பில்லாத அவனது படைப்புகள் அவை. வெற்றிமணி சஞ்சிகையில் அவன் தன் பெயரில் வெளியான அப்படைப்புகளைப் பார்த்ததும் எவ்வளவு மகிழ்ந்திருப்பான்.

இதன்பின்னர் 1971இல் நான் யாழ் இந்துக்கல்லூரிக்குச் சென்று விட்டேன். எட்டாம் வகுப்பிலிருந்து உயர்தரம் வரை என் கல்வி அங்கேயே தொடர்ந்தது. அக்காலகட்டத்தில் எனக்கும் ஈழநாடு மாணவர் மலருக்குமான பிணைப்பு மேலும் இறுகத்தொடங்கியது. அக்காலகட்டத்தில் எனது கட்டுரைகள் ,கவிதைகளை ஈழநாடு மாணவர் மலர் பிரசுரித்து மேலும் என்னை ஊக்குவித்தது. ஈழநாடு மாணவர் மலருக்குப் படைப்புகளை அனுப்புவதில் நான் பெரிதும் மகிழ்வுற்றிருந்த காலகட்டமது.

பால்ய பருவத்தில் என் எழுத்தை ஊக்குவித்த ஈழநாடு ,என் பதின்மப் பருவத்திலும் அதனைத்தொடர்ந்து செய்தது.

# 13. நெஞ்சம் மறப்பதில்லை: சங்கீத ஆசிரியர் பொன் நடராஜா!



அண்மையில் கடந்து சென்ற ஆசிரியர் தினத்துக்காகப்போட வேண்டிய பதிவிது. சிறிது காலதாமதமாகிவிட்டது. வவுனியா மகா வித்தியாலயத்தில் படித்துக் கொண்டிருந்த சமயம் எங்களுக்குச் சங்கீதம் படிப்பித்த ஆசிரியர் பொன் நடராஜா அவர்கள். எப்பொழுதும் சிரிப்பும், சந்தனப் பொட்டுமாகக் காட்சியளிக்கும் செந்தளிப்பான முகம். இவரது மூத்த மகன் சண்முகராஜா (Shan Nadarajah) என் பால்ய காலத்து நண்பர்களிலொருவர். என் வகுப்பில் படித்துக்கொண்டிருந்தார்.

என்னைபோன்றவர்களுக்கெல்லாம் சுத்தமாகப் பாட வராது. இருந்தாலும் சங்கீதம் கட்டாயப் பாடமாக இருந்ததால் படித்துக்கொண்டிருந்தோம். 'சரிகமபதநிச', 'சநிதபமகரிச' , ஆரோகணம், அவரோகணம் என அவற்றுக்கு மேல் எதுவுமே எனக்கு ஏறவில்லை. ஆனால் எம் வகுப்பில் பாடும் திறமையுள்ள மாணவர்கள், மாணவிகள் இருந்தார்கள். அவர்கள் சில சமயங்களில் சங்கீத வகுப்புகளில் பாடுவதுண்டு. அவற்றை இரசிப்போம். சங்கீதப் பாடத்தில் ஆர்வமில்லாவிட்டாலும் அதனைக் கற்பிக்கும் ஆசிரியரின் திறமையாலும், ஆளுமையாலும் அப்பாடம் ஒருவகையில் எமக்கு இன்பத்தையே தந்தது.

ஆசிரியர் பொன் நடராஜா அவர்களை நினைத்ததுமே என் நெஞ்சில் படர்வது அவரது மறைவுதான். அதுவோர் அகால மரணம். ஈழத்தின் தமிழர், சிங்களவர்களுக்கிடையிலான அரசியல் முரண்பாடுகள் காரணமாக வெடித்த வன்முறைகளுக்குள் சிக்கித் தன் உயிரை இழந்தவர் இவர். 1977 இனக்கலவரத்தில் இனவெறிக் காடையர் சிலரால், அநுராதபுர புகையிரத நிலையத்தில் வைத்துப் படுகொலை செய்யப்பட்ட தமிழர்களில் இவருமொருவர். எங்களுக்கே இச்செய்தி இவ்வளவு வேதனையைதருமென்றால், இவரது மறைவு இவரது குடும்பத்தவர்களுக்கு எவ்வளவு வேதனையைத்தந்திருக்கும். ஆறாத துயரம் அது.

அவர் மறைந்தாலும் அவரது நினைவு மட்டும் இன்னும் பசுமையாக நெஞ்சிலுள்ளது. அவரது வகுப்பில் படித்த பால்ய காலத்து அனுபவங்கள் ஒருபோதுமே நெஞ்சை விட்டுப்போவதில்லை.

# 14. பொய்க்கால் குதிரை ஆட்டமும், வவுனியா நினைவுகளும்..

'தாயைக்காத்த தனயன்' திரைப்படத்தில் வரும் இந்தச் 'சண்டிக்குதிரை நொண்டிக்குதிரை' பாடலைக்கேட்டதும் அந்த நாள் ஞாபகங்கள் சிந்தையில் படம் விரிக்கின்றன.

அறுபதுகளில் வவுனியாவில் இருந்த காலகட்டம்... அவ்வப்போது காலை நேரங்களில் பொய்க்கால் குதிரை ஆட்டக்காரர்கள் வீடு வீடாக வருவார்கள். வந்து சிறிது நேரம் ஆடி வீட்டாரை மகிழ்விப்பார்கள். அதற்குப் பதிலாக வீட்டார் கொடுப்பவற்றை வாங்கிச்செல்வார்கள். இன்னும் பசுமையாக ஞாபகத்திலிருக்கின்றது. அப்பொழுதுதான் நான் கடைசியாக அருகில் பொய்க்கால் குதிரை ஆட்டக்காரர்களைப்பார்த்தது.

அக்காலகட்டத்தில் அவ்வப்போது குறவர்களும் இவ்விதம் வீடு வீடாக வந்து ஆடிப்பாடி மகிழ்வித்துச் செல்வார்கள். இரவுகளில் குடுகுடுப்பைக்காரன் தன் பங்குக்கு அவ்வப்போது குடுகுடுப்பையை அடித்துக்கொண்டு வந்து எம்மை அச்சப்பட வைத்தபடி செல்வான்.

இந்த நினைவுகள் மேலும் சில நினைவுகளை எழ வைத்து விட்டன. அப்பொழுது வவுனியாவில் பொலிஸ் நிலையம் தவிர பெரிதாக இராணுவ , விமானப்படை முகாம்கள் இருந்ததாக ஞாபகமில்லை. ஆனால் 'ஆர்மர்ட் காரில்' (armored car) ஓரிரண்டு இராணுவ வீரர்கள் சிலர் வவுனியா மகா வித்தியாலயத்து விளையாட்டு மைதானத்துக்கு அருகிலிருந்த 'ட்ரக்டர் யுனிட்' என்னும் வளவிலுள்ள கிணற்றில் தண்ணீர் அள்ள வந்திருப்பதை அவதானித்திருக்கின்றேன். அப்பொழுது அவர்கள் மாணவர்களான எங்களுடன் சிரித்து நட்பாகத் தலை அசைத்துச் செல்வார்கள். (ஆனால் எண்பதுகளில் அந்த நிலைமை மாறி விட்டது).

விமானப்படை வீரர்களைக்கூட ஒருமுறைதான் பார்த்திருக்கின்றேன். அப்பொழுது ஒரு முறை மூன்று முறிப்பு விமான நிலையத்தில் விமானமொன்று வந்திறங்கியது. அது விமானப்படையினரின் விமானம். மாணவர்களாகிய நாம் ட்ரக்டர் யூனிட்டுக்கு அருகாகக் காட்டை ஊடறுத்துச் சென்றுகொண்டிருந்த பாதை வழியாக விமான நிலையத்தை அடைந்த போது , ஓடு பாதையில் அந்த விமானம் நின்றிருந்தது. அருகில் சில விமானப்படையினர் நின்றிருந்தார்கள். நாங்கள் விமானத்தை ஆச்சரியத்துடன் பார்த்தபடி, அதன் 'டயர்க'ளை, விசிறிகளைத் தொட்டுப்பார்த்து வியந்தோம். அருகிலிருந்த விமானப்படை வீரர்கள் எதுவுமே சொல்லவில்லை. எம்மைக் கலைக்கவில்லை.

அக்காலகட்டத்தில் ட்ரக்டர் யூனிட் வளவுக்கு அருகில் , கண்டி வீதிக்கு மேற்காக இருந்த பாண்சாலைக்கு ('பன்சல'வைத் தமிழில் நாம் அவ்விதம்தான் அழைப்பது வழக்கம்) அவ்வப்போது மாணவர்களாகிய நாம் செல்வதுண்டு. நீட்டிப்படுத்திருக்கும் பெரியதொரு புத்தர் சிலையொன்று அமைதி தவழும் முகத்துடன் அங்கிருந்தது. அங்கிருந்த புத்த பிக்கு மாணவர்களாகிய எங்களை மகிழ்வுடன் வரவேற்பது நினைவிலுள்ளது. ஆனால் நாங்கள் மீண்டும் எழுபதுகளில் யாழ் மாவட்டத்துக்குத் திரும்பும்போது வவுனியாவில் முதல் முறையாக இராணுவ முகாமொன்று அமைக்கப்பட்டு இராணுவத்தினர் வந்து விட்டார்கள். வவுனியா நகர சபைக்கும், புகையிரதப்பாதைக்குமிடையிலிருந்த காட்டுப் பிரதேசத்தில் தற்காலிக இராணுவ முகாம் அமைக்கப்பட்டு அங்கு இராணுவத்தினர் தங்கியிருக்கத்தொடங்கினர். அப்பகுதியினூடு செல்லும் பாதை வழியாகச் சில சமயங்களில் நாம் பாடசாலை விட்டு வீடு திரும்புவதுண்டு. அச்சமயம் இராணுவத்தினர் சிலர் நீண்ட மரக்கால்களைக் கால்களில் இணைத்து நடந்து திரிவதை வியப்புடன் பார்த்தபடி வீடு திரும்புவோம். எம் வியப்பை இரசித்தபடி பதிலுக்கு அவர்களும் சிரித்தபடி செல்வார்கள். இப்பொழுது நினைத்துப்பார்க்கும்போது அப்படியெல்லாம் அந்த மண் ஒரு காலத்தில் இருந்தது என்பதை நினைக்கையில் வியப்பாகவிருக்கிறது.

## 15. அன்பு புத்தகசாலை

அவ்வயதில் வவுனியா மகா வித்தியாலயத்தில் படித்துக்கொண்டிருந்தேன். விடுமுறைகளில் யாழ்ப்பாணத்துக்குச் செல்லுகையிலெல்லாம் யாழ் நகரிலிலிருந்த 'அன்பு புத்தகசாலை'க்குச் சென்று 'வெற்றிமணி'யை வாங்குவதுண்டு. 'அன்பு புத்தகசாலை' எழுத்தாளர் செங்கை ஆழியானின் அண்ணரான எழுத்தாளர் 'புதுமைலோலன்' அவர்களுடையது.

அங்கு பணியாற்றிக்கொண்டிருந்த இளைஞரொருவர் எப்பொழுதும் சஞ்சிகைகள், நூல்கள் வாங்க அங்கு செல்லும்போதெல்லாம் அன்புடன் வரவேற்றுதவுவார். பின்னர் யாழ் இந்துக்கல்லூரியில் என் கல்வி தொடர்ந்த என் பதின்ம வயதுக் காலகட்டத்திலும் அங்கு செல்வதுண்டு.

அங்குதான் செங்கையாழியானின் முதலாவது நாவலான 'நந்திக்கடல்' சரித்திர நாவலினை வாங்கியதுண்டு. மார்க்சிம்கார்க்கியின் புகழ்பெற்ற நாவலான 'தாய்' (தொ.மு.சி.ரகுநாதன் மொழிபெயர்த்தது) நாவலை அவ்விளைஞரே எனக்கு வழங்கியவர்.

## 16. மறக்க முடியாத பெண் ஒருவரின் மரணம்

அண்மையில் கனடாவில் ஒரு தமிழ்ப்பெண் தூக்கிட்டுத் தற்கொலை செய்துள்ளதாகத் தகவலொன்றைக் கேள்விப்பட்டேன். உண்மை பொய் தெரியவில்லை. இங்கு அண்மைக்காலமாக இது போன்ற பல மரணங்கள் நிகழ்வதாகவும், குடும்பத்தினர், ஊடகங்கள் அவற்றை மூடி மறைப்பதாகவும் ஒரு கருத்து நிலவுகின்றது.

இது உண்மையா? உண்மையென்றால் அது தவறான நடைமுறை. இவை போன்ற பல மரணங்கள் மேலும் தொடர்வதற்கு இந்நடைமுறை வழிவகுக்கும். மேலும் இவ்விதமான மரணங்களுக்கு வழி வகுக்கும் சூழ்நிலைகள் எவையென்பதை அறிய முடியாது போய்விடும். அத்துடன் பாதிப்புக்குள்ளாகி மரணித்தவர்களுக்கு அநீதி புரிவதாகவே இவ்விதமான நடைமுறை அமைந்து விடும்.

என் பால்ய பருவத்தில் இத்தகைய மரணமொன்றினை அறிந்திருக்கின்றேன். அப்பொழுது வவுனியா மகா வித்தியாலயத்தில் படித்துக்கொண்டிருந்தேன். விளையாட்டு மைதானத்துக்கு முன்புறமாகச் சென்று கொண்டிருந்த A9 பாதையின் மேற்குப்புறத்திலுள்ள வீடொன்றில் வசித்து வந்த தம்பதிக்கிடையில் என்ன பிரச்சினையோ தெரியவில்லை. கணவன் வேலைக்குச் சென்றிருந்த சமயம் பார்த்து அந்தப்பெண் தன் மேல் மண்ணெய் ஊற்றி எரிந்துள்ளார். எரிந்த படியே அப்பெண் அதன் வெம்மை தாங்க முடியாது தண்ணீர்த்தொட்டிக்குள் ஓடி விழுந்திருக்கின்றார். அவ்வழியால் சைக்கிளில் சென்று கொண்டிருந்த வவுனியா நகரசபைத் தலைவர் பொன்னையா என்பவரே அதனை முதலில் அறிந்து உதவச் சென்றவர். (* அக்காலத்தில் நகரசபைத் தலைவரொருவர் சைக்கிளில் சாதாரணமாகப் பயணிப்பதொன்றும் ஆச்சரியமல்ல.)

மாணவர்களாகிய நாங்களும் அங்கு சென்றபோது எங்களைப்பார்க்க விடாது கலைத்து விட்டார்கள். தகவலறிந்து அங்கு ஓடி வந்த அந்த இளங்கணவன் 'என் கண்மணி. என் கண்மணி' என்று கதறியழுத காட்சி இன்னும் என் மனக்கண்ணில் பதிந்துள்ளது. எதற்காக இவ்விதமான மரணங்கள் நிகழ்கின்றன என்று மனது வருந்தியது. இவ்விதமான மரணங்கள் நிகழ்கையில் எனக்கு அந்நினைவும் எழுந்துவிடுகின்றது.

# 17. அன்னையர் தினப்பதிவொன்று.......



அம்மாவின் நினைவு ஒரு நாளில் மட்டுமே நினைவுக்கு வருமொன்றல்ல. சுவாசிக்கும் மூச்சைப்போன்றது அது. இருக்கும் வரை எம் நெஞ்சில் இருக்கும் நினைவு அது.

அம்மாவை நினைத்ததும் என் நினைவுக்கு வரும் மறக்க முடியாத நினைவுகளிலொன்று: அப்பொழுது வவுனியா மகா வித்தியாலயத்தில் கல்வி கற்றுக்கொண்டிருந்த காலகட்டம். அம்மாவோ அங்கு ஆசிரியையாகப் பணிபுரிந்துகொண்டிருந்தார்.

நாங்கள் அப்பொழுது வசித்ததோ பட்டாணிச்சுப்புளியங்குளத்தை அண்மித்துள்ள குருமண்காட்டுப்பகுதியில். மன்னார் றோட்டிலிருந்து செல்லும் ஒற்றையடிப்பாதையில் சில வீடுகளே இருந்தன. கானகத்தின் மத்தியில் அமைந்திருந்த பகுதியாகக் குருமண்காடு விளங்கிய காலகட்டம் அது. மன்னார் றோடும், குருமண்காட்டினூடு செல்லும் ஒற்றையடிப்பாதையும் சந்திக்கும் இடத்தில் முஸ்லீம்களுக்குச் சொந்தமான சுடுகாடிருந்தது. வவுனியா மகா வித்தியாலயத்துக்கும், குருமண் காட்டுப்பகுதிக்குமிடையில் குறைந்தது இரண்டு மைல்களாவது தூரமிருக்கும்.

சரஸ்வதி பூசை நடைபெறும் சமயங்களில் சில தடவைகள் நிகழ்ச்சிகள் முடிவடைய இரவு ஒன்பதைத்தாண்டி விட்டிருக்கும். அப்படியான சமயங்களில் நாங்கள் அம்மாவுடன் ஒண்டியபடி , கவிந்து கிடக்கும் இரவினை ஊடறுத்துச்செல்லும் ஸ்டேசன் றோட்டினூடு

குருமண்காட்டினை நோக்கி நடந்து செல்வோம். அச்சமயங்களில் அம்மா 'சிவசிவா' என்று ஜெபித்தபடியே வருவா.

நத்துகள் கத்தும் இரவினில் , வெளவால்களின் படையெடுப்பில் நகர் ஆட்பட்டிருக்கும் தருணத்தில், இருண்டிருக்கும் நகர் மனித நடமாட்டமேயற்றுக்கிடக்கும். இரவு வானிலோ நட்சத்திரங்கள் கொட்டிக்கிடக்கும்.

பண்டாரிக்குளத்தைக்கடக்கையில் அப்பகுதியில் இருக்கும் வர்த்தக நிலையங்களெல்லாம் மூடிவிட்டிருக்கும். ஆங்காங்கே வீதியோரங்களில் படுத்திருந்தபடி அசைபோடும் மாடுகளின் அசைவுகளை மட்டுமே உணர்ந்தபடி நடந்து சென்றுகொண்டிருப்போம்.

அந்தப்பயணத்தில் குழந்தைகளான எமக்கு மிகவும் அச்சத்தினை ஏற்படுத்தும் பகுதி குருமண்காடும், மன்னார் றோடும் சந்திக்கும் பகுதிதான். அச்சந்தியிலிருந்த சுடலையும், அவ்வப்போது அங்கிருந்து கேட்கும் நரிகளின் ஊளையிடும் ஒலிகளும்தாம். மேலும் அப்பகுதியிலிருந்த பெரியதொரு பாம்புப்புற்றும் எமக்கு அச்சத்தினைத்தருமொன்று. அதனைக்கடக்கையில் தாழம்பூ வாசனை மணக்கும். நாகபாம்பு அங்கு வசிப்பதால்தான் அந்த வாசனை வருகிறதென்று கூறுவார்கள். ஆனால் அம்மாவோ எந்தவித அச்சமுமில்லாமல் ஜெபித்தபடி எங்களைக் கூட்டிக்கொண்டு செல்வார்.

இப்பொழுது நினைத்தாலும் அந்த நினைவுகள் அம்மாவை நினைக்கும் தருணங்களெல்லாம் ஞாபகத்துக்கு வரும். கூடவே இன்னுமொரு நினைவும் தோன்றும். ஒரு பெண் தன்னந்தனியாக , இரவினில் தன் குழந்தைகளுடன் நடந்து செல்லக்கூடியதாக , எந்த வித ஆபத்துகளும் ஏற்படாத வகையில் அந்த நகர் அப்பொழுது இருந்தது. ஆனால் நாகரிகத்தின் உச்சாணிக்கொப்பில் இருப்பதாக மானுடர் பெருமைப்படும் இன்று யாராவது அவ்விதம் எந்த நகரிலாவது நடந்து செல்ல முடியுமா என்ன?

இது போல் பல நினைவுகள் அம்மாவை நினைக்கும்போது நெஞ்சினில் படம் விரித்தாடுகின்றன.

## 18. தாட்டானுடன் ஓர் அனுபவம்........

என் பால்ய காலத்து வவுனியா அனுபவங்களில் மர்க்கடம் பற்றிய அனுபவங்கள் முக்கியமானவை. புரியவில்லையா? மர்க்கடமென்றால் குரங்கு என்று அர்த்தம் அங்கு இரண்டு வகைக்குரங்குகளைக் காணலாம். ஒன்று வித்தைகள் காட்டப்பழக்கப்படும் குரங்கு வகை. அவற்றை நாம் செங்குரங்கு என்று கூறுவோம். இன்னொரு வகை: தாட்டான் என்று கூறுவோம். இவ்விதம் தாட்டான் என்ற சொற்பதம் வழக்கத்திலுள்ள சொற்பதமா என்றொரு கேள்வி என் மனதில் நீண்ட காலமாக இருந்து வந்தது. இச்சொற்பதம் வழக்கிலுள்ள சொற்பதம்தான் என்பதை அண்மையில் வாசித்த சிறுகதையொன்றின் மூலம் அறிந்து கொள்ள முடிந்தது. அச்சிறுகதை எழுத்தாளர் நந்தினி சேவியரின் 'நெல்லிமரப் பள்ளிக்கூடம்'. இச்சிறுகதையில் கதை சொல்லி தன் பால்ய காலத்துப் பாடசாலையொன்றினைப்பற்றி விபரிப்பார். அவ்விதம் விபரிக்கையில் தான் எவ்விதம் தீண்டாமைக் கொடுமையினால் பாதிக்கப்பட்டார் என்பதை விபரித்திருப்பார்.

இச்சிறுகதையில் தாட்டான் பற்றி வருமிடம் இதோ:

*"..பெரிய தாட்டான் குரங்குகள் வாகைமரங்களில் தாவுகின்ற குழைக்கடைச் சந்தியால் திரும்பி கேணியடியால் செல்லும் பிறிதொரு பாதையாலும் அந்தப் பள்ளிக்கூடத்திற்கு இவன் போயிருக்கின்றான்..."*

இந்தத் தாட்டான் குரங்குகள் மூர்க்கம் நிறைந்தவை. பாடசாலை விட்டு வீடு நோக்கிச் செல்லும் சந்தர்ப்பங்கள் சிலவற்றில் இவற்றால் துரத்தப்பட்ட அனுபவங்களுமுண்டு. ஆனால் இவற்றுக்கு நேர்மாறானவை செங்குரங்குகள். எம்முடன் வேடிக்கை காட்டும் தன்மை மிக்கவை அவை.

## 19. அதிகாலையில் வால்வெள்ளி 'பென்னெட்'!

எழுபதுகளில் வவுனியா குருமண்காட்டில் வசித்து வந்தபோது மறக்க முடியாத அனுபவங்களிலொன்று அதிகாலைகளில் அப்பா எழுப்பி காட்டிய வால்வெள்ளி. அப்பொழுதெல்லாம் அது பற்றிய விபரங்கள் பெரிதாகத் தெரியாது. வால் வைத்த நட்சத்திரமென்று பொதுவாக நினைத்துக்கொண்டேன். அதே சமயம் அதன் நீண்ட வால் என்னைக் கவர்ந்தது. அக்காலகட்டத்தில் வாசிக்கத்தொடங்கியிருந்த நான் பொன்னியின் செல்வன் நாவலை வாசிக்கத் தொடங்கியிருந்தேன். அதில்  தூமகேது என்னும் வால்வெள்ளியைப்பற்றி விபரிக்கப்பட்டிருக்கும். தூமகேதுவின் வருகை நாட்டிலேற்படப்போகும் அபாயமொன்றினை எதிர்வு கூறுவதாக கூறப்பட்டிருக்கும். அதனால் வால்வெள்ளியை ஒரு வித அச்சத்துடனும் நோக்கியதாக நினைவு. தூமகேது என்பது வால்வெள்ளிக்கான பொதுப்பெயர்.

## 20. என் குருமண்காட்டு நினைவுகள்

என் குருமண்காட்டு நினைவுகள் என்னும் நெடுங் கவிதை சிறு மாறுதல்களுடன் இப்பாடலாக உருவெடுத்துள்ளது. வவுனியா -மன்னார் பிரதான வீதியிலிருந்து (பட்டாணிச்சுப் புளியங்குளத்தினருகில்) வடக்காகச் செல்லும் வீதியிலுள்ள பிரதேசம் குருமண்காடு என்றழைக்கப்படுகின்றது. அதில்தான் என் பால்ய பருவம் கழிந்தது. அறுபதுகளில் அதுவோர் ஒற்றையடிப்பாதை. இன்றோ ஒரு நகரம். அந்த நாள் குருமண்காடு இன்று என் நினைவில் மட்டும். ரப், பொப், ரொக் என்று உருவான இசைக் கலவை இது. அதற்காக AI Suno வுக்கு நன்றி

பால்யப் பருவத்துக் குருமண் காடே!
நனவிடை தோய்கின்றேன். . நான்
நனவிடை தோய்கின்றேன்.
நனவிடை தோயவே முடியும்.
நனவிடை தோயவே முடியும்.
என் குருமண்காடு இன்றில்லை. அங்கு
என் குருமண்காடு இன்றிலை

இயற்கையின் வனப்பில்
இலங்கிய குருமண்காடு.
நடை பயின்றேன்.
வனம், வாவி நிறைந்த குருமண்காடு.
வளமான பூமி என் குருமண்காடு.
காடு இன்று அங்கில்லை.
அந்த வனப்பு அங்கில்லை.
அந்த வளம் அங்கில்லை.
என்று நான் காண்பேன்?
எங்கு நான் காண்பேன்?
என் நினைவுகளில் நிற்கும்
இன்னுலகம் என் குருமண்காடு.

நள்ளிரவுகளில் நரிகள் ஊளையிடும்.
படுக்கையில் முடங்கிக் கிடப்போம்
நிலாக் காலம் என்றால்
நரிகளுக்குக் கொண்டாட்டம் தானே.
இரா அமைதி ஊடறுக்கும்
ஊளையில் ஒடுங்கிக் கிடப்போம்!

நோக்கிய திசையெங்கும் விருட்சங்கள்!
முதிரை! பாலை! வீரை! கருங்காலி!
மேலும் மேலும் விருட்சங்கள்!
விருட்சங்களில் தாவித் திரியும்
வானரங்கள் எப்போதும் எங்கும்.
வனப்பு மிகு செங்குரங்கு!
வலிமை மிகு தாட்டான்
தாட்டான்கள் எமைத் துரத்தும்.
தப்ப ஓடிச் செல்வோம்.

எத்தனை வகைப் புட்கள்.
எத்தனை வகைப் புட்கள்.
எங்கு நோக்கினும் புட்கள்.
காடை, கௌதாரி , காட்டுக்கோழி
ஊருலாத்தி, பருந்து,  ஆட்காட்டி,
இரட்டை வாற் குருவி,
மைனா, மாம்பழத்தி, குக்குறுபான்,
தேன் சிட்டு, சிட்டுக்குருவி.. ஆகா!
எத்தனை வகைப் புட்கள்.
எத்தனை வகைப் புட்கள்.

வான் பாயும் பட்டாணிச்சுப் புளியங்குளம்.
விடிகாலையே எழுவோம். செல்வோம்.
விரால் பிடிக்கும் வெங்கணாந்திகள்.
நனவிடை தோய்கின்றேன்.
நனவிடை தோய்கின்றேன்.

நீந்தப் பழகினேன் அங்குதான்.
நீரரவங்களும் போட்டி போடும்.
தாமரைக்கொடி நீக்கி,
தளராமல் நீந்தினோம்.
பல்லின மனிதர் வாழ்ந்த மண்
அமைதியில் ஆழ்ந்த மண்.
அக்காலம்
அக்காடு! குருமண்காடு!
அழகான காடு.
அற்புதமான காடு!

ஆ! அந்தக் காடு இன்றில்லை!
ஆ! அந்தக் காடு இன்றில்லை!
ஆ! அந்த வனப்பு இன்றில்லை!
ஆ! அந்த வளமும் இன்றில்லை!

இல்லாத காட்டை எண்ணி
இன்று நனவிடை தோய்கின்றேன்!
என் நினைவில் இருக்கும்
இல்லாத காட்டைப் பற்றி
இன்று நனவிடை தோய்கின்றேன்!
எத்தனை வகைப் புட்கள்.
எத்தனை வகைப் புட்கள்.

## 21. அப்பா..



அப்பா மறைந்தபோது எனக்குப் பத்தொன்பது வயது. எனது பதின்ம வயதுப் பருவத்தில் அவர் மறைந்து போனாலும், இன்றுள்ள என் ஆளுமைக்கு முக்கிய காரணம் அவரே. அவருடன் என் நினைவு தெரிந்து கழிந்த காலகட்டம் சுமார் பதினைந்து வருடங்கள் மட்டுமே. அந்தப்பதினைந்து வருடங்களும் என்னால் மறக்க முடியாத வகையில் பசுமையாக என் நினவில் இன்னுமுள்ளன. யாழ்ப்பாணம் வண்ணார்பண்ணை, வவுனியா (குருமண்காடு) மற்றும் அராலி வடக்கு என்று அவருடன் கழிந்த நாள்கள் மறக்க முடியாதவை. ஏற்கனவே என் பழைய பல முகநூல் பதிவுகளில் என் வாசிப்புக்கும், எழுத்தார்வத்துக்கு எவ்வகையிலெல்லாம் அவர் காரணமாக இருந்திருக்கின்றார் என்பதைப் பதிவு செய்திருக்கின்றேன். இன்று இதுவரை பதிவு செய்யாத விடயமொன்றினை இங்கு பதிவு செய்யப்போகின்றேன்.

1977இல் யாழ்ப்பாணத்தில் பொலிசார்  வெறி பிடித்துத் தாண்டவமாடிய காலகட்டம். யாழ் நவீன பஸ் நிலையக் கடைகளெல்லாம் எரிக்கப்பட்டிருந்த சமயம். நகரில் இளைஞர்கள் ஏழு பேர் வரையில் கொல்லப்பட்டிருந்தார்கள். அன்று நானும் , என் இளைய தங்கையும் யாழ் நகரில் அகப்பட்டிருந்தோம். நகரில் ஒரே பரபரப்பு நிலவிய சூழலில், யாழ் இந்து மகளிர் கல்லூரியில் அகப்பட்டிருந்த இளைய தங்கையைக் கூட்டிக்கொண்டு ஆச்சி வீட்டுக்கு வந்திருந்த சமயம் எங்களிருவரையும் பார்ப்பதற்காக அராலியிலிருந்து கல்லுண்டாய் வழியாக நடந்து அப்பா அங்கு வந்திருந்தார். வந்தவர் எங்களிருவரையும் பார்த்து விட்டுச்சென்றார். இத்தனைக்கும் அப்பொழுது அவருக்கு இரு தடவைகள்

மாரடைப்பு வந்திருந்து உடல் தளர்ந்திருந்தது. இருந்தும் அராலியிலிருந்து நடந்து வந்து எங்களிருவரையும் பார்த்து விட்டுச் சென்றிருந்தார்.

அதன் பின் கலவரச்சூழல் தணிந்த பின் நாங்களிருவரும் அராலிக்குச் சென்றிருந்த சமயம் நாங்கள் கேள்விப்பட்ட இன்னுமொரு கதை எங்களை அதிர வைத்தது. அப்பொழுதுதான் தமிழ் இளைஞர்களின் ஆயுதப் போராட்டம் ஆரம்பமாகத்தொடங்கியிருந்தது. சங்கக்கடைகளை இளைஞர்கள் கொள்ளையடித்த செய்திகள் வெளிவர ஆரம்பித்திருந்த காலகட்டம். அப்பா எங்களைப்பார்க்க யாழ்ப்பாணம் வந்திருந்த அன்று, தமிழ் இளைஞர்கள் சிலர் அராலியில் எங்கள் வீட்டுக்கு வந்திருக்கின்றார்கள். எதற்கு? துப்பாக்கியைத்தேடி. உண்மையில் எங்கள் வீட்டுக்கு அருகில் வசித்துக்கொண்டிருந்த ஒருவரிடம் துப்பாக்கி இருந்தது எல்லாருக்கும் தெரிந்த விடயம். அவரது வீட்டைத்தான் தேடி வந்தவர்கள் தவறாக எங்கள் வீடுக்குச் சென்றிருக்க வேண்டுமென்று நினைக்கின்றேன். அங்கு சென்றவர்கள் அங்கிருந்த அப்பாவையும், கடைசித்தங்கையையும், துப்பாக்கி முனையில் நிறுத்தி வைத்து, வீடு முழுக்க இல்லாத துப்பாக்கியைத்தேடி விட்டுச் சென்றிருக்கின்றார்கள். அவ்விதம் செல்லும்போது வந்திருந்த இளைஞர்களில் ஒருவர் தனது கிழிந்த வெளிநாட்டுச் சேர்ட்டொன்றை (நீல நிறம்) விட்டு விட்டு, அப்பாவின் வெளிநாட்டுச் சேர்ட்டொன்றினை (அரோ சேர்ட் - Arrow) எடுத்து அணிந்துகொண்டு சென்று விட்டார்.

அன்று இச்சம்பவம் நடந்த பின்னர்தான் அப்பா அவ்வளவுதூரம் நடந்து யாழ்ப்பாணத்துக்கு வந்து எங்களிருவரையும் பார்த்துவிட்டுச் சென்றிருக்கின்றார். நான் நினைப்பதுண்டு ஏற்கனவே மாரடைப்பினால் பாதிக்கப்பட்டிருந்த அவர் தனக்கேதாவது நடந்தாலும் என்றெண்ணி, அதற்கு முன்னர் எங்களை வந்து பார்த்து, எங்கள் நிலையை அறிந்து செல்ல வேண்டுமென்று நினைத்தாரோ என்று? ஏனென்றால் ஆகஸ்டில் இந்தச் சம்பவம் நடந்தது. நவம்பர் 30 அன்று அப்பா மூன்றாவது மாரடைப்பினால் காலமாகி விட்டார்.

அப்பாவைப்பற்றி எண்ணும்போது நினைவுக்கு வரும் பல விடயங்களில் இந்தச் சம்பவமும் ஒன்று. இன்றும் அன்று கல்லுண்டாய் வழியாக நடந்து வந்து எங்களைப்பார்த்துச்சென்ற அப்பாவை மீண்டுமொருமுறை நினைத்துக்கொண்டேன்.

# 22. யாழ் பொதுசன நூலக நினைவுகள்....




ஜூன் 1, 1981. யாழ் பொது சன நூலகம் எரிக்கப்பட்ட நாள். யாழ் நூலகம் எரிக்கப்பட்ட தினம். நாகரிகத்தின் உச்சியிலிருப்பதாகக் கூறிப் பெருமிதமுறும் மனித இனமே நாணித்தலை குனிய வேண்டிய தினம். நூலகத்தில் பாதுகாக்கப்பட்ட பல வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த பிரதிகளெல்லாம் நெருப்போடு நெருப்பாக அழிந்தே போய்விட்டன. இவற்றின் அழிவினைத் தாங்க மாட்டாத பாதிரியார் ஒருவரும் (தாவீது அடிகள்) மாரடைப்பால் இறந்ததாகக் கேள்விப்பட்டிருக்கின்றேன்.

பொதுவாக அவ்வப்போது யாழ் பொதுசன நூலகம் பற்றிய நினைவுகள் தோன்றுவதுண்டு. இந்த நூலகத்துடனான எனது உறவு பின்னிப்பிணைந்ததொன்று. என் மாணவப்பருவத்துத் தோழர்களில் முக்கியமான தோழனாக விளங்கிய நூலகம். பன்முகப்பட்ட அறிவினை அள்ளி வழங்கிய சிறந்த நண்பன். எவ்வித எதிர்பார்ப்புகளுமற்று அதனை வாரி வழங்கிய நண்பன். யாழ் பொது நூலகத்தை எண்ணியதும் எப்பொழுது முதன் முதல் அதனுடனான எனது தொடர்பு ஏற்பட்டது என்று எண்ணிப்பார்க்கின்றேன்.

என் பால்யகாலத்தில் நான் என் ஆரம்பக் கல்வியை வவுனியா மகாவித்தியாலயத்தில் படித்துக்கொண்டிருந்தேன். அதன் பின்னர் எட்டாம் வகுப்பிலிருந்து கல்விப் பொதுத் தராதர உயர்தர வகுப்பு வரை யாழ் இந்துக்கல்லூரியில் தொடர்ந்தது. வவுனியாவில் வசித்துக்கொண்டிருந்த காலகட்டத்தில் பாடசாலை விடுமுறையின்போது என் அம்மாவின் சகோதரியொருவரின் பிள்ளைகள் வவுனியா வருவார்கள். அல்லது நாம் யாழ்ப்பாணத்துக்கு ஆச்சி வீடு செல்வோம். அவ்விதம் செல்கையில் அக்கா முறையிலான எனது ஒன்று விட்ட சகோதரியொருவர் , என்னைவிட சுமார் ஏழு வயது மூத்தவர், யாழ் நூலகத்துக்கு செல்கையில் என்னைத் துணைக்கழைத்துச் செல்வார். காற்சட்டையும் , சட்டையுமாக நானும் அவருடன் செல்வேன். அக்காலகட்டத்தில் நான் பொதுவாக நடக்கும்போது மிகவும் விரைவாக நடந்து செல்வேன். என்னைத் துணைக்கழைத்துச் செல்லும் அக்காவுக்கோ என் நடை வேகத்துடன் ஈடு கட்டி நடப்பதற்குச் சிரமமாயிருக்கும். இருந்தாலும் அவரும் இயலுமானவரையில் ஈடு செய்தபடி என்னுடன் நடந்து வருவார். ஆயினும் அவ்விதம் நடந்து வருகையில் 'ஏய் என்னடா இந்த நடை நடக்கிறே. மெதுவாப் போடா. மூச்சு வாங்குது 'என்னும் அர்த்தப்பட

வார்த்தைகளை அள்ளி வீசிக்கொண்டுதான் கூட நடந்து வருவார். அவருடன் யாழ் நூலகத்துச் சென்றதுதான் முதற் தடவை.

இந்த யாழ் பொதுசன நூலகம் என்னைப் பொறுத்தவரையில் என் வாழ்க்கையில் ஓர் அங்கமே என்று கூறிக்கொள்ளும் வகையில் ஆகிவிட்டிருந்தது. ஒவ்வொரு வாரமும் பல தடவைகள் அங்கு செல்வதுண்டு. என்னைப் பொறுத்தவரையில் நான் வணங்கும் ஆலயங்கள் என்றால் அவை நூலகங்களே. அதிலும் இந்த யாழ் நூலகத்துக்குத் தனி முக்கியத்துவமுண்டு. சிறுவர் நூல்கள், அறிவியல் நூல்கள், வெகுசன நாவல்கள், கவிதைகள், நாடகங்கள், இலக்கிய நூல்கள் ... என எத்தனை வகையான நூல்கள். நான் ஒன்பதாவது வகுப்பில் படித்துக்கொண்டிருந்தபோது இந்த நூலகத்தில் எத்தனையோ அறிவியல் நூல்களைப் படித்திருக்கின்றேன். மிகவும் அழகாக விஞ்ஞானத்தின் பல்வேறு பிரிவுகளிலும் நூல்களை அக்காலகட்டத்தில் சென்னையிலுள்ள பதிப்பகமொன்று வெளியிட்டுக்கொண்டிருந்தது. 'பௌதிகத்தின் வரலாறு', 'கடலின் வரலாறு', 'உயிரினங்களின் வரலாறு',.. என்பது போன்ற தலைப்புகளிருக்கும்.

'பௌதிகத்தின் வரலாறு' என்னுமந்த நூலில் ஐன்ஸ்டைனின் புகழ்பெற்ற சக்திக்கும், பொருளுக்குமிடையிலான தொடர்பினை வெளிப்படுத்தும் சூத்திரத்தை, ஒளித்துகளுக்கு உந்தம் மற்றும் இயக்கச்சக்தி ஆகியவற்றுடன் தொடர்புடைய சூத்திரங்களை ஒன்றிணைப்பதன் மூலம் நிறுவியிருந்தது இன்னும் பசுமையாக மனதிலுள்ளது. 'நீங்களும் விஞ்ஞானியாகலாம்' என்றொரு நூல் மிகவும் அழகான சித்திரங்களுடன் வெளியாகியிருந்தது. அக்காலகட்டத்தில் மிகவும் பிடித்த புத்தகங்களில் அதுவுமொன்று. அதில் உருப்பெருக்கும் கண்ணாடியுடன் சிறுவர்கள் வீட்டின் பின்புறத்தே ஆய்வில் ஈடுபட்டிருக்கும் காட்சியினைச் சித்திரிக்கும் வகையில் சித்திரங்களிருந்தன. மாணவர்களுக்கு விளங்கும் வகையில் விஞ்ஞானப் பரிசோதனைகள் பல அந்நூலில் விபரிக்கப்பட்டிருந்தன. அப்போது வெளியாகிக்கொண்டிருந்த அறிவியற் சஞ்சிகையான 'கலைக்கதிர் சஞ்சிகை 'யினை வெளியிட்ட நிறுவனம் வெளியிட்டிருக்க வேண்டும். இவ்வகையான அறிவியல் நூல்கள் எங்கள் ஆர்வத்தைத் தூண்டி விட்டன. மேற்படி விஞ்ஞான நூல்களில் பெரும்பாலானவை ஆங்கிலத்தில் பிரசுரமான அறிவியல் நூல்களின் தரமான மொழிபெயர்ப்புகளே.

தமிழ் இலக்கியத்தின் புகழ்பெற்ற வெகுசன நூல்கள் பல அந்த நூலகத்திலிருந்தன. கல்கியின் பொன்னியில் செல்வன் , அலையோசை தொடக்கம் சாண்டில்யனின் கடல்புறா போன்ற நூல்கள் வரை அந்நூலகத்திலிருந்தன. இந்திய மத்திய அரசின் சாகித்திய அகாடமி வெளியிட்ட நூல்கள் பலவற்றின் மொழிபெயர்ப்புகள் அங்கிருந்தன. சிவராம் காரந்தின் புகழ்பெற்ற நாவலான 'மண்ணும் மனிதரும்' நாவலை முதன் முதலில் அங்குதான் வாசித்தேன். பேர்ல் பக்கின் 'நல்ல நிலம்' நாவலினையும் அங்குதான் முதலில் படித்தேன்.

யாழ்ப்பாண நூலகம் என்றதும் எனக்கு நினைவில் வரும் இன்னுமொரு முக்கியமான விடயம். அது அமைந்துள்ள சூழல். பண்ணைக்கடல், திறந்த வெளிகளை உள்ளடக்கிய யாழ் முற்ற வெளி, திறந்த வெளியரங்கு, சுப்பிரமணியப்பூங்கா, சரித்திரம் கூறி நிற்கும் யாழ் டச்சுக் கோட்டை, முனியப்பர் கோயில்.. இவற்றுக்கு மத்தியில் வீணையும் கையுமாக வரவேற்கும் சரஸ்வதி தேவியின் சிலையுடன் அமைந்த யாழ்பொது நூலகம் அமைந்திருந்தது. காற்று எப்பொழுதும் சிலுசிலுவென்று வீசிக்கொண்டிருக்கும். யாழ் நூலகத்தை நெருங்கையிலேயே ஒருவித அமைதியை, இனிமையை உணரத்தொடங்கிவிடுவோம். நூலகத்தைச் சுற்றியுள்ள அமைதி கலந்த சூழலே அங்கு செல்லுமொருவருக்கு அங்கு சென்று வாசிப்பதற்குரிய உணர்வினை ஏற்படுத்தி விடும். யாழ் நூலகத்தில் வாசிப்பது மட்டுமல்ல அதனை நோக்கிச் செல்வது கூட இன்பமானதோர் உணர்வுதான்; அனுபவம்தான். அபிவிருத்தி என்னும் போர்வையில்

அப்பகுதிச் சூழலைச் சிதைத்து விடாமல் , நகர அமைப்பாளர்கள் எதிர்காலத்திலும் யாழ் நகர அபிவிருத்தித்திட்டங்களை வடிவமைப்பது மிகவும் அவசியம்.

நூலகத்தின் வடிவமைப்பும் கூட எளிமையானது ஆனால் அதே சமயம் நூலகமொன்றுக்குரிய சூழலை ஏற்படுத்தித்தரும் வகையில் அமைந்துள்ளதொன்று. உள்ளே நுழைந்ததும் இடது பக்கம் நூல் இரவல் பெறும் பகுதி, வலது பக்கம் பத்திரிகை, சஞ்சிகைகள் வாசிப்பதற்குரிய கூடம். யாழ் பொதுசன நூலகம் மட்டுமல்ல அது பற்றிய நினைவுகளும் பசுமையானவை; இனிமையானவை.

# 23. 'ஜேம்ஸ் பாண்ட் 007' ஷான் கானரி!



இன்று முகநூல் 'ஜேம்ஸ் பாண்ட்' சேர் ஷான் கானரியின் மறைவுச் செய்தியினை அறிவித்தது. தொண்ணூறு வயதில் முழுமையான வாழ்வு வாழ்ந்து மறைந்திருக்கின்றார். எனக்கு மிகவும் பிடித்த ஹாலிவூட் நடிகர்களில் ஒருவர். மிகவும் வசீகரம் மிக்க அவரைத் தவிர இன்னுமொருவரை என்னால் ஜேம்ஸ் பாண்ட் வேடத்தில் வைத்துப் பார்க்கவே முடியாது.

ஷான் கானரியின் மறைவு அவரைப்பற்றிய நினைவுகளை இரை மீட்ட வைத்து விட்டது. ஷான் கானரி அறிமுகமானது எனது பால்ய பருவத்தில். என் அப்பாவுடன் பார்த்த ஆங்கிலத்திரைப்படங்கள்: 'டென் கொமாண்ட்மென்ட்ஸ்' , 'பென்ஹர்' , 'பரபாஸ்' & 'யு ஒன்லி லிவ் ட்வைஸ்'. முதல் மூன்றும் பைபிள் கதைகளை மையமாகக் கொண்டவை. ஸ்ரீமுருகன் (வவுனியா) திரையரங்கில் பார்த்த திரைப்படம் ஷான் கானரியின் 'யு ஒன்லி லிவ் ட்வைஸ்' (You Only Live Twice) ஜேம்ஸ் பாண்ட் என்னும் துப்பறிவாளர், தன் நாட்டுக்காக இயங்கும் இரகசிய முகவரை மையமாகக்கொண்டு பின்னப்பட்ட கதை. அதுதான் நான் பார்த்த முதலாவது ஜேம்ஸ் பாண்ட் திரைப்படம், முதற் படத்திலேயே ஷான் கானரியின் வசீகரமும் , நடிப்பும் என்னை மிகவும் கவர்ந்து விட்டன.

அன்றிலிருந்து சீன் கானரியாக அவர் என்னைக் கவர்ந்து விட்டார். அவரது பெயருக்கான சரியான உச்சரிப்பு ஷான் கானரி. ஆனால் ஆரம்பத்தில் நான் அவர் பெயரை சீன் கானரியென்றே உச்சரித்துக்கொண்டிருந்தேன். இப்பொழுது கூட எனக்குச் ஷான் கானரி என்பதை விடச் சீன கானரியே மனத்தில் நிலைத்து நிற்கிறது.

பதின்ம வயதுகளில் யாழ் நகரில் ஆங்கிலத் திரைப்படங்களில் மூழ்கிக் கிடந்தபோது ஷான் கானரியின் அனைத்து பாண்ட் திரைப்படங்களையும் பார்த்திருக்கின்றேன். டொக்டர் நோ (Dr.No) திரைப்படத்தில் அவருடன் நடித்திருந்த நடிகை அக்காலகட்டத்தில் மிகவும் புகழ்பெற்றிருந்த கவர்ச்சிகர உடல்வாகு கொண்ட 'உர்சுலா அன்ட்ரெஸ்' (Ursula Andress). திரைப்படத்தை விளம்பரப்படுத்துகையில் உர்சுலா அன்ட்ரெஸ் இன் அன் ட்ரெஸ் (Ursula Andress in Un dress) என்று விளம்பரப்படுத்தியது நினைவிலுள்ளது. யாழ் ராஜாவில் பார்த்திருக்க வேண்டும். சரியாக நினைவிலில்லை. 'டொக்டர் நோ' ஷான் கானரியின் முதலாவது 'பாண்ட்' திரைப்படம்.

ஷான் கானரி மிகச்சிறந்த நடிகரும் கூட. பாண்ட் திரைப்படங்களில் நடிப்பதை நிறுத்தி விட்டு பல்வேறு பாத்திரங்களில் நடித்துள்ள ஷான் கானரி தனது நடிப்புக்காக ஆஸ்கார் விருது  உட்படப் பல்வகை விருதுகளைப் பெற்றவரென்பதும் குறிப்பிடத்தக்கது.

ஸ்காட்லாண்டிலிருந்து அமெரிக்கா வந்த ஷான் கானரி தனது நடிப்புத்திறமையால் , வசீகரத்தால் ஹாலிவூட்டில் மிகவும் புகழ்பெற்ற நடிகர்களில் ஒருவராக விளங்கினார். உலகெங்கும் கோடிக்கணக்கில் இரசிகர்கள் இவருக்கிருக்கின்றனர். நானும் அவர்களிலொருவன்.

## 24. வரலாற்றுச் சுவடுகளில்...: செ.சுந்தரலிங்கம் VS ஆர்.சுந்தரலிங்கம்....

நான் என் பால்ய பருவத்தில் குருமண்காடு, வவுனியாவில் வாழ்ந்த சமயம் நண்பர்களுடன் காடு, மேடெல்லாம் அலைவதுண்டு. அப்பொழுது அங்குள்ள பல்வேறு குளக்கரைகளுக்கெல்லாம் செல்வதுண்டு. அதிலொன்று நாவலர் குளம். அதனைக் கட்டுவித்தார் முன்னாள் வவுனியா பாராளுமன்றப் பிரதிநிதி செ.சுந்தரலிங்கம் என்று கேள்விப்பட்டிருந்தேன். அவரைப்பற்றி 'அடங்காத் தமிழன்' என்று அழைப்பதைப்பற்றியெல்லாம் கேள்விப்பட்டிருந்தேன். பின்னர் எழுபதுகளில் மாவிட்டபுரம் ஆலயத்திற்குத் தாழ்த்தப்பட்ட சமூகத்து மக்களை நுழைய விடாமலிருப்பதற்காக அவர் கடுமையாகப் போராடியதை அறிந்தபோது அவர் மீது நான் வைத்திருந்த மதிப்பு மிக்க பிம்பம் உடைந்து போனது. அச்சமயம் யாழ்ப்பாணப் பொலிஸ் அதிபராகவிருந்தவர் ஆர்.சுந்தரலிங்கம்.

ஆர்.சுந்தரலிங்கத்தை நான் முதன் முதலில் கண்டது விடுமுறையொன்றில் யாழ்ப்பாணத்துக்கு ஆச்சி வீட்டுக்கு சென்றிருந்த சமயம், அப்பொழுதுதான் பதவிக்கு வந்திருந்த ஆர்.சுந்தரலிங்கம் அவர்கள் குதிரையில் கே.கே.எஸ்.வீதி வழியாகப் பவனி வந்த காட்சியின்போதுதான் அவரை முதன் முதலில் கண்டேன். அழகான , கம்பீரமான தோற்றம் நினைவிலுள்ளது. இவர் பேராதனைப் பல்கலைக்கழகப் பட்டதாரி. எண்பத்தைந்தில் இலங்கைப் பொலிஸ் மாஅதிபராகப்பதவி கிடைக்கவிருந்த சமயத்தில் அவர் பதவியை ராஜினாமாச் செய்து வெளிநாட்டுக்குச் சென்று விட்டார். பின்னர் இண்டர்போல் பொலிஸ் பிரிவில் சர்வதேசப் போதைக்கடத்தல் நிபுணராகப் பதவியாற்றினார். 83 கலவரத்தில் நாவலயிலிருந்த இவரது வீட்டையும் இனவெறியர்கள் தீக்கிரையாக்கினர் என்பது நினைவுகூரத்தக்கது.

எழுபதுகளில் இலங்கையில் மாவிட்டபுரம் ஆலயத்திற்குச் சிறுபான்மையினத்தமிழர்களை நுழைய அனுமதிப்பதற்குக் கடுமையான எதிர்ப்பினைத்தெரிவித்தவர் முன்னாள் வவுனியா பாராளுமன்ற உறுப்பினரான செ.சுந்தரலிங்கம். ஆனால் அதைக் கடுமையாக எதிர்த்தவர் ஆர்.சுந்தரலிங்கம். அவர் அக்கால வடமாகாணப்பொலிஸ் அதிபர். யாழ் மாவட்ட நீதிமன்றம் அனைத்து மக்களும் அவ்வாலயத்துக்குள் நுழைவதற்கு யாரும் எதிர்ப்புத்தெரிவிக்கக்கூடாது என்று நீதிமன்ற உத்தரவு போட்டதும் அதனை நிறைவேற்றக் கடுமையாக நின்றவர் வடமாகாணப்பொலிஸ் அதிபர் ஆர்.சுந்தரலிங்கம். சாதி சொல்லி ஒருவரை அழைத்தால் கைது செய்யப்படுவரென்று அறிவித்தார். செ.சுந்தரலிங்கம் ஆர்.சுந்தரலிங்கத்துக்கு எதிராக வழக்கு போட்டார். கொழும்பு சென்று பொலிஸ் மா அதிபரைச் சந்தித்து ஆர்.சுந்தரலிங்கத்துக்கு எதிராகப் புகார் கொடுக்க முயன்றார். ஆனால் பொலிஸ் மா அதிபரோ அவரைச் சந்திக்க மறுத்து விட்டார்.

இவ்விதம் எழுபதுகளில் நடந்தவற்றை அண்மையில் நூலகம் இணைய நூலகத்திலுள்ள பழைய ஈழநாட்டுப்பிரதிகளில் வாசித்தேன். ஆச்சரியம் என்னவென்றால் வட மாகாணப்பொலிஸ் அதிபர் ஆர்.சுந்தரலிங்கத்தின் தலைமைத்துவம்தான். எமது அரசியல்வாதிகள், அமைப்புகளின் தலைவர்கள் எவருமே அவரைப்போல் தம் வாழ்நாளில் தம் பதவியைப்பாவித்துத் தீண்டாமை விடயத்தில் உறுதியான நடவடிக்கைகளைப் பகிரங்கமாக எடுத்திருப்பதாகத் தெரியவில்லை. அப்பத்திரிகைச் செய்திகளை வாசித்தபோது எதற்காக ஆர்.சுந்தரலிங்கம் பின்னாளில் இலங்கை அரசியலில் ஈடுபடவில்லை என்று எண்ணினேன். எதற்காக அவரது இப்பங்களிப்பை நமது அரசியல் ஆய்வாளர்களோ, அனைத்துப்பிரிவு இலக்கியவாதிகளும் , அனைத்துப்பிரிவு அரசியல்வாதிகளும் இருட்டடிப்புச் செய்தார்களோ?

நாவல்களில், திரைப்படங்களில் வரும் நீதிக்காகப்போராடும் ஒரு கதாநாயகனாகவே ஈழநாடுச் செய்திகளை வாசிக்கையில் ஆர்.சுந்தரலிங்கம் தென்பட்டார். அக்கால ஈழநாடுப் பத்திரிகைச் செய்திகள் சிலவற்றை இங்கு காண்கின்றீர்கள். ஆர்.சுந்தரலிங்கம் உண்மையில் காவல்துறை பெருமைப்படத்தக்க காவலன்!

# 25. நாங்கள் அறிந்த 'சுப்பர் ஸ்டார்' - எஸ்.டி.ஆர் (STR)!

எத்தனையோ திரையரங்குகளில் எத்தனையோ திரைப்படங்களைப் பார்த்திருக்கின்றோம். ஆனால் எத்தனை பேருக்கு அத்திரையரங்க உரிமையாளர்களைத் தெரிந்திருக்கும்? ஆனால் இவரை இலங்கைத் தமிழ் மக்கள் பலரும் அறிந்திருந்தார்கள். அவர்தான் யாழ் ராஜா திரையரங்க உரிமையாளர் எஸ்..தியாகராஜா (STR).

இவரைப்பற்றி நான் முதன் முதலில் அறிந்துகொண்டது யாழ் ராஜாவில் 'காவல்காரன்' திரைப்படக் 'கட் அவுட்'டைப்பார்த்தபோது. எம்ஜிஆரின் திரைப்படங்கள் இவருக்கு மிகவும் வசூலை வாரிக்குவித்தன. காவல்காரன் நூறு நாட்களைக் கடந்து ஓடியது. எம்ஜிஆரின் நூறாவது திரைப்படமான 'ஒளி விளக்கு' முதலாவது முறையாகத் திரையிட்டபோது 150 நாட்களைக் கடந்து ஓடியது. மீண்டும் திரையிட்டபோதும் நூறு நாட்களைக் கடந்து ஓடியது. ராஜா திரையரங்கில் காவல்காரன் வெற்றி விழாப் புகைப்படங்கள், கட் அவுட் புகைப்படம் காட்சிப்படுத்தப்பட்டிருந்தன. அங்கு எந்தத் திரைப்படம் பார்க்கச் சென்றாலும் அவற்றைப் பார்க்காமலிருந்ததில்லை.




ராஜா திரையரங்கு இன்னுமொரு விடயத்துக்காகவும் எம் நினைவிலிருக்கும். இலங்கைத் தமிழ் இலக்கிய வரலாற்றிலும் பதிவு செய்யப்பட்டிருக்கும். யாழ் ராஜா திரையரங்குக்கும் அருகிலிருந்த ஒழுங்கை , கே.கே.எஸ் வீதி வரை செல்லும் வீதி, அவ்வீதியில்தான் எழுத்தாளர் டொமினிக் ஜீவா அவர்களின் மல்லிகை காரியாலயம் அமைந்திருந்தது. அக்காரியாலயத்தைக் குறிப்பிடுகையில் ராஜா தியேட்டரையொட்டிச் செல்லும் ஒழுங்கையில் அமைந்திருந்தது என்பதைக் குறிப்பிட யாரும் மறந்ததில்லை.

நாங்கள் வவுனியாவிலிருந்தபோதுதான் அங்கு அவர் வசந்தி திரையரங்கைக் கட்டினார். வவுனியா மகாவித்தியாலயத்துக்கருகில் அமைந்திருந்தது. போர்ச்சூழலில் யாழ்ப்பாணத்திரையரங்குகள் எல்லாம் மறைந்து நினைவுகளில் நிற்பவையாக மாறி விட்டிருக்கையில் எஸ்டிஆரின் திரையரங்குகள் மட்டும் பீனிக்ஸ் பறவைகளாக மீண்டும் உயிர்பெற்றுச் சிறகடிக்கின்றன.

எம் பால்ய பருவத்தில் காவல்காரன் கட்அவுட்டில் மயங்கிக் கிடந்த காலகட்டத்தில் என் பெற்றோர் இவரைப்பற்றிக் கூறியது இன்னும் நினைவிலுள்ளது. அடிமட்டத்திலிருந்து தன் உழைப்பால் திரையரங்க உரிமையாளராக உயர்ந்தவர் என்று அவரைப்பற்றிக் கூறியது இன்னும் நினைவிலுள்ளது.

என் பதின்ம வயதுகளில் யாழ் இந்துவில் படித்துக்கொண்டிருந்த காலகட்டத்தில் கஸ்தூரியார் வீதியில் யாழ் இந்துக் கல்லூரிக்கண்மையில் , விடிகேயின் டியூசன்

நிலையத்துக்கு முன்பாக, வீதியின் மேற்குப் புறத்தில் பெரியதொரு மாடி வீட்டைக் கட்டியிருந்தார்.  அவ்வீட்டுக்கருகில் யாழ் இந்து மாணவர் ஒருவரின் குடும்பத்தினரும் இன்னுமொரு மாடி வீட்டைக் கட்டியிருந்தனர். அவ்வீடுகள் அக்காலகட்டத்தில் நகரின் முக்கியமான 'லாண்ட் மார்க்'குகளாக விளங்கின.

இவ்வளவும் நினைவுகளில் முகநூற் பதிவுகளில் எஸ்டிஆரின் மறைவுச் செய்தியினை அறிந்தபோது வந்து போயின. ஸ்டிஆர் இலங்கைத் தமிழ்ச் சமூகத்தின் குறியீடுகளில் ஒருவர். வாழ்க்கைச் சவால்களையெல்லாம் எதிர்நோக்கி வெற்றியடைந்த ஆளுமையாளர்களிலொருவர் எஸ்டிஆர்.

ஒரு காலத்தில் இவரது திரையரங்குகள் எம்மைக் களிப்புற வைத்தன. எம் இளமைக்கால நினைவுகளில் , அனுபவங்களில் அவை அழியாத கோலங்கள்.

# 26. எந்தையே! என்னில், என் எண்ணங்களில் என்றும் நீ!



தந்தையர் தினமான இன்று எந்தையே உன் நினைவுகள் எப்பொழுதும்போல் எழுகின்றன. கடந்த கால நிகழ்வுகளை இரை மீட்டி , அசை போட வைக்கின்றன.

நில அளவையாளரான உன்னை நண்பர்கள் 'Tall Nava' (Navaratnam) என்று அழைப்பார்கள். ஆறடி உயரமான ஆகிருதி. உதட்டோரத்தில் மென்சிரிப்பு பூத்திருக்கும் வதனம். என் பதின்ம வயதின் இறுதிக்கட்டத்தில்  எந்தை நீ எம் வாழ்வை விட்டு நீங்கி விட்டாய். ஆனால் இருந்தவரை நீ உன் செயல்களால், அரவணைப்பால் வார்த்தெடுத்துச் சென்றாய். உன்னுடன் கழித்த கணங்களெல்லாம் வாழ்வின் அழியாத பொற்கணங்கள். இருப்புள்ளவரை இருக்கும் கணங்கள். பால்ய பிராயத்தில் வண்ணார்பண்ணையில் வாழ்ந்த பொழுதுகள் பின்னர் வன்னி மண்ணில் உன்னுடன் வாழ்ந்த பொழுதுகள் வளர்ந்த பின் விடலைப் பருவத்தில் வடக்கு அராலியில் வாழ்ந்த பொழுதுகள் இவையெல்லாம் அழியாத நினைவுச் சித்திரங்கள்.

வண்ணார்பண்ணை என்றதும் நினைவுக்கு வருபவை: அதிகாலைகளில் என் கைப்பிடித்து வில்லூண்டிக் கேணிக்கு அழைத்துச் செல்வாய். அங்கு நீராடிய பின்னர் மீண்டும் காக்கைதீவுச் சந்தையும் , ஓட்டுமட-காரைநகர் வீதியும் சந்திக்கும் சந்தி வரை அழைத்துச் செல்வாய். தூரத்தே சிறியதாக விரைந்து செல்லும் இ.போ.ச பஸ் வண்டிகளைக் குழந்தைகளின் பொம்மைகளாகக் கருதி அவற்றை எனக்குப் பிடித்துத் தா என்று நான் கேட்டது இன்னும் பசுமையாக என் நினைவிலுள்ளது. அப்பொழுது எனக்கு நான்கு வயதிருக்கும்.

எனது ஐந்து வயதிலேயே நாங்கள் வவுனியாவுக்கு இடம் மாறிச் சென்று விட்டோம், அம்மா ஆசிரியையாக வவுனியா மகா வித்தியாலயத்தில் பணிபுரிந்த காரணத்தால். வவுனியாவில் நாங்கள் குருமண்காடு என்னும் பகுதியில் அப்பொழுது வசித்து வந்தோம். ஒற்றையடிப் பாதையாகவிருந்த வீதியினைக் கொண்டிருந்தது குருமண்காடு அக்காலகட்டத்தில். சுற்றிவர விரிந்திருந்த கானகச் சூழல். பல்வேறு விதமான பறவையினங்கள் (நீர்க்காகங்கள், ஆலா, பருந்து, மாம்பழத்தி, நீண்ட வாற் கொண்டைக்குருவிகள், வவ்வால்கள், குக்குறுபான்கள், மரங்கொத்திகள், மீன் கொத்திகள், பலவேறு வகையான பாம்பினங்கள், குரங்கினங்கள் என விளங்கிய கானகச் சூழலில் எம் வாழ்வு கழிந்தது.

இரவு வேளைகளில் முன்றிலில் நீ  சாய்வு நாற்காலியில் படுத்திருந்தபடி நட்சத்திரங்கள் கொட்டிக் கிடக்கும் இரவு வானினை பார்த்தபடியிருப்பாய். உனது  சாறத்தைத் தொட்டிலாக்கி நானும் உன்னுடன்  சேர்ந்து சுடர்கள் மின்னும் இரவு வானினைப் பார்த்து என்னை மறந்திருப்பேன். அக்காலகட்டத்திலொருநாள்தான் நீ ஐன்ஸ்டன் பற்றிக் கூறினாய். படங்கள் பலவற்றை வெட்டியொட்டி ஒரு புத்தகத்தை எங்களுக்கு தயாரித்துத் தந்தாய். அதில் ஐன்ஸ்டைன், மேரி கியூரி போன்றோரின படங்களையும் வெட்டியொட்டியிருந்தாய். அதன் மூலம் எனக்குச் சிறுவயதிலிருந்தே வானியற் துறையில் ஆர்முண்டாகக் காரணமாகவிருந்தாய். அக்காலகட்டத்தில் அதிகாலைகளில் மிக நீண்ட வால்வெள்ளியொன்றினைக் காணக்கூடியதாகவிருந்தது.

அவ்வால்வெள்ளியினைப் பார்ப்பதற்காகவே அதிகாலைகளில் நேரத்துடன் எழுப்பி விடுவாய். இன்னும் நினைவில் நீங்காமலுள்ளது தந்தையே!
எனக்கு எழுதுவதிலும் , வாசிப்பதிலும் இவ்வளவு தூரம் ஈடுபாடு தோன்றியதற்குக் காரணமே நீதான் அப்பா. சிறுவயதிலிருந்தே வீடு நிறைய புத்தகங்களும் , சஞ்சிகைகளும்தாம். பொன்மலர், பால்கன் காமிக்ஸ் , அம்புலிமாமா தொடக்கம், விகடன், கல்கி, கதிர், கலைமகள், ராணி, ராணிமுத்து, மஞ்சரி, கலைக்கதிர், ஈழநாடு, சுதந்திரன், தினமணி, இந்தியன் எக்ஸ்பிரஸ் என்று வீட்டை நீ நிறைத்துதான் என் வாசிப்புக்கும், எழுத்தார்வத்துக்கும் தீனி போட்டவை.

அக்காலகட்டத்தில் பாடசாலைக் கொப்பிகளில் நான் எழுதிக் குவித்த கதைகளை வாசித்து உற்சாகமூட்டுவாய். பொன்னியின் செல்வனை வாசிக்கத்தொடங்கியபோது எனக்கு வயது ஒன்பது. கல்கியின் எழுத்துகள் என்றால் உனக்கு வெகு பிரியம். உன்னுடன் பொன்னியின் செல்வனில் வரும் சில சொற்களுக்கான அர்த்தங்களைக் கேட்டதும் என் நினைவுக்கு வருகின்றது. மீண்டும் என்னை அப்பருவத்துக்கே நினைவுகள் தூக்கிச் செல்கின்றன. காலக்கப்பல் மட்டும் சாத்தியமென்றால் என்றொரு நப்பாசையும் எழுகின்றது எந்தையே!

என் விடலைப்பருவத்தில் என்னுடன் நண்பனைப் போல் வாதிப்பாய். அப்பொழுதுதான் திமுக எம்ஜிஆர் , கலைஞர் என்று பிளவு பட்டிருந்தது. நீயோ கலைஞரின் ஆதரவாளன். நானோ வாத்தியாரின் வால். எனக்கு இன்னும் ஞாபகம் இருக்கிறது.

இந்திய வானொலியில் தேர்தலுக்கு முன்னர் வேட்பாளர்கள் ஒவ்வொருவருக்கும் சந்தர்ப்பம் தந்திருப்பார்கள். அன்று எம்ஜிஆரின் நேரம். தன்னைக் கூத்தாடி, கூத்தாடி என்று தாக்கியவர்களுக்குப் பதிலடியாக எம்ஜிஆர் வானொலியில் நான் கூத்தாடிதான் என்று உருக்கமாக ஆற்றிய உரை உன்னையும் சிறிது கவர்ந்திருந்தது. அதுவே தேர்தலை எம்ஜிஆர் பக்கம் திருப்பியதாக நடுநிலையில் நின்று உன் கருத்தைக் கூறினாய்.

பால்ய பருவத்தில் சிறுவனான என்னை தமிழரசுக் கட்சியின் ஆதரவாளனான நீ வவுனியாவில் நடைபெற்ற  தமிழரசுக் கட்சியினரின் தேர்தல் கூட்டங்களுக்கு

அழைத்துச் செல்வாய். 'தானைத்தலைவர்' அமிர்தலிங்கம், தந்தை செல்வா, நக்கலுடன் உரையாற்றும் ஆலாலசுந்தரம், உணர்ச்சி பொங்கப் பாடும் மங்கையர்க்கரசி அமிர்தலிங்கம் இவர்களையெல்லாம் முதன் முதலில் நான் கண்டது வன்னி வேட்பாளர் செல்லத்தம்புவை ஆதரித்து நகரசபை மைதானத்தில் நடைபெற்ற தேர்தல் கூட்டத்தில்தான். மங்கையர்க்கரசி அமிர்தலிங்கத்திடம் நான் அன்று ஆட்டோப்கிராப் வாங்கினேன் அன்று. நீண்ட காலம் என்னிடமிருந்த ஆட்டோகிராப் அது. அதிகாலைகளில் இலங்கை வானொலியில் ஒலிபரப்பாகும் நெஞ்சில் நிறைந்தவையில் ஒலிக்கும் பாகவதர், பி.யு.சின்னப்பா போன்றோர் பாடல்களை இரசிப்பதில் உனக்கு வெகு பிரியம்.

எந்தையே! இன்று மட்டுமல்ல இருக்கும் வரையில் என்றும்  உன் நினைவு இருந்துகொண்டேயிருக்கும்; என்னிலிருக்கும் உன்னை எப்பொழுதும் நான் நினைப்பேன்; நினைத்துக்கொண்டேயிருப்பேன்; இன்பமுறுவேன். .

# 27. மறக்க முடியாத 'ரெட் சன்' (Red Sun).




எனக்கு நடிகர் சார்ள்ஸ் புரோன்சனை அறிமுகப்படுத்திய திரைப்படம். யாழ் நகரசபை மண்டபம் றியோ திரையரங்காக மாற்றப்பட்டு ஆங்கிலத் திரைப்படங்கள் பல வெளியிடப்பட்டன. அங்கு வெளியான திரைப்படங்களில் என் நினைவுகளில் இன்னும் நிற்கும் திரைப்படமிது. என் பதின்ம வயதுகள் நான் பார்த்துக் குவித்த ஆங்கிலத் திரைப்படங்களிலொன்று. சார்ள்ஸ் புரோன்சனின் திரைப்படங்களை இப்படத்திற்குப் பின் தேடித் தேடிப் பார்க்கத் தொடங்கினேன்.

இத்திரைப்படத்தில் சார்ள்ஸ் புரோன்சனுடன்  பிரெஞ்சு நடிகர் அலென் டிலோன், ஜப்பானிய நடிகர் 'டொஷிரோ மிவூன்' கூடவே அக்காலகட்டத்தில் இளைஞர்களை ஆட்டிப்படைத்துக்கொண்டிருந்த நடிகை உருசுலா அன்ட்ரெஸ் ஆகியோரும் நடித்திருந்தனர்.  உருசுலா அன்ட்ரெஸ் என்றதும் நினைவுக்கு வருவது: அவரது திரைப்படங்கள் வெளியாகும்போது உருசுலா அன்ட்ரெஸ் இன் அன் ட்ரெஸ் (Un dress) என்று விளம்பரப்படுத்துவார்கள்.

இத்திரைப்படத்தின் இன்னுமொரு சிறப்பு: பிரெஞ், இத்தாலிய , ஸ்பானிஷ் கூட்டுத்தயாரிப்பான இத்திரைப்படத்தில் ஹொலிவூட் நடிகரான சார்ள்ஸ் புரோன்சன், பிரெஞ்சு நடிகர் அலென் டிலோன், சுவிஸ் நடிகர் உருசுலா அன்ட்ரெஸ், யப்பானிய நடிகர் டொஷிரோ மிவூன் எனச் சர்வதேச நடிகர்கள் பலர் நடித்திருப்பார்கள். ஐரிஸ் திரைப்பட இயக்குநர் டெரென்ஸ் யங் இயக்கியிருப்பார்.

# 28. மறக்க முடியாத மனோஹரா!




யாழ் திரையரங்குகளில் என் பிரியத்துக்குகந்த நண்பனைப்போல் விளங்கிய திரையரங்கு மனோஹரா. இங்குதான் அதிகமாக நான் திரைப்படங்கள் தமிழ், ஆங்கிலம் என்று பார்த்தது. இதற்கு முக்கிய காரணம் இதற்கண்மையில்தான் யாழ் இந்துவில் படிக்கையில் தங்கிப்படித்த ஆச்சி வீடிருந்தது. யாழ் இந்துக்கல்லூரியில் எட்டாம் வகுப்பில் சேர்ந்தது முதலே மனோஹராவில் திரைப்படம் பார்ப்பது தொடங்கிவிட்டது. அப்பொழுதெல்லாம் மனோஹராவில் பழைய படங்கள் திரையிடுவார்கள். கலரி என்றால் முழு டிக்கற் 65 சதம். அரை டிக்கற் 35 சதம். அவ்விதம் பார்த்த திரைப்படங்களில் சில: பாகவதரின் 'புது வாழ்வு', சிவாஜி , பானுமதி நடித்த 'அறிவாளி', வாத்தியாரின் 'மாடப்புறா', 'பாசம்', 'கொடுத்து வைத்தவள்'. இவ்விதம்  பார்த்த பழைய திரைப்படங்கள் பல.

இன்னுமொரு சமயம் யாழ் மனோஹராவில் அதிகமாக ஆங்கிலத் திரைப்படங்களைத் திரையிட்டார்கள். அப்பொழுது பார்த்த திரைப்படங்களும் பல. அந்தனி குயீனின் தி ஹன்ச் பாக் ஒஃப் எ நோட்ர டாம் (The Hunchback of Notre Dame) . எழுத்தாளர் விக்டர் கியூகோ எழுதிய புகழ்பெற்ற நாவல். பழமை வாய்ந்த, ஐரோப்பிய கோதிக் கட்டடக்கலையின் சின்னமாக விளங்கிய , 856 ஆண்டுப் பழமை வாய்ந்த இந்தக் கிறிஸ்தவ ஆலயத்தில் நேற்று ஏற்பட்ட தீ விபத்து மனோஹரா தியேட்டரையும், இத் திரைப்படத்தைப்பற்றிய நினைவுகளையும் மீண்டும் ஏற்படுத்தி விட்டன.

இந்தக் கிறிஸ்தவ ஆலயத்தின்  கட்டடக்கலைச் சிறப்பினை மக்களுக்கு எடுத்துக் காட்டும்பொருட்டு விக்டர் கியூகோ எழுதிய இந்நாவலின் பாத்திரங்களான குவாசிமோட்டோ (கூனன்)  மற்றும் ஜிப்ஸிப்பெண் எஸ்மரால்டா ஆகியவை மறக்க முடியாத பாத்திரங்கள்.

கூனனாக அந்தனி குயீனும், ஜிப்ஸி பெண்ணாக இத்தாலிய நடிகை ஜீனா லொல்லோஜிபிரிடாவும் நடித்திருப்பார்கள். நாவல் நோட்ர டாம் ஆலயத்தைக் கதைகளமாகக்கொண்டிருக்கும். இத்திரைப்படத்தின் தழுவலே தமிழில் கல்யாணகுமார்

கூனனாக நடித்திருக்கும் 'மணியோசை' திரைப்படம். இத்திரைப்படமே நான் பார்த்த நடிகர் அந்தனி குயீன் நடித்த முதலாவது திரைப்படமாகும்.

அப்பாவின் பிரியத்துக்குரிய நடிகர்களிலொருவரான சாள்ஸ்டன் ஹெஸ்டனின் ('டென் கமான்ட்மென்ட்ஸ்' திரைப்படத்தில் மோஸசாக நடித்திருப்பவர்) 'தி ஒமேகா மான்' , ஜீன் போல் பெல்மண்டோ (Jean Paul Belmondo) நடித்த 'தி பிரெயின்' , கேர்க் டக்லஸ் & ஹென்றி ஃபொண்டா நடிப்பிலுருவான 'There Was a Crooked Man' , கிறிஸ்டோபர் லீ நடித்த ' டேஸ்ட் த பிளட் ஆஃப் டிராகுலா' (Taste the Blood of Dracula ), மைக்கல் கெயின் நடிப்பில் 'தி இத்தாலியன் ஜாப்' (The Italian Job ), ஜோன் வெயினின் 'ஹட்டாரி' , சார்ள்ஸ் பிரான்ஸனின் 'தி புல் ஆஃப் தி வெஸ்ட்' (The Bull of the West), மற்றும் 'இட் இஸ் எ மாட் மாட் மாட் மாட் வேர்ல்ட் ' (It's a Mad, Mad, Mad, Mad World), 'டேஞ்சர் டயபாலிக்' (Danger: Diabolik).. இவ்விதம் கூறிக்கொண்டே போகலாம், இவ்விதம் பல ஆங்கிலத் திரைப்படங்கள்.

இன்னொரு சமயம் மனோஹராவில் புதுத்திரைப்படங்கள் வெளியாக ஆரம்பித்தன. வாத்தியாரின் 'இதயக்கனி', 'உலகம் சுற்றும் வாலிபன்', ஜெய்சங்கரின் 'உயிர் மேல் ஆசை' , 'வெள்ளிக்கிழமை விரதம்', 'மேனாட்டு மருமகள்'.. இவை மனோஹராவில் நான் பார்த்த , இன்னும் நினைவில் நிற்கும் புதுத்திரைப்படங்கள். இவற்றில் 'இதயக்கனி' நூறு நாள்களைக் கடந்து ஓடியது. இது தவிர ராஜேந்திரகுமார், மாலாசின்ஹா நடிப்பிலுருவான 'கீற்' (Gheet) மறக்க முடியாத ஹிந்தித்திரைப்படம். மனோஹராவில் நீண்ட காலம் ஓடிய திரைப்படமாக நினைவில் பதிந்துள்ளது. அதில் வரும் 'மேரே மித்துவா' பாடலை மறக்க முடியாது. இங்கு பார்த்த இன்னுமொரு ஹிந்தித்திரைப்படம் ஷம்மி கபூர் நடிப்பில் வெளியான 'பிரம்மசாரி'. இதுவே பின்னர் தமிழில் சிவாஜி நடிப்பில் வெளியான 'எங்க மாமா'. 'உலகம் சுற்றும் வாலிபன்' திரையிட்டபோது ஆரம்பத்தில் மனோஹராவிலும், ஸ்ரீதரிலும் மாறி மாறித் திரையிட்டதாக நினைவு. முதல் நாள் நள்ளிரவே மனோஹராவில் முதற் காட்சி ஆரம்பமாகிவிட்டது இன்னும் நினைவிலுள்ளது. திருவிழா மாதிரி சனக்கூட்டம் அலைமோதிக் கொண்டிருந்தது. வாத்தியாரின் திரைப்படங்களில் புகழ்பெற்றவை இவ்விதமே முதல் நாள் நள்ளிரவே முதற் காட்சி ஆரம்பமாகிவிடுவது அக்காலகட்டத்தில் வழக்கமாகவிருந்தது.

மனோஹரா தியேட்டருக்கு உரிமையாளர்களாகப் பலரிருந்தனர் என்று கேள்வி. அவர்களில் ஒருவர் குழந்தை என்று அழைக்கப்படும் ஒருவரிருந்தார். அங்கு பணிபுரிந்த அண்ணாமலை என்பவரை மறக்கவே முடியாது. அவர் உரிமையாளர்களி லொருவரின் சகோதரர் அல்லது உறவினராகவிருக்க வேண்டும். ( மனோஹராவின் உரிமையாளர்கள் பற்றி அறிந்தவர்கள் அவ்விபரங்களை இங்கு பகிர்ந்துகொள்ளாலாம். ) அவரின் பெயர் அண்ணாமலை. நல்ல குரல் வளமுள்ளவர்.

அக்காலகட்டத்தில் திரைப்படங்கள் வெளியாகும் சமயத்தில் லவுட் ஸ்பீக்கர் பூட்டிய காரில் நகரில் வெளியாகும் திரைப்படம் பற்றி ஒலிபரப்பிக்கொண்டு வருவார்கள். அவ்விதம் வருகையில் அத்திரைப்படம் பற்றிய 'நோட்டீ'சுகளை எறிந்துகொண்டு வருவார்கள். அவ்விதம் விளம்பரக் காரில் ஒலிபரப்பிக்கொண்டுவருவார் அண்ணாமலை. அவர் ஒருமுறை ஒலிபரப்பிக்கொண்டுவந்த சிங்களப்படமொன்றின் விளம்பரம் மறக்க முடியாத ஒன்று. படத்தின் பெயர் 'பாரா வலலு'. நடித்திருப்பவர்கள்: காமினி பொன்செகா & மாலினி பொன்செகா. அண்ணாமலை அப்படத்தை விளம்பரத்திக் கொண்டுவருகையில் ' ஸ்டைலா'க விளம்பரத்துவதாக எண்ணிக்கொண்டு "காமினி கொன்செகரா , மாலினி கொன்செகரா நடித்த பாரா வலலு" என்று விளம்பரத்திக்கொண்டு வந்தது அழியாத கோலங்களிலொன்றாக அடிமனத்தில் பதிந்து விட்டது.

என் பதின்ம வயதுகளில் என் வாழ்வுடன் பின்னிப்பிணைந்திருந்த சூழலாக மனோஹரா திரையரங்கு, நாவலர் வீதி, சாந்தையர் மடப்பிள்ளையார், சந்திரா கபே, அருகிலிருந்த கந்தசாமி மாஸ்டரின் டீயூசன் கிளாஸ், கந்தசாமி மாஸ்டரின் டியூசன் கிளாஸ் நடக்குமிடத்தில் சிறிது காலம் நடந்த சிவஞானசுந்தரம் மாஸ்ட்டரின் பல்கலைக்கழகப்புகுமுக வகுப்புக்கான கணிதப்பாடத்துக்கான இரை மீட்டல் வகுப்பு, ஐந்து சந்தியிலிருந்த பிளவுஸ் உணவகம், மொக்கங் உணவகம், ஆசாத் உணவகம் , அண்ணா அறிவகம் ஆகியவை அமைந்திருந்த சூழல் விளங்கியது.

மனோஹரா திரையரங்கைப்பொறுத்தவரையில் இன்னுமொரு விசேடமென்னவென்றால்... அங்கு ஒரு காலத்தில் நாடகங்களும் மேடையேறின என்று கூறினார்கள். அதனை நிரூபிப்பது போல் திரை அமைந்துள்ள மேடையின் கீழ் நடிகர்கள் மேக் அப் போடுவதற்காக அமைக்கப்பட்டிருந்த சிறு சிறு அறைகள் விளங்கின. பதின்ம வயதுகளில் எம் கனவுலகத் திரையரங்காக விளங்கிய மனோஹராவின் அண்மைக்காலத் தோற்றத்தினையே இங்குள்ள புகைப்படத்தில் காண்கின்றீர்கள்.

# 29. அஞ்சலி: விஜயன் சிதம்பரப்பிள்ளை (பிரான்ஸ்)



ஒவ்வொருவருவருக்கு அவரவர் பால்ய, பதின்ம வயதுப் பருவங்களில் வந்து போன மறக்க முடியாத ஆளுமைகள் சிலர் இருப்பார்கள். சந்தித்திருப்பார்கள். அவ்வாளுமைகள் அவர்கள் வாழ்வில் வந்து போயிருப்பார்கள். ஆனால் பல்வேறு காரணங்களினால் அவர்கள் மறக்க முடியாதவர்களாக தடம் பதித்துச் சென்றிருப்பார்கள். என் வாழ்விலும் அவ்விதமான ஆளுமைகள் பலர் இருக்கின்றார்கள். அவர்களில் ஒருவர்தான் இவர்.

எழுபதுகளில் யாழ் இந்துவில் க.பொ.த.சாதாரண தரம் படித்துக்கொண்டிருந்த போது பதின்ம வயதுக்கேயுரிய கனவுகளுடன் வாழ்க்கை உற்சாகமும், கும்மாளமுமாகச் சென்று கொண்டிருந்தது. எப்பொழுதும் நண்பர்கள் கூட்டம். சந்திக்குச் சந்தி பல்வேறு இளைஞர்கள் குழுக்களின் சாம்ராச்சியம். அக்காலகட்டத்தில் கே.கே.எஸ்.ரோட், பிரப்பங்குளம் ரோட், பீ.ஏ.தம்பி லேன் உட்பட யாழ் நகரத்தின் பல வீதிகள் என் வாழ்க்கையில் மறக்க முடியாதபடி பின்னிப் பிணைந்திருந்தன. கே.கே.எஸ்.வீதியில் கில்னர் வீதியும் , கே.கே.எஸ்.வீதியும் சந்திக்குமிடத்தில் , கிழக்குப்பக்கத்தில் நான்கு அல்லது ஐந்து கடைகளைக் கொண்ட கடைத் தொகுதியொன்றிருந்தது. அக்கடைத் தொகுதியில் வடக்கு மூலையில் ஒரு முஸ்லீம் கடை , அடுத்து ஒரு தேநீர்க்கடை, அடுத்து இன்னுமொரு முஸ்லீம் ஒருவரின் தகரக்கடை (தகரங்களால் பல்வேறு சமையலுக்கு வேண்டிய உபகரணங்களையெல்லாம் உருவாக்கித் தரும் தொழில்) அதையடுத்து இன்னுமொரு கடை..இவ்விதமாக அக்கடைத்தொகுதி அமைந்திருந்தது.

அக்கடைத்தொகுதி அக்காலகட்டத்தில் 'டேபிள் டென்னிஸ்' & 'பாட் மிண்டன்' விளையாட்டில் கொடிகட்டிப் பறந்துகொண்டிருந்த ஜெயராஜ் என்பவரின் குடும்பத்துக்குச் சொந்தமாகவிருந்தது.

அக்கடைத்தொகுதியிலிருந்த தேநீர்க் கடையின் உரிமையாளர்கள் மாறிக்கொண்டிருந்தார்கள். ஒவ்வொருமுறையும் இளைஞரொருவர் அதைப்பொறுப்பெடுத்து நடத்திக்கொண்டிருப்பார். நானும் நண்பர்களும் அடிக்கடி செல்லும் தேநீர்க் கடைகளில் அக்கடையும் முக்கியமானதொன்று. அடுத்தது நாவலர் ரோட்டுக்கு அண்மையிலிருந்த சந்திரா கஃபே (அதன் உரிமையாளரான செல்லையாவின் பெயரால் செல்லையா கபே என்றும் கூறுவார்கள்). சந்திரா கஃபே பல்வேறு குழுக்களைச் சேர்ந்த இளைஞர் குழுக்கள் கூடுமிடங்களிலொன்றாக விளங்கியது. இனஸ்பெக்டர் தாமோதரம்பிள்ளையின் ஆட்சி யாழ்ப்பாணத்தில் கோலோச்சிக் கொண்டிருந்தபோது அவர் தன் அதிகாரத்தைக்காட்டப் பயன்படுத்திய இடங்களிலொன்று அச்சந்திரா கஃபே.

சரி விடயத்துக்கு வருவோம். கில்னர் வீதியும், கே.கே.எஸ் வீதியும் சந்திக்கும் தேநீர்க் கடையில் நண்பர்கள் நாம் கூடும் சமயங்களில் அங்கு அடிக்கடி வருவார் ஒருவர். எப்பொழுதும் பெல் பாட்டமும், நீண்ட முடியுடன் ஸ்டைலாகக் காட்சியளிக்கும்

ஓரிளைஞர் வருவார். அவர் பீ.ஏ.தம்பி லேன் பக்கம் வசிக்கும் இளைஞரொருவர். எங்களை விட மூத்தவர். அவர் திரியும் இளைஞர் குழுவைச் சேர்ந்தவர்கள் பலரும் நாமறிந்தவர்களே. அவர்களில் இவர் மட்டுமே அத்தேநீர்க் கடைக்கு அடிக்கடி வருவார்.

அவர் வரும் சமயங்களில் நாமிருந்தால் அவர் எங்களுடன் வந்திணைந்துகொள்வார். எங்களுக்கும் ஒருவிதத்தில் அவர் வருகை விருப்பத்துக்குரியவராகவிருந்தது. அதற்கு முக்கியமான காரணமொன்றிருந்தது. அவர் எம்முடன் இணையும் சமயங்களிலெல்லாம் அவர் பார்த்த ஆங்கிலத் திரைப்படங்கள் பற்றி, அவர் ரீடர்ஸ் டைஜஸ்ட் போன்ற ஆங்கில சஞ்சிகைகளில் வாசித்த திகிலூட்டும் அல்லது விறுவிறுப்பான கட்டுரைகள் பற்றியெல்லாம் மணிக்கணக்கில் சுவையாக எடுத்துரைப்பார்.

அவருக்கு நாம் தேநீர் வாங்கிக்கொடுப்போம். தேநீரை அருந்தியபடியே அவர் கூறும் கதைகளை நாம் ஆர்வத்துடன் கேட்டுக்கொண்டிருப்போம்.
முதன் முதலாக நாம் 'எமில்' சவுந்தரநாயகம் பற்றிக் கேள்விப்பட்டதே அவர் மூலம்தான். ஒரு முறை அவர் ஆங்கிலச் சஞ்சிகையொன்றில் வாசித்த கட்டுரையொன்றிலிரிந்து கிடைத்த தகவல்களின் அடிப்படையில் அவர் எமில் சவுந்தரநாயகம் பற்றிய கதைகளைக் கூறியதை நாம் ஆர்வத்துடன் செவி மடுத்துக்கொண்டிருந்தோம்.

பின்னர் நாம் உயர் கல்வி, பல்கலைக்கழகம் , கொழும்பு , கனடா என்று காலச் சுழலுக்குள் அகப்பட்டு திக்குக்கொன்றாகச் சிதறி விட்டோம். நானும் அதன் பின் அவ்விளைஞரை என் வாழ்வில் சந்திக்கவேயில்லை. ஆனால் அவ்வப்போது நினைவுக்கு வந்துபோவார். எங்கிருப்பார் என்று எண்ணுவதுண்டு. அநேகமாக ஐரோப்பிய நாடொன்றில் இருக்கக்கூடுமென்று எண்ணுவேன்.

பெல் பாட்டமும், நீண்ட தலைமுடியுடன் பார்ப்பதற்கு பாப் பாடகர் போன்ற தோற்றமுடன் காட்சியளித்த அவர் எங்களுக்கு அக்காலகட்டத்தில் பிரமிப்பைத் தந்த இளைஞர்களிலொருவராக விளங்கினார். அவர் தான் அண்மையில் பிரான்ஸில் மறைந்த விஜயன் சிதம்பரப்பிள்ளை. இவரது மரணத்தைப்பற்றி முன்னாள் வடகிழக்கு மாகாண அமைச்சராக விளங்கிய வரதராஜப்பெருமாள் தனது பதிவொன்றில் தன் நண்பர் விஜயனுக்கு அஞ்சலி செலுத்தியபோதுதான் என் நினைவுக்கு நானறிந்த விஜயன் வந்தார். வரதராஜப்பெருமாள் தன் பதிவில் வண்ணார்பண்ணை விஜயன் என்று கூறியதுதான் என் கவனத்தை ஈர்த்தது. ஆனால் வரதராஜப் பெருமாள் கூறியது போல் விஜயன் 72 காலகட்டத்தில் இரவிரவாக சுவர்களில் சுலோகங்கள் எழுதிய விடயங்கள் எனக்கு அக்காலகட்டத்தில் தெரியாது. இப்பொழுதுதான் அறிந்துகொண்டேன்.

வரதராஜப்பெருமாள் பகிர்ந்திருந்த விஜயனின் முதுமைத்தோற்றம் நானறிந்த இளைஞர் விஜயனை நினைவு படுத்துவதைச் சிறிது தாமதிக்கச் செய்தாலும் , அந்த முகமும், கண்களும், புன்னகை தவழும் முகமும் அவர் அதே இளைஞர் விஜயன் என்பதை எடுத்துரைத்தன. நண்பர் பரதனும் அக்காலகட்டத்தில் அப்பகுதியில் அலைந்து திரிந்தவர். என் இன்னுமொரு நண்பரின் நண்பராக விளங்கியவர். அதனால் எனக்கும் அறிமுகமானவர், அவரிடம் கேட்டபோது அவரும் பிரான்சில் இறந்த விஜயனும் நான் அறிந்த இளைஞர் விஜயனும் ஒருவர்தான் என்பதை உறுதிப்படுத்தினார்.

இளைஞர் விஜயனின் மறைவு என் வாழ்வின் ஒரு பருவத்து நினைவுகளைப் படம் பிடிக்க வைத்து விட்டது. பழைய நினைவுகள் அதிலும் பால்ய , பதின்ம வயது நினைவுகள் அழியாத கோலங்களாக வாழ்வில் நிலைத்து வருபவை. அக்கோலங்களில் ஒன்றாக நிற்பவைதாம் இளைஞர் விஜயன் பற்றிய நினைவுகளும்.

# 30. பசுமை நிறைந்த நினைவுகள்: அன்று யாழ்நகரில் பார்த்த ஆங்கிலத்திரைப்படங்கள்.




அண்மையில் ஐபிசிதமிழ் தொலைக்காட்சியினரின் 'வணக்கம் தாய்நாடு' என்னும் தலைபில் அன்றைய யாழ்நகரத்திரையரங்குகளின் இன்றைய நிலை என்பது பற்றிய காணொளியினை நண்பர்களுடன் பகிர்ந்துகொண்டிருந்தேன். அது பழைய நினைவுகள் பலவற்றைக் கிளறிவிட்டது. அன்று றியோ, றீகல், மனோஹரா போன்ற திரையரங்குகளில் , என் பதின்மவயதுகளில் எத்தனை ஆங்கிலத்திரைப்படங்களைப் பார்த்திருப்பேன். அவற்றை எனக்கு அறிமுகம் செய்த அத்திரையரங்குகளின் இன்றைய நிலை நெஞ்சில் ஒருவித கழிவிரக்கத்தை வரவழைக்கும். இப்பதிவு அன்று யாழ்திரையரங்குகளில் நான் பார்த்த ஆங்கிலத்திரைப்படங்கள் பற்றியதொரு பொதுவான பதிவு.

அது ஒரு காலம். அப்பொழுது யாழ்ப்பாணத்தில் றீகல் (வீரசிங்கம் மண்டபத்துக்கு அருகில் அமைந்திருந்த றீகல் இப்பொழுது இல்லை), மனோஹறா தியேட்டர்களில் மட்டுமே அதிக அளவில் ஆங்கிலப் படங்கள் ஓடிக்கொண்டிருந்தன. பின்னர் அதில் ரியோ திரைப்பட அரங்கும் சேர்ந்து கொண்டது. யாழ் நகர மண்டபத்தின் பகுதியே அவ்விதம் ரியோ தியேட்டராக மாறியது. ஆங்கிலப் படங்கள் காட்டப்படும் திரையரங்குகள் பாடசாலை மாணவர்களால் நிறைந்திருக்கும். கலரி, இரண்டாம் வகுப்பு மட்டுமே எப்பொழுதும் நிறைந்திருக்கும். பாடசாலை விட்டதும் றீகலுக்கும், மனோஹறாவுக்கும் மாணவர்கள் படையெடுப்பார்கள். அன்று பார்த்த ஆங்கிலப் படங்கள் பல இன்னும் பசுமையாக ஞாபகத்திலுள்ளன. அத்திரைப்படங்களினூடு எனக்கு அறிமுகமான

நடிகர்கள் பலர். அந்தனி குயீன், சாள்டன் கெஸ்டன் (இவர்களெல்லாரும் என் அப்பாவின் காலகட்டத்து நடிகர்கள். என் அப்பாவுக்கு மிகவும் பிடித்த நடிகர்கள். எங்கள் காலகட்டத்திலும் நடித்துக்கொண்டிருந்தார்கள்.), மைக்கல் கெயின், ஜான் வெய்ன், கிறிஸ்தோபர் லீ, லீ வான் கிளீவ், ஜீன் போல் பெல் மாண்டோ , யூல் பீரயினர், சீன் கானரி (ஷான் கானரி), ஜீனா லொல்லோ பிரிஜிடா (இவரது ஒரேயொரு படத்தைத்தான் பார்த்திருக்கின்றேன். அது விக்டர் ஹியுகோவின் புகழ் பெற்ற நாவலான The Hunch Back a Notre Dame , தமிழில் அதன் தழுவல் கல்யாணகுமார் நடிப்பில் மணியோசை என்று வந்தது.), உர்சுலா அன்ரெஸ், சார்ள்ஸ் பிரோன்சன், அலன் டிலோன், ஜூலியனா ஜெம்மா, கேர்க் டக்ளஸ், ஹென்றி ஃபொண்டா, ஹரி கூப்பர் (இவர் எங்களது அப்பாவின் பால்ய காலத்து நாயகர்களில் ஒருவர்; எங்களது காலத்திலும் இவரது புகழ்பெற்ற திரைப்படமான High Noon திரையிட்டபோது பார்த்திருக்கின்றேன்.), கிரகரி பெக், கிளிண்ட் ஈஸ்ட்வூட், டெலிச விலாஸ் என்று பெரியதொரு நடிகர்/ நடிகைகளின் பட்டாளம் அறிமுகமானது அக்கால கட்டத்தில்தான். சிசில் டிமில் (Cecil DeMille ) ஹாலிவூட்டின் புகழ்பெற்ற தயாரிப்பாளர்; இயக்குநர்; வசனகர்த்தா. 'பென்ஹர்' , 'டென் கமாண்ட்மென்ட்ஸ்' , 'த கிரேட்டஸ்ட் ஷோ ஒன் ஏர்த்' ஆகிய திரைப்படங்களைத் தயாரித்தவர். இவரது மகளே அந்தனி குயீனின் முதல் மனைவி என்று அப்பா அடிக்கடி கூறுவார்.

இவ்விதமாக அன்று பார்த்த ஆங்கிலப் படங்கள் பல்வேறு விடயங்களையும் உள்ளடக்கியவையாக விளங்கின. ஜேம்ஸ் பாண்டின் துப்பறியும் படங்கள், ஆல்ஃபிரெட் ஹிட்ஷாக்கின் திகில் படங்கள் ('சைக்கோ திரைப்படத்தை அந்த வயதிலேயே பார்த்திருக்கிறேன்.), திகில் மிகுந்த பேய்ப்படங்கள் (கிறிஸ்தோபர் லீ டிராகுலாவாக வரும் திரைப்படங்கள்), வயிறு குலுங்கச் சிரிக்க வைக்கும் நகைச்சுவைப் படங்கள் (It is a mad mad mad wordl திரைப்படத்தை இப்பொழுது நினைத்தாலும் புன்னகை அரும்பும். அவ்வளவுக்கு வயிறு குலுங்கச் சிரிக்க வைத்த படம்; மனோஹராவில் பார்த்தது), கானகத்து மிருகங்களைப் பற்றிய படங்கள் (ஜான் வெயினின் 'ஹட்டாரி' , ஆபிரிக்கன் சவாரி போன்ற படங்கள். ஹட்டாரிக்குப் பாடசாலைகளே மாணவர்களை அழைத்துச் செல்வது வழக்கம்), 'வெஸ்டேர்ன் (அல்லது Cow-Boy) படங்கள் (லீ வான் கிளீவ், சார்ள்ஸ் புரோன்சன், ஜான் வெயின், ஜூலியனா ஜெம்மா போன்றவர்களின் பெரும்பாலான திரைப்படங்கள்; சார்ள்ஸ் புரோன்சன் தனது ஆரம்ப காலத்தில் இவ்விதமான படங்கள் அதிகமானவற்றில் நடித்திருக்கின்றார். அதிலொன்றான The Bull of the West எங்கள் காலத்தில் திரையிட்டபோது பார்த்திருக்கின்றேன். நான் பார்த்த இவரது முதலாவது படம் 'ரெட் சன்', யாழ் றியோ தியேட்டரில் பார்த்தேன். பின்னர் இவர் பல்வேறு வேடங்களில் நடித்த திரைப்படங்கள் வெளிவந்தன.), அறிவியல் அல்லது விஞ்ஞானத் திரைப்படங்கள் ( சாள்டன் ஹெஸ்டனின் 'த ஒமேஹா மான்', யூல் பிரையினரின் 'வெஸ்ட் வேர்ல்ட் இவை இரண்டையும் ஒருபோதுமே மறக்க முடியாது.

யூல் பிரயினர் 'அன்ட்ராயிட்'டாக நடிக்கும் 'வெஸ்ட் வேர்ல்ட்டில்' பலமுறை இறந்து பிழைப்பார். ஜூராசிக் புகழ் மைக்கல் கிரைய்க்கடன் எழுதி, இயக்கிய திரைப்படமது. பொழுதுபோக்குப் பூங்காவொன்றில் அமெரிக்காவின் ஆரம்ப காலகட்டம், ரோம் காலகட்டம், ஐரோப்பாவின் மத்திய காலகட்டம் போன்றவற்றை உள்ளடக்கிய விருப்பமான காலகட்டத்துக்குரிய கம்யூட்டர் மனிதர்களுடன் நீங்கள் விளையாடலாம். அவர்களைக் கொல்லவும் முடியும். இவ்விதமான கம்யூட்டர் மனிதர்கள் ஒருபோதுமே மனிதர்களை மீறாத வகையில்தான் 'புறோகிறாம்; எழுதப்பட்டிருக்கும். ஆனால் ஒரு கட்டத்தில் அந்தக் கம்யூட்டர் மனிதர்கள் புறோகிறாமையும் மீறிச் செயற்பட ஆரம்,பித்துவிடுகின்றார்கள். மனிதர்களைக் கொல்லவும் செய்கின்றார்கள். இவ்விதமாகச் செல்லும் கதை. மைக்கல் கிராய்க்டனின் ஜுராசிக் பார்க்கிலும் இவ்விதமானதொரு பொழுதுபோக்குப் பூங்காவொன்று , ஃபாசிலிலுள்ள டைனோசர்களின் உயிர் அணுக்களைக் கொண்டு உருவாக்கப்பட்டிருக்கும். ஒரு

கட்டத்தில் அம்மிருகங்கள் மனிதர்களை மீறிச் செயற்பட ஆரம்பிக்கும்.), கொள்ளைகளை மையமாக வைத்து உருவான படங்கள் (டேஞ்சர் டயபோலிக், த பிரயின், த இத்தாலியன் ஜாப், த கிரேட் ட்ரெயின் ராபரி, தெயர் வாஸ் அ குரூக்ட் மான் போன்ற) என்று பல்வகையான ஹாலிவூட் திரைப்படங்களில் மூழ்கிக் கழிந்தது எங்களது பாடசாலை மாணவப் பருவம். பல திரைப்படங்கள் எங்கள் வயதுக்கு மீறிய காட்சிகள் ( நடிகையின் நீர் வீழ்ச்சியில் நிர்வாணக் குளியல், நாயக- நாயகியரின் முத்தக் காட்சிகள் போன்ற) அவ்வப்போது , ஓரிரு கணங்கள், வருவதுண்டு. அவற்றுக்காகவும் சிலர் ஆங்கிலப்படங்களுக்குப் படையெடுப்பதுண்டு.

ஹேர்க் டக்ளஸின் There was a crooked man மறக்க முடியாத திரைப்படங்களிலொன்று. அதில் அவர் செல்வந்தர் ஒருவரிடமிருந்து அரை மில்லியன் டாலர்கள் கொள்ளையடிப்பார். அக்கொள்ளையில் ஈடுபட்டவர்களில் அவரைத் தவிர மற்றவர்கள் சுட்டுக்கொல்லப்பட்டு விடுகின்றார்கள். இவர் பணத்தைப் பெண்களின் உள்ளாடைக்குள் முடிந்து, பாம்புப் புற்றொன்றில் போட்டு விடுவார். பின்னர் இவர் கொள்ளையடித்த செல்வந்தரால் காட்டிக் கொடுக்கப்பட்டு அரிசோனாவிலுள்ள பாலைநிலமொன்றின் நடுவிலுள்ள சிறைக்கூடத்தில் அடைக்கப்படுகின்றார். அவரைச் சிறைப்பிடிக்கும் சிறையதிகாரியாக ஆரம்பத்தில் ஹென்றி ஃபொன்டா வருவார் (பின்னர் ஏற்கனவே இருந்த சிறை வார்டனாக வருவார்). சிறையிலிருந்த வார்டனுக்கு ஹேர்க் டக்ளஷின் பணத்தைப் பங்கு போடவேண்டுமென்று ஆசை. அதற்காக அவர் ஹேர்க் டக்ளசுடன் திட்டமிடுகையிலேயே சுட்டுக்கொல்லப்படுகின்றார்.

அதன் பின்னர் புதிய வார்டனாக வருகின்றார் ஹென்றி ஃபொன்டா. பின்னர் சிறையை உடைத்து ஹேர்க் டக்ளஸ் தப்பிச் சென்று பாம்புப் புற்றிலிருந்து பண முடிப்பை எடுத்து, மகிழ்ச்சியுடன் திறக்கையில் எதிர்பாராத வகையில் அதற்குள்ளிருந்த பாம்பு பாய்ந்து இவரைக் கொத்திவிடவே இறந்து போகின்றார். இவரைப் பின்தொடர்ந்து வரும் வார்டன் ஹென்றி ஃபொன்டா இவரது உடலையும், பண முடிப்பையும் எடுத்துக்கொண்டு சிறைச்சாலைக்குச் செல்கின்றார். சென்றவர் ஹேர்க் டக்ளசின் உடலைப் போட்டுவிட்டு, பணமுடிப்புடன் மெக்சிக்கோவுக்குத் தப்பிச்செல்கிறார்.

ஹேர்க் டகள்சின் பாம்புப் புற்றுக்குள்ளிருந்த பண முடிப்பை எடுக்கும் போது எதிர்பாராத விதமாக அதனுள்ளிருந்த பாம்பு பாய்ந்து கொத்தும் கட்டத்தில் திரையரங்கு அதிர்ச்சியில் ஆழ்ந்துவிடும். அந்தக் கட்டம்தான் எப்பொழுதும் இந்தப் படத்தைப் பற்றி எண்ணுகையில் நினைவுக்கு வரும்.

WalkAbout ஆஸ்திரேலியாவின் புகழ்பெற்ற நாவல்களிலொன்றான WalkAbout என்பதை அடிப்படையாக வைத்து உருவான திரைப்படம். ஒரு பதின்ம வயது வெள்ளியினத்துச் சிறுமியும், அவளது இளைய தம்பியும் ஆஸ்திரேலியப் பாலை வனத்தில் வழிதடுமாறிச் சிக்குண்ட நிலையில் (சுற்றுலாவுக்காக அழைத்து வந்த அவர்களது தந்தை அவர்களைச் சுட்டுக்கொல்ல முற்படுகையில் இவர்கள் இருவரும் தப்பிச் செல்கின்றார்கள்; தந்தை காருக்குத் தீ வைத்து விட்டு, தன்னைத்தானே சுட்டுக்கொல்கின்றார்), அவர்களுடன் சேரும் ஆஸ்திரேலியவின் பூர்விகக் குடி இளைஞனொருவனும் சேர்ந்து கொள்கின்றான். இவர்கள் மூவரும் அப்பாலை வனப் பிரதேசத்தில் தப்பிப் பிழைத்தலுக்காக நடத்தும் போராட்டம் பற்றிய படம்.  என் மனதில் பசுமையாக நிற்கும் ஆங்கிலப் படங்களில் WalkAbout ற்கும் முக்கிய இடமுண்டு.

# 31. ஜிம் பிறவுனின் 'எல் கொண்டர்'

பொதுவாக வெஸ்டேர்ன் திரைப்படங்களில் கறுப்பின நடிகர்கள் கதாநாயகர்களாக நடிப்பது குறைவு. ஆனால் அவ்விதமாக நடித்த நடிகர் ஒருவரின் திரைப்படத்தையும் என் பதின்ம வயதுகளில் (நான் பார்த்துக் குவித்த ஆங்கிலத் திரைப்படங்களில்) பார்த்திருக்கின்றேன்.

இவரது ஓரிரு திரைப்படங்களே அக்காலகட்டத்தில் வெளிவந்ததாக நினைவு. இவரது படங்களைப்பார்ப்பதற்கு இளைஞர்கள் முண்டியடிப்பார்கள். அந்த நடிகர்தான் ஜிம் பிறவுண். அந்தத்திரைப்படம் 'எல் கொன்டொர்' (El Condor).

பாதுகாப்பான மண் கோட்டையொன்றில் வைக்கப்பட்டிருந்த தங்கத்தைக் கொள்ளையடிப்பதற்காக இவரும், எனக்கு மிகவும் பிடித்த இன்னுமொரு நடிகரான லீ வான் கிளீவ் (Lee Van Cleef) இணைந்து அமெரிக்க இந்தியர்களின் குழுவொன்றும் செல்வார்கள். கண்களைச் சுருக்கி, இதழ்க்கோடியில் இலேசாகச் சிரிப்பைத் தவழவிடும் லீ வான் கிளீவ்வின் நடிப்பு எப்பொழுதும் என்னை மிகவும் கவர்ந்ததொன்று. The Good The Bad and The Ugly திரைப்படத்தில் கெட்டவனாக (The Bad) நடித்திருப்பவர் இவரே. இவரது பல திரைப்படங்கள் அக்காலகட்டத்தில் யாழ்நகரில் திரையிடப்பட்டன. 'சபாட்டா (Sabata)' தொடர் திரைப்படங்கள் குறிப்பிடத்தக்கவை. 'அடியோஸ் சபாட்டா', 'ரிடேர்ன் ஆஃப் சபாட்டா' ஆகியவை நினைவில் நிழலாடுகின்றன.

அக்கோட்டையினைப் பாதுகாக்கும் அதிகாரியாக 'பற்றிக் ஒ"நீல்' (Patrick O'Neal) நடித்திருப்பார். அவரது மனைவியாகப் தொலைக்காட்சி நடிகையாகவிருந்து திரைப்பட நடிகையாகப் புகழ்பெற்ற மரியானா ஹில் (Marianna Hill) நடித்திருப்பார். இவரது தந்தையான ஃப்ராங் ஸ்வார்ஸ்கோஃப் (Frank Schwarzkopf) ஒரு கட்டடக்கலைஞர். போர்த்துக்கீசர். ஜோர்ஜ் புஷ் சீனியர் காலத்தில் ஈராக்குடன் நடந்த வளைகுடா யுத்தத்தில் அமெரிக்கா இராணுவத்தளபதியாக யுத்தத்தை வழி நடத்திய நோர்மன் ஸ்வார்ஸ்கோஃப்பின் மைத்துனர். இவர் தனது தாயாரின் குடும்பப்பெயரான ஹில் என்பதைத்தன் குடும்பப்பெயராக வரித்துக் கொண்டவர்.

எல் கொண்டரைப்பார்ப்பதற்கு இளைஞர்கள் துடித்துக்கொண்டிருந்ததற்கு முக்கிய காரணங்களில் ஒன்று படத்தில் இவரால் கவரப்பட்ட ஜிம் பிறவுணும், இவரும் இணைந்து நடித்த காட்சிகளைப் பார்ப்பதற்காகத்தாம்.

ஜிம் பிறவுணை ஒரு சாதாரண வெஸ்டேர்ன் திரைப்பட நடிகராக மட்டுமே அறிந்திருந்த நான் பின்னாளில் கனடா வந்த பின்பே அவர் மிகவும் புகழ்பெற்ற அமெரிக்க 'ஃபூட்போல்' விளையாட்டு வீரர் என்பதையும் அறிந்து கொண்டேன். இவரது முழுப்பெயர் ஜேம்ஸ் நதானியல் பிறவுண் (James Nathaniel Brown). 1957 - 1965 காலப்பகுதியில் அமெரிக்கத் தேசிய 'ஃபுட்போல்' குழுக்களில் ஒன்றான கிளீவ்லான்ட பிறவுண்ஸ் (Cleveland Browns) குழுவின் 'ஃபுல்பாக்' (fullback) ஆக விளையாடி விருதுகள் பல பெற்ற, சாதனைகள் பல புரிந்த சிறந்த விளையாட்டு வீரர். இவ்விளையாட்டில் மிகச்சிறந்த ஒருவராகக் கருதப்படுபவர். இப்புகழே அவர் திரைப்படங்களிலும் நடிக்க உதவியிருக்கிறது.

இத்திரைப்படத்துக்காகக் கட்டப்பட்ட கோட்டை பின்னர் மேலும் சில திரைப்படங்களில் ( the Barbarian & March or Die (1977)') பாவிக்கப்பட்டுள்ளதும் குறிப்பிடத்தக்கது. 'எல் கொண்டர்; திரைப்படம் நினைவுக்கு வருகிறது. ஆனால் பார்த்த யாழ் திரையரங்கின் நினைவு உடனடியாக நினைவுக்கு வரவில்லை. பரதன் நினைவிருக்கிறதா?

## 32. ஜூலியனோ ஜெம்மா (Giuliano Gemma)

இத்தாலியர்களால் உருவாக்கப்பட்ட வெஸ்டேர்ன் திரைப்படங்களை ஆரம்பத்தில் 'ஸ்பாகட்டி வெஸ்டேர்ன்' (Spaghetti Western ) என்று மேற்குலகம் எள்ளி நகையாடினாலும் அவற்றின் வெற்றி பின்னர் அவற்றையும் எள்ளி நகையாடிய மேற்குலகத்தை ஏற்றுக்கொள்ள வைத்துவிட்டது. ஸ்பாகட்டி என்பது இத்தாலியர்களின் பாரம்பரிய உணவு வகைகளில் முக்கியமானது நமது தோசையைப்போல. கிளின்ட் ஈஸ்வூட் நடித்துப்புகழ்பெற்ற 'The Good, the Bad and the Ugly ' வெஸ்டேர்ன் திரைப்படமும் இத்தாலியர்களால் உருவாக்கப்பட்டதுதான். சேர்ஜியோ லியோனின் (Sergio Leone) இயக்கம், 'டோனினோ டெலி கொலி'யின் (Tonino Delli Colli) ஒளிப்பதிவு , 'எனியோ மோரிக்கோனின்' (Ennio Morricone) இசை நடிகர்களின் நடிப்பு இவையெல்லாம் சேர்ந்து இப்படத்தை வரலாற்றில் நிலைத்து நிற்க வைத்து விட்டதெனலாம்.

இவ்விதமாக இத்தாலியர்களால் உருவாக்கப்பட்ட வெஸ்டேர்ன் திரைப்படங்களில் நடித்துப் புகழ்பெற்ற நடிகர்களிலொருவர்தான் ஜூலியனோ ஜெம்மா (Giuliano Gemma). ஆரம்பத்தில் சண்டைக்காட்சிகளில் நடித்து வந்த இவருக்கு நடிப்புடன் கூடிய பாத்திரங்களை அளித்துப் பின்னாளில் இவர் புகழடையக் காரணமானவர் இயக்குநர் டுச்சியோடெஸ்சாரி (Duccio Tessari. இத்தாலியர்களால் உருவாக்கப்பட்ட பல வெஸ்டேர்ன் திரைப்படங்களில் நடித்துப் புகழ்பெற்றவர் இவர். இவரது மகளான வேரா ஜெம்மாவும் நடிகையே.

இத்தாலியத்திரைப்படங்கள் பலவற்றில் பல்வேறு பாத்திரங்களில் நடித்துப்புகழ்பெற்ற இவருக்கு அந்நாட்டின் 'டேவிட் டி டொனடெல்லோ'' (David di Donatello) விருதினையும் (ஆஸ்கார் விருதினையொத்த அந்நாட்டு விருது) நடிப்புக்காகப்பெற்றுள்ளார். இத்தாலிய தொலைக்காட்சித் தொடர்களிலும் நடித்திருக்கின்றார்.

அக்டோப1ர் 1, 2013இல் கார் விபத்தொன்றில் மரணமான இவர் ஒரு சிற்பியும் கூட.

என் பதின்ம வயதுகளில் நான் பார்த்து இரசித்த இவரது திரைப்படம். யாழ் ராஜா திரையரங்கில் அபூர்வமாகத் திரையிடப்பட்ட ஆங்கிலத்திரைப்படமான 'அரிசோனா கோல்ட்' ((Arizona Colt) திரைப்படமே அது. முதல் திரைப்படத்திலேயே என்னைக் கவர்ந்த நடிகர்களில் இவருமொருவர். அந்த ஒரு படத்தின் மூலம் என் நினைவில் இவர் பெயர் நிலைத்து நின்றுவிட்டது.

# 33. யாழ் நகரத்துத் திரையரங்குகள் அன்று - றீகல்

யாழ்ப்பாணத்தில் அறுபதுகளில், எழுபதுகளில் , மாணவர்கள், இளவட்டங்கள், நடுத்தரவ வயது ஆண்கள் மத்தியில் மிகவும் பிரபல்யமாக விளங்கிய திரையரங்கு 'றீகல்'. காரணம்: அதிகமாக ஆங்கிலத்திரைப்படங்களை அங்கு திரையிடுவார்கள். அதிகமாகப் பாடசாலை மாணவர்களே இத்திரையரங்கை நோக்கிப்படையெடுப்பார்கள். பலரும் கலரி, இரண்டாம் வகுப்பு டிக்கற்தான் எடுப்பார்கள். பின்னர் இந்நிலை மாறி அவ்வப்போது பழைய திரைப்படங்களையும் போடத்தொடங்கினார்கள். பெண்களும் இத்திரையரங்கு நோக்கி வரத்தொடங்கினார்கள். இருந்தாலும் அதிகமாக இங்கு படம் பார்க்கச் செல்பவர்கள் மாணவர்களும், இளவட்டங்களும், நடுத்தரவ வயது ஆண்களுமே. 'பாவை விளக்கு' திரைப்படத்தை நான் இங்குதான் பார்த்தேன்.
இங்கு நான் பார்த்த ஆங்கிலத்திரைப்படங்கள் அனைத்தையுமே கூற முடியாத அளவுக்கு எண்ணிக்கையில் அதிகம். நினைவில் நிற்பவை: கசன்ரா குரொஸ்ஸிங் (The Cassandra Crossing) . கிறகரி பெக், ஓமர் ஷெரீ ஃப், டெலி சவிலாஸ் நடிப்பில் வெளியான் மக்கனாஸ் கோல்ட் (Mackenna's Gold)ம, ஆ ஃப்ரிகன் ச ஃபாரி, அந்தனி குயீன், ஓமர் ஷெரீ ஃப் போன்ற நடிகர்கள் பலரின் நடிப்பில் உருவான, மூன்றரை மணித்தியால நீளமுள்ள லாரன்ஸ் ஆ ஃப் அரேபியா (Lawrence of Arabia).. இவ்விதம் கூறிக்கொண்டே போகலாம்.

இள வட்டங்கள் மத்தியில் றீகல் புகழ்பெற்றிருந்ததற்கு இன்னுமொரு காரணமுமிருந்தது. அங்குள்ள 'கண்டீ'னில் லயன் லாகர், திறீ கொயின்ஸ் பியர் வகைகளை ((முழுப்போத்தல் சுமார் ரூபா 6; அரைப்போத்தல் ரூபா 3) விற்பார்ர்கள். பியர் குடித்து விட்டுப்படம் பார்க்கலாம்.

றீகல் திரையரங்கு அமைந்திருந்த இடம் எனக்கு மிகவும் பிடித்த சூழல். யாழ் முற்றவெளி, கோட்டை, பண்ணைக் கடல், திறந்தவெளி அரங்கு ஆகியவற்றை அண்மித்திருந்த பகுதியில், யாழ் பஸ் நிலையத்துக்கு அண்மையிலிருந்தது. காற்று வீசும் சூழலில் றீகலுக்குச் செல்வது எனக்குப்பிடித்த விடயம். இரவில் படம் முடிந்து வெளிவருகையில் பரந்த வெளியும், நட்சத்திரங்கள் கொட்டிக்கிடக்கும் இரவு வானும் நெஞ்சை அள்ளுவன. றீகல் திரையரங்குக்கும் , யாழ் பஸ் நிலையத்தையுமிணைத்துச் செல்லும் வீதியில் ஒரு தேநீர்க் கடை இருந்தது. நண்பர்களுடன் அவ்வழியால் செல்லும்போது அடிக்கடி செல்லும் தேநீர்க்கடை அது.

யாழ் நீகல் என்றதும் நினைவுக்கு வருமொருவர் சார்ஜண்ட் அன்ரன் (இப்பதிவினை எழுத்தாளர் நட்சத்திரன் செவ்விந்தியன் மீள்பதிவிட்டிருந்தார். அதில் எதிர்வினையாற்றிய Kesavarajan Navaratnam அவரின் பெயர் சார்ஜன்ட் அன்ரன் என்று நினைவு கூர்ந்திருந்தார். அவருக்கு என் நன்றி. அவரது எதிர்வினை: " அந்த பொலிஸ் உத்தியோகத்தர் சார்ஜன்ட் அன்ரன். அவரைச் சுட்ட போதும் உயிர் போகும் வரை எதிர்த்துத் தாக்கினார்") . ஆறடிக்கும் உயரமான, கட்டப்பொம்மன் மீசையுடன் கூடிய ஒருவர். அக்காலகட்டத்தில் பொலிஸார் பான்ட்ஸ் போடுவதில்லை. காற்சட்டைதான் போடுவதுதான் வழக்கம். ஆனால் தமிழகத்துப் பொலிஸார் போல் பாவாடைக் காற்சட்டை போடாமால் அழகாக உடலுடன் அளவெடுத்துத் உருவாக்கப்பட்ட போலிஸ் காற்சட்டை. அவ்விதமணிந்துவரும் அவரின் தோற்றம் ஒருமுறை பார்த்தாலும் மறக்க முடியாத தோற்றமாக விளங்கியது. இவரை நான் ஒருபோதும் மறக்க முடியாது. யாழ் பொது நூலகத்தில் காணாமல்போன என் சையிக்கிள் பற்றிய வழக்கில் நீதிமன்றத்தில் ஆஜரான பொலிஸ்காரரும் இவரே. யாழ் றீகல் திரையரங்கில் சிலவேளைகளில் கூட்டம் அலைமோதுகையில் கூட்டத்தைக்கட்டுப்படுத்த இவரையும் நிர்வாகம் பாவிப்பதுண்டு. கூட்டத்தைக் கட்டுப்படுத்தும் அவரது தோற்றமும் நினவிலுள்ளது.

இவரது முடிவும் துயரகரமானது. யாழ் பரிசத்து விலாஸில் (தாமோதர விலாசுக்கண்மையில், கே.கே.எஸ் வீதியிலிருந்த உணவகம்) ஒருமுறை அங்கு வந்த இராணுவத்தினன் ஒருவன் தகராறு செய்தபோது அதனை அங்கிருந்த சார்ஜ்ண்ட் அன்ரன் தட்டிக்கேட்டிருக்கின்றார். ஆத்திரத்துடன் சென்ற இராணுவத்தினன் முகாமுக்குச் சென்று மேலும் பலரை அழைத்துவந்து  சார்ஜண்ட்  அன்ரனைச் சுட்டுக்கொன்றது மறக்க முடியாத நிகழ்வு. றீகல் தியேட்டரை எண்ணும்போதெல்லாம் அவரது நினைவும் கூடவே தோன்றிவிடும்.

யாழ் றீகல் திரையரங்கு கோட்டைக்கு அருகாமையில் விளங்கியதால் போர்ச்சூழலில் அதிகம் பாதிக்கப்பட்ட திரையரங்காக விளங்கியது. கோட்டையிலிருந்து ஏவப்பட்ட இராணுவத்தினரின் ஷெல்லடிக்கு உள்ளாகி உருக்குலைத்திருந்த அதன் தோற்றமொன்றினையே இங்குள்ள புகைப்படத்தில் காண்கின்றீர்கள்.

அண்மையில் றீகல் திரையரங்கின் இன்றைய தோற்றத்தை இணையத்தில் கண்டபோது (அதனையே இங்கு காண்கின்றீர்கள்) நெஞ்சு வலித்தது. யுத்தச் சூழலின் கோர வடுக்களைத்தாங்கி நிற்கும் அதன் இன்றைய தோற்றம் அன்று நாம் அங்கு கழித்த இன்பமான தருணங்களை எண்ண வைத்துத் துயரை மேலும் அதிகரித்தது.

# 34. ஆர்ட்டிஸ் மணியத்தின் 'அடிமைப்பெண்' கட் அவுட்!



ஓவியர் மணியம் என்றால் உடனே ஞாபகத்துக்கு வரும் அவரது கட் அவுட்டுகளில் முதலில் வருவது அடிமைப்பெண் படத்துக்காக எம்ஜிஆருக்கு அவர் வரைந்த கட் அவுட் .

ஓவியர் மணியம் தான் வரைந்த கட் அவுட்டுகளில் தனக்கு மிகவும் பிடித்த கட் அவுட் என்று இதனையே குறிப்பிட்டுள்ளார். இதன் உயரம் 54 அடி என்றும் குறிப்பிட்டுள்ளார்.

இதனைப்பார்க்கும்போது யாழ் ராணி திரையரங்குக்கு முன்னால் வவுனியாவிலிருந்து பஸ்ஸில் வந்திறங்கிய நாளில், முன்னால் காட்சியளித்துக்கொண்டிருந்த எம்ஜிஆரின் இந்தக் கட் அவுட்டைப் பிரமிப்புடன் பார்த்த பால்ய கால நினைவுகள் எழுகின்றன.

இன்று காலத்தின் கோலத்தினால் ராணி திரையங்கு எம் நினைவுகளில் மட்டும் நிலைத்து நிற்குமொரு திரையரங்கு. அவ்வகையிலும் ஆவணப்படுத்தப்பட வேண்டிய புகைப்படங்களிலொன்று. இப்புகைப்படம் யாழ் நகரத்தின் திரையரங்கொன்றைப்பற்றி அறிவிக்கின்றது. அந்நாளைய உச்சநட்சத்திரங்களை அவர்கள்தம் இரசிகர்கள் எவ்விதம் கொண்டாடினார்கள் என்பதையும் தெரிவிக்கின்றது. குறிப்பிட்ட காலத்து யாழ் நகரக்காட்சியொன்றினையும் பிரதிபலிக்கின்றது.

# 35. ஆர்டிஸ்ட் மணியத்தின் மாட்டுகார வேலன் கட் அவுட்!




எம்ஜிஆர் இரு வேடங்களில் நடித்த 'மாட்டுக்கார வேலன்' திரைப்படம் யாழ் ராணி திரையரங்கில் வெளியானபோது, ஓவியர் மணியத்தின் கை வண்ணத்தில் வைக்கப்பட்டிருந்த எம்ஜிஆரின் 'கட் அவுட்டு'கள் படத்தில் வரும் 'ஒரு பக்கம் பார்க்கிறா' பாடற் காட்சியினைப்பிரதிபலிக்கும் 'கட் அவுட்டு'கள்.

தமிழ்த்திரையுலகில் அதிகமான இரட்டை வேடங்களில் நடித்தவர் எம்ஜிஆராகத்தானிருக்க முடியும். அவரது இரட்டை வேடப் படங்களில் பெரும்பாலானவை பெரு வெற்றியினை ஈட்டியவை. நாடோடி மன்னன், எங்க வீட்டுப் பிள்ளை, குடியிருந்த கோயில், நாளை நமதே, மாட்டுக்கார வேலன், நீரும் நெருப்பும், சிரித்து வாழ வேண்டும், நினைத்ததை முடிப்பவன், ஆசை முகம், பட்டிக்காட்டுப் பொன்னையா , உலகம் சுற்றும் வாலிபன். இவை நானறிந்தவை.

இவற்றில் 'நாடோடி மன்னன்' அவரைத் தமிழ்த்திரையுலகின் முடி சூடா மன்னனாக்கியது. அத்துடன் அவரது எதிர்கால அரசியலுக்கும் அடித்தளமிட்டுக்கொடுத்தது. 'எங்க வீட்டுப் பிள்ளை' அவரைத் தமிழ் மக்கள் அவரைத் தங்கள் வீட்டுப்பிள்ளையாக நினைக்க வைத்தது. 'உலகம் சுற்றும் வாலிபன்' மிகுந்த அரசியல் ரீதியிலான எதிர்ப்புகளுக்கு மத்தியில், விளம்பரங்கள் எவையுமில்லாமல் வெளிவந்து பெரு வெற்றியீட்டியதுடன் அவரது அரசியல் வெற்றிக்கும் வழி வகுத்தது. இவை மூன்றுமே வெள்ளி விழாத்திரைப்படங்கள் என்பதும் குறிப்பிடத்தக்கது.

'மாட்டுக்கார வேலனி'ல் வரும் , 'கட் அவுட்' பிரதிபலிக்கும் 'ஒரு பக்கம் பார்க்கிறா' பாடல் படம் வெளிவந்த காலத்தில் பட்டி தொட்டியெங்கும் சக்கை போடு போட்ட பாடல். டி.எம்.எஸ்ஸின் குரலும், கே.வி.மகாதேவனின் இசையும், எம்ஜிஆரின் ,குறிப்பாக மாட்டுக்கார வேலனாக வரும் எம்ஜிஆரின் நடிப்பும் இப்பாடலை மறக்க முடியாத பாடலாக மாற்றி விட்டன.

இது போன்ற 'கட் அவுட்'டுகள் குறிப்பிட்ட காலகட்டத்தை நினைவூட்டும் அழியாத வரலாற்றுச் சின்னங்கள். இவை முறையாகப் பதிவு செய்யப்பட வேண்டும். இவை ஒரு

காலத்தில் சிறுவர்களான எம்மையெல்லாம் மகிழ்ச்சிக்கடலில் ஆழ்த்திய 'கட் அவுட்டு'களல்லவா.

# 36. தேடி எடுத்த புதையல்: ஓவியர் மணியத்துடனொரு நேர்காணல்.


ஓவியர் மணியம்

அறுபதுகளில், எழுபதுகளில் & எண்பதுகளில் யாழ்ப்பாணத்தில் வாழ்ந்தவர்களுக்கு ஓவியர் மணியமென்றால் நன்கு தெரிந்த ஒருவர். தமிழகத்து ஓவியர் மணியம் அல்லர் இவர். இவர் யாழ்ப்பாணத்து ஓவியர் மணியம். அக்காலகட்டத்தில் யாழ் திரையுரங்குகளில் உச்ச நட்சத்திரங்களின் (எம்ஜிஆர் & சிவாஜி) திரைப்படங்கள் வெளியாகும்போதெல்லாம் ஒன்று மட்டும் நிச்சயம். அது அநேகமாக அத்திரைப்படத்துக்கு ஓவியர் மணியம் ஒரு பிரும்மாண்டமான கட் அவுட் வரைந்திருப்பார் என்பதுதான். இவரைப்பற்றி நினைத்தாலே காவல்காரன், அடிமைப்பெண், நீதி, ராஜா, பாபு, நீரும் நெருப்பும், அடிமைப்பெண், மாட்டுக்கார வேலன் , நாளை நமதே திரைப்படங்களுக்கு இவர் வரைந்த கட் அவுட்டுகள் நினைவில் வந்து போகும், இவரைப்பற்றியும் இவரது கட் அவுட்டுகள் பற்றியும் அவ்வப்போது முகநூற் பதிவுகள் இட்டிருக்கின்றேன். ஆனால் ஓவியர் மணியம் பற்றிய அதிக தகவல்களைப்பெற முடியாதிருந்தது.

இந்நிலையில் நூலகம் எண்ணிம நூலகத்தில் பழைய சஞ்சிகைகள் மேய்ந்து கொண்டிருந்தபோது யாழ்ப்பாணத்திலிருந்து எழுபதுகளில் எழுத்தாளர் சி.மகேஸ்வரனை ஆசிரியராகக்கொண்டு வெளியான 'இதயம்' சஞ்சிகைகளின் சில பிரதிகள் வாசிக்கக்கிடைத்தன. காத்திரமான விடயங்களைத்தாங்கி வெளிவந்த கலை, இலக்கிய மாத இதழ் 'இதயம்'. சி.மகேஸ்வரன் எழுத்தாளர் இந்து மகேஸ் என்று இப்பதிவுக்கான தனது எதிர்வினையொன்றில் எழுத்தாளர் வி.ரி.இளங்கோவன் அறியத்தந்திருந்தார். இன்றுதான் எழுத்தாளர் இந்து மகேஸ்தான் இதயம் சஞ்சிகை ஆசிரியர் என்னும் விடயத்தை முதன் முறையாக அறிந்துகொண்டேன். தகவலுக்கு நன்றி இளங்கோவன் அவர்களே.

அதில் 'எங்கள் கலைஞர்' என்னும் பகுதியில் ஒவ்வொரு கலை, இலக்கியவாதியை அறிமுகப்படுத்துவார்கள். இதயம் சஞ்சிகையின் அக்டோபர் 1971 இதழில் எங்கள்

கலைஞர் பகுதியில் அறிமுகப்படுத்திய இளங்கலைஞரின் பெயரைப்பார்த்ததும் உள்ளமுற்சாகத்தால் துள்ளிக்குதித்தது. அக்கலைஞர் வேறு யாருமல்லர் ஓவியர் மணியம்தான். ஒருகணம் என் பால்ய, பதின்மப்பருவங்களில் நான் பார்த்துக்களித்த கட் அவுட்டுகளின் நினைவுகள் நெஞ்சில் வந்து சென்றன.

இப்பகுதியில் அவருடனான சிறியதொரு நேர்காணல் இடம் பெற்றிருந்தது. அதிலிருந்து அவரைப்பற்றிய மேலதிகத் தகவல்கள் சில கிடைத்தன. அவர் இரண்டாம் உலகயுத்தக் காலகட்டத்தில் சுண்டிக்குளியிலிருந்த மகேந்திரா திரையரங்கில் வேலைக்குச் சேர்ந்திருக்கின்றார். அங்கு இவரிடம் திரைப்பட விளம்பரங்கள் பகுதி விடப்பட்டிருக்கின்றது. சுயமாகத் தன் திறமையினால் கற்றுக்கொண்ட ஓவியத் திறமையினைப்பாவித்து அன்றிலிருந்து திரைப்படங்களுக்கான விளம்பரங்களை வரைவதை இவர் தொழிலாகத் தொடங்கியிருக்கின்றார். நவீன ஓவியம் இவரைக்கவரவில்லையென்பதையும் நேர்காணல் புலப்படுத்துகின்றது. அதே சமயம் ஓவியத்துறையில் ஈடுபடுபவர்கள் ஒரு குருவின் கீழ் அதனைக்கற்க வேண்டுமென்றும் வலியிறுத்தும் இவருக்குத் தனக்கு அச்சந்தர்ப்பம் வாய்க்கவில்லையே என்பதில் கவலையுண்டு. அதே சமயம் ஓவியக் கண்காட்சிகளை நடத்த வேண்டும், ஓவியக் கல்லூரியை நிறுவ வேண்டும், இவற்றின் மூலம் ஓவியக் கலைஞர்களை உருவாக்க வேண்டும் என்னும் ஆசை மிக்கவராகவும், அதற்கான பணியில் ஈடுபட்டுள்ளதாகவும் நேர்காணலில் குறிப்பிடுகின்றார். அதில் எவ்வளவு தூரம் வெற்றி பெற்றார் என்பது தெரியவில்லை. கட் அவுட்டுகள் தவிர வேறு வகையான ஓவியங்களை வரைவதாகவும் குறிப்பிட்டிருக்கின்றார். ஆனால் அவ்வோவியங்களைப்பற்றிய விபரங்களைக் குறிப்பிடவில்லை. தான் வரைந்த கட் அவுட்டுகளில் தனக்கு மிகவும் பிடித்த கட் அவுட் அடிமைப்பெண் எம்ஜிஆருக்காக வரைந்த 54 அடி உயரமான கட் அவுட் என்கின்றார். யாழ் ராணி திரையரங்கின் முன் காட்சியளித்த அடிமைப்பெண் எம்ஜிஆர் கட் அவுட் நினைவுக்கு வருகின்றது.

நல்லூர்ப்பகுதியைச் சேர்ந்த இவரின் முழுப்பெயர் சுப்பிரமணியம். இவரைப்பற்றி மேலும் அறிய வேண்டுமென்ற ஆவலைத் தூண்டிய நேர்காணல் இந்நேர்காணல். அப்பக்கங்களை இங்கு பகிர்ந்துகொள்கின்றேன்.

கட்டுரை வெளியான 'இதயம்'சஞ்சிகைக்கான இணைப்பு:
http://noolaham.net/project/27/2642/2642.pdf

# 37. ராஜா திரையரங்கில் சாதனை படைத்த ‘ஒளி விளக்கு’




யாழ் ராஜா திரையரங்கின் உரிமையாளரான அமரர் எஸ்.தியாகராஜா அவர்கள் இலங்கைத் தமிழ் மக்கள் மத்தியில் 'எஸ்.ரி.ஆர்' என்று நன்கறியப்பட்டவர். எம்ஜிஆர் போல் தானும் மூன்றெழுத்தில் அறியப்பட வேண்டுமென்பதற்காக 'எஸ்.ரி.ஆர்' என்று தன் நிறுவனத்துக்கு பெயர் வைத்தாரென்று தன் சுயசரிதையில் குறிப்பிட்டுள்ளார். இச்சுயசரிதையை அண்மையில் அவரது குடும்பத்தார் வெளியிட்ட 'எஸ்.ரி.ஆர் நினைத்ததை முடிப்பவர்' என்னும் நூலில் காணலாம்.

எம்ஜிஆரின் படங்களான காவல்காரன், ஒளிவிளக்கு, நீரும் நெருப்பும் ஆகியவை யாழ் ராஜாவில் வெளியாகின. இவற்றில் காவல்காரன், ஒளிவிளக்கு ஆகியவை 100

நாட்களைக் கடந்து ஓடின. ஒளிவிளக்கு மறு வெளியீட்டிலும் 100 நாட்களைக் கடந்து ஓடியது குறிப்பிடத்தக்கது.

ஒளி விளக்கு இரண்டாவது தடவை யாழ் ராஜாவில் வெளியாகி 100 நாட்களைக் கடந்து ஓடியபோது வெளியான ஈழநாடு பத்திரிகை விளம்பரத்தில் எந்தப் பழைய படமும் இவ்விதம் ஓடவில்லையென்று குறிப்பிடப்பட்டுள்ளது. நான் அறிந்து இலங்கையில் ஒரு நடிகரின் திரைப்படம் மறு வெளியீட்டில் 100 நாட்களைக் கடந்து ஓடியது என்றால் எம்ஜிஆரின் ஒளி விளக்கு திரைப்படம். இன்னுமொரு திரைப்படமும் மறு வெளியீட்டில் 100 நாட்களைக் கடந்து ஓடியது. அது 'பாக்தாத் திருடன்'. கொழும்பு ஜெஸிமா திரையரங்கில் ஓடியதாக நினைவு. ஆனால் அத்திரைப்படம் முதல் வெளியீட்டில் 100 நாட்கள் ஓடியதா என்பது தெரியவில்லை.

## 38. 'செலூலாயிட்' மீதான கீறல்கள் (Scratches on Celluloid) என்னுமொரு ஆவணக்காணொளி!

'செலூலாயிட்' மீதான கீறல்கள் (Scratches on Celluloid) என்னுமொரு ஆவணக்காணொளி பார்த்தேன். முகநூல் நண்பர் ராசையா காந்தீபன் அனுப்பியிருந்தார். அவருக்கு நன்றி.

இக்காணொளியை இயக்கியிருப்பவர்கள் திமோதி பி.ஏ.கூப்பர், விந்தியா புத்பித்தியா (Timothy P.A. Cooper and Vindhya Buthpitiya.) . தயாரித்திருப்பவர் அபீரா அரீவ் பஷீர் Abeera Arif-Bashir).

இக்காணொளி யாழ்ப்பாணம், லாகூர் ஆகிய நகரங்களில் யுத்தச் சூழல் சினிமாவுக்கு ஏற்படுத்திய பாதிப்புகளைப்பற்றியும், யுத்தகாலத்தில் யாழ் நகரில் இயங்கிய 'மினி - தியேட்டர்'கள் பற்றியும் பேசுகிறது.

ஒரு காலத்தில் மேற்படி நகரங்களில் சினிமா எவ்விதம் மக்களின் வாழ்வில் முக்கிய இடத்தைப்பிடித்திருந்தது, அதன் இன்றைய நிலை என்ன  என்பதைக் காணொளி விளக்குகின்றது.

யாழ் மனோஹரா தியேட்டரின் இன்றைய  உரிமையாளருடனான உரையாடல், யாழ் ராஜா திரையரங்கின் உரிமையாளர் தியாகராஜா அவர்களுடனான உரையாடல்கள் ஆகியவற்றையும் உள்ளடக்கியுள்ள காணொளி.

மனோஹரா தியேட்டரின் புதிய உரிமையாளர் கூறிய ஒரு விடயம் ஆச்சரியத்தைத் தந்தது. அவர் கூறுகின்றார் முன்பு யாழ்ப்பாணத்தில் மக்கள் வேலை வாய்ப்புகளின்றி, நிவாரணங்களில் தங்கியிருந்தார்கள். அக்காலகட்டத்தில் சினிமா அவர்களுக்கு முக்கியமாகவிருந்தது. தவறான கூற்று. இயற்கை வஞ்சித்தபோதும் யாழ் மாவட்ட மக்கள், எப்பிரிவினராயினும், கடுமையான உழைப்பாளிகள். யாழ் மாவட்டம், யாழ் நகர் எல்லாமே உயிர்த்துடிப்புடன் விளங்கிய காலகட்டம். அக்காலகட்டத்தில் சினிமா முக்கியதொரு பொழுதுபோக்காக இருந்ததென்பதே உண்மை.

யாழ் ராஜா உரிமையாளர் தியாகராஜா அவர்கள் எவ்விதம் தான் ஆரம்பத்தில் தமிழ்த்திரைப்படங்களைத் திரையிட அனுமதிக்காகச் சிரமப்பட வேண்டியிருந்ததென்பதையும், அச்சமயத்தில் இலங்கைக்கு வருகை தந்த எம்ஜிஆருடன் ஏற்பட்ட நட்பு காரணமாக எம்ஜிஆரின் 'காவல்காரன்' தனக்குக் கிடைத்தது பற்றியும் , 'காவல்காரன்' எவ்விதம் வசூல் சாதனைகளை நாட்டின் பல பாகங்களிலும் ஏற்படுத்தியது என்பதையும் நினைவு  கூர்ந்தார்.

அத்துடன் இலங்கையில் 'காவல்காரன்' நூறாவது நாளைக் கொண்டாட விரும்பி எம்ஜிஆர், ஜெயலலிதாவை அழைத்தபோது விசா கிடைப்பதில் ஏற்பட்ட சிக்கல் காரணமாகத் தமிழகத்தில் அந்நிகழ்ச்சியை நடத்தியதாகவும், அப்போது ஜெமினி வாசன் தனது படமான 'ஒளி விளக்கு' திரைப்படத்தைத் தனக்குத் தர உறுதியளித்தது பற்றியும், அப்படத்தை இலங்கையில் திரையிடுவதற்கு ஏற்பட்ட முட்டுக்கட்டைகள் பற்றியும் அந்நினைவு கூர்தலில் குறிப்பிட்டார். பின்னர் ஒளிவிளக்கு திரையிடப்பட்டபோது யாழ் ராஜா திரையரங்கில் பல வசூல் சாதனைகளை ஏற்படுத்தியது குறிப்பிடத்தக்கது. இரு தடவைகள் 100 நாட்களைக் கடந்து ஓடியது  நினைவிலுள்ளது.

மேற்படி காணொளியில் என் கவனத்தை ஈர்த்த விடயங்களிலொன்று. யாழ் மனோஹரா தியேட்டரின் வெளிப்புற, உட்புறங்களை வெளிப்படுத்தும் காட்சிகள்தாம்.

காணொளியிலிருந்து அவற்றை வெட்டி இங்கு பதிவிட்டுள்ளேன். மனோஹராவின் திரையரங்கு, முற்புறத் தோற்றம், பக்கத்தோற்றம், புரஜக்டர்கள் தோற்றம் இவையெல்லாம் பழைய நினைவுகளை எழுப்பின. எம் பால்ய, பதின்மப் பருவங்களில் எம் வாழ்வுடன் பின்னிப்பிணைந்த திரையரங்குகளிலொன்று மனோஹரா. இதயக்கனி, உலகம் சுற்றும் வாலிபன், இதய  வீணை, பல பழைய தமிழ்ப்படங்கள், ஆங்கிலப்படங்கள் என அங்கு பார்த்த திரைப்படங்கள் பல. எல்லாமே இன்று நினைவில் நிழலாடுகின்றன.

# 39. மறக்க முடியாத 'பேசும் படம்'

என் பால்யபருவத்தில் வீடே சஞ்சிகைகள், பத்திரிகைகளால் நிறைந்திருந்தது என்பது பற்றி அடிக்கடி என் பதிவுகளில் கூறியிருக்கின்றேன். அதற்குக் காரணம் அப்பா. சஞ்சிகைகள் என்றதும் நினைவுக்கு வரும் சினிமா பற்றிய சஞ்சிகைகள் 'பேசும் படம்' & 'பொம்மை'. இவற்றில் 'பேசும் படம்' கைக்கடக்கமான, குமுதம் சஞ்சிகை அளவில் வெளியாகிக்கொண்டிருந்தது. பின்னாட்களில் அது 'பொம்மை' மாதிரி வடிவெடுத்ததையும் அவதானித்திருக்கின்றேன். ஆனால் அப்போதெல்லாம் 'பேசும் படம்' பார்க்கும் ஆவலிலிருந்து என் கவனம் வேறு திசைகளை நோக்கிப் பறக்கத்தொடங்கி விட்டது. ஆனால் என் பால்யபருவத்தில் 'பேசும் படம்' , 'பொம்மை' சஞ்சிகைகளில் மூழ்கியிருந்த காலகட்டம் மட்டும் பசுமையாக இன்னும் ஆழ்நெஞ்சில் படிந்துள்ளது.

'பேசும் படம்' அழகான வர்ணங்களில் , அட்டையில் பெரும்பாலும் திரைப்படங்களின் விளம்பரங்களுடன் வெளியாகிக்கொண்டிருந்தது. இதற்கு மாறாகப் 'பொம்மை' சஞ்சிகையின் அட்டைகளில் திரைப்பட ஆளுமைகளின் புகைப்படங்கள் இடம் பிடித்திருந்தன.

'பேசும்படம்' சஞ்சிகையின் உள்ளே திரைப்பட விளம்பரங்கள், திரையுலகச் செய்திகள் இவற்றுடன் ஆரம்பத்தில் நான்கைந்து பக்கங்கள் திரையுலக ஆளுமைகளின், திரைப்படங்களின் வர்ணப்புகைப்படங்களை உள்ளடக்கி வெளியாகிக்கொண்டிருந்தன. அவ்விதமாக வெளியாகிய புகைப்படங்களில் 'ஆயிரத்தில் ஒருவன்' திரைப்படத்திலுள்ள இடுப்பில் கைகளை வைத்துக்கொண்டு கம்பீரமாக நிற்கும் எம்ஜிஆரின் தோற்றம் இன்னும் மனக்கண்ணில் தெரிகின்றது.

'பேசும்படம்' நாற்பதுகளிலிருந்து வெளியாகிக்கொண்டிருந்த சஞ்சிகை. இப்பொழுதும் வெளியாகின்றதா தெரியவில்லை. அவற்றின் அட்டைப்படங்களை அண்மையில் இணையத்தில் கண்டபோது நினைவுகள் அக்காலகட்டத்தை நோக்கிச் சிறகடிக்கத்தொடங்கின. உண்மையில் தமிழ்த்திரைப்படங்கள் பற்றிய ஆய்வுகளுக்குப் பேசும்படம் சஞ்சிகை இதழ்கள் பெரிதும் துணை செய்வன.

# 40. விந்தை மிகு விந்தன்



'பாலும் பாவையும்' நாவலிலிருந்து..

எழுத்தாளர் விந்தனின் படைப்புகள் சமூகச்சிரழிவுகளைச் சீற்றத்துடன் எடுத்துரைப்பவை. எழுத்தாளராக, புரூவ் ரீடராக, திரைப்பட வசனகர்த்தாவாக, திரைப்படப்பாடலாசிரியராக, ஊடகவியலாளராக எனப்பன்முகங்களைக் கொண்டவர்

எழுத்தாளர் விந்தன். கலைஞர் கருணாநிதியின் பராசக்தியில் வரும் 'ஓடினாள். ஓடினாள். வாழ்க்கையின் ஓரத்திற்கே ஓடினாள்' என்னும் புகழ்பெற்ற வசனத்திற்கு மூலம் விந்தனின் 'பாலும் பாவையும்' நாவலே. இந்நாவலின் முடிவில் கதையின் நாயகி அகல்யா கடலில் மூழ்கித் தற்கொலை செய்வதற்காக ஓடுவாள். அதனை விந்தன் 'ஓடினாள். ஓடினாள். ஓடிக்கொண்டே இருந்தாள்' என்று எழுதுவார். இதுவே பராசக்தியில் 'ஓடினாள். ஓடினாள் . வாழ்க்கையின் ஓரத்திற்கே ஓடினாள்' என்று வரும். இதனை விந்தனின் திரையுலகப் பங்களிப்பு பற்றிய நூலில் மு.பரமசிவம் சுட்டிக்காட்டியிருப்பார். கலைஞர் அவர்களே விந்தனின் மேற்படி நாவலைப் பாராட்டினார் என்றும் அவர் குறிப்பிட்டிருப்பார்.

விந்தன் சிறந்த எழுத்தாளர் , திரைப்படக்கதை, வசனகர்த்தா மட்டுமல்லர் சிறந்த திரைப்படப்பாடலாசிரியர் கூடத்தான். குலேபகாவலியில் வரும் 'மயக்கும் மாலைப்பொழுதே வா', பார்த்திபன் கனவு படத்தில் வரும் 'இதய வானின் உதய நிலவே' போன்ற பாடல்களை எழுதியவர் அவரே.பார்த்திபன் கனவு திரைப்படக்கதை , வசனகர்த்தாவும் விந்தனே.

எனக்கு விந்தன் என்றால் உடனே ஞாபகத்து வருவது அவரது 'பாலும் பாவையும்' நாவல் (கல்கியில் ஐம்பதுகளில் தொடராக வந்த நாவலை நான் வாசித்தது அறுபதுகளின் இறுதியில் ராணி முத்து பிரசுரத்தினர் வெளியிட்டபோதுதான்) , தினமணிக்கதிரில் அவர் எழுதிய பாகவதர் வரலாறு, மிஸ்ட்டர் விக்கிரமாதித்தன் கதைகள்... ஆகியவைதாம் . இவை என் வாசிப்பின் ஆரம்பக் கட்டத்தில் கதிரில் தொடராக வெளிவந்தவை. எழுத்தாளர் விந்தனைப் பற்றிய , விந்தன் எழுதிய அவரது நாட்டுடமையாக்கப்பட்ட படைப்புகளைத் 'தமிழ் இணையக் கல்விக்கழக'த்தின் இணையத்தளத்தில் வாசிக்கலாம்:

# 41. பால்ய காலத்து அழியாத கோலங்கள்:மாயாவியின் வாடாமலர்.




ராணிமுத்துப் பிரசுரமாக வெளியான நாவல்களிலொன்று எழுத்தாளர் மாயாவியின் வாடாமலர். . மு.வரதராஜனும் , எழுத்தாளர் சு.சமுத்திரமும் இதே பெயரில் நாவல்கள் எழுதியிருக்கின்றனர். வாடாமல்லி (மாயாவியின்) நாவல் கதைக்கரு ஞாபகத்திலில்லை. ஆனால் ஒரு விடயம் மட்டும் இன்னும் ஞாபகத்திலுள்ளது. அது நாவலின் ஒவ்வோர் அத்தியாயமும் மலரொன்றின் பெயரில் அமைந்திருக்கும். ராணிமுத்து அட்டைப்படத்துக்காக மீண்டுமொருமுறை எழுத்தாளர் ஜவாத் மரைக்காருக்கு நன்றி. வாடாமல்லி நாவலின் கதைக்கருவை அவர் ஞாபகப்படுத்தக் கூடும்.

எழுத்தாளர் மாயாவி அக்காலகட்டத்தில் புகழ்பெற்ற எழுத்தாளர்களிலொருவர். அவரது மூடுபனி என்னுமொரு நாவல் தொடராகக் கலைமகள் சஞ்சிகையில் வெளியானது ஞாபகத்திலுள்ளது. இலங்கைப்பத்திரிகைகளிலும் அவரது படைப்புகள் வெளியாகியுள்ளன. இவரது இயற்பெயர் எஸ். கே. இராமன். இவரைப்பற்றிக் கட்டுரையொன்றில் வெங்கட் சாமிநாதன் பின்வருமாறு கூறியிருப்பார்:

- ஐம்பது அறுபதுகளில் மிகவும் பிரபலமாக இருந்த ஒரு எழுத்தாளர், மாயாவி, கலைமகளில் அக்காலத்தில் நிறைய எழுதியவர், பம்பாய் வாசி, தில்லி வாசியானார். “எங்கே வேணாலும் எந்த கோவில்லேவேணாலும் சத்தியம் செய்யத் தயார். க.நா.சு. எழுதறதெல்லாம் எழுத்தே இல்லை. அவருக்கு இலக்கியமே என்னன்னு தெரியாது” என்று அவர் சொன்னபோது அவர் முகம் சிவந்து கிடந்தது. -

இவரைப்பற்றி விக்கிபீடியா பின்வருமாறு கூறுகின்றது:

- மாயாவி என்ற புனைபெயரில் எழுதிய எஸ். கே. இராமன் தமிழ்ச் சிறுகதை, புதின ஆசிரியர் ஆவார். பம்பாயில் பதினைந்து ஆண்டுகள் பணியாற்றினார். இந்திய அரசாங்கத்தின் செய்தி ஒலிபரப்பு இலாகாவில் பம்பாய் கிளையில் பணியாற்றியுள்ளார்.

செங்கோட்டை வட்டத்தைச் சேர்ந்த சாம்பூர் வடகரை எனும் ஊரில் 1917 ஆம் ஆண்டு பிறந்தார். இவர் ஏறத்தாழ 150 சிறுகதைகளும் 9 நாவல்களும் எழுதியுள்ளார். இவரது முதல் சிறுகதை, ஜாதி வழக்கம் என்பது. இக்கதைப் பலராலும் பாராட்டப்பட்டது. சாமுண்டியின் சாபம் எனும் தலைப்பில் உள்ள சிறுகதைகள்,அன்பின் உருவம் எனும் தலைப்பில் உள்ள நாவல் ஆகியவை குறிப்பிடத்தக்கவை. நாவல்கள்: அகதி,  மக்கள் செல்வம், சலனம்,ஒன்றே வாழ்வு

# 42. ஜெயகாந்தன் நினைவாக.......



எழுத்தாளர் ஜெயகாந்தனின் நினைவு தினம் ஏப்ரில் 8. என் வாசிப்பனுவத்தில் மறக்க முடியாத இலக்கிய ஆளுமை. அறுபதுகள், எழுபதுகள் ஜெயகாந்தனின் எழுத்துலகப் பொற்காலம். உண்மையில் வெகுசன இதழ்களான விகடன், கல்கி, தினமணிக்கதிர் ஆகியவை அவருக்குக் களமமைத்துக்கொடுத்தன என்பது வியப்புக்குரியது. விகடனில் அவரது 'ஒரு நடிகை நாடகம் பார்க்கின்றாள்' தொடராக வெளியானது. அத்துடன் அவரது மிகவும் புகழ்பெற்ற நாவலான 'ஒரு மனிதன் ஒரு வீடு ஒரு உலகம்' கோபுலுவின் உயிர்த்துடிப்பான சித்திரங்களுடன் தொடராக வெளியானது. கோபுலுவின் ஓவியங்களுடன் அந்நாவலைப் படிப்பது அற்புதமானதோர் வாசிப்பனுபவம். நாவலின் பாத்திரங்களை உள்வாங்கி, அவற்றின் உளவியலை உள் வாங்கி மிகவும் சிறப்பாக அவ்வோவியங்களைப் படைத்திருப்பார் கோபுலு.

விகடனில் ஜெயகாந்தனின் மிகவும் புகழ்பெற்ற குறுநாவல்கள் பல வெளிவந்தன. 'யாருக்காக அழுதான்?", 'உன்னைப்போல் ஒருவன்', 'அக்கினிப் பிரவேசம்', 'ஆடும் நாற்காலிகள் ஆடுகின்றன', 'கோகிலா என்ன செய்து விட்டாள்' போன்ற பல குறுநாவல்களை விகடன் பிரசுரித்தது. கூடவே பல முத்திரைச் சிறுகதைகளையும் பிரசுரித்தது. 'உன்னைப்போல் ஒருவ'னை அவர் திரைப்படமாகத் தயாரித்தார். வாங்க விநியோகஸ்தர்கள் இல்லாது போனாலும் விருது பெற்ற திரைப்படமது.

ஜெயகாந்தனின் 'கைவிலங்கு' குறுநாவல் கல்கியில் வெளியானது. இதுவே பின்னர் 'காவல் தெய்வ'மாகத் திரைக்கு வந்தது. அதே பெயரில் ராணிமுத்து பிரசுரமாகவும் வெளியானது.

எழுத்தாளர் சாவியை ஆசிரியராகக் கொண்டு வெளியான 'தினமணிக்கதிர்' ஜெயகாந்தனின் 'ஒரு பிடி சோறு' சிறுகதைத்தொகுப்பிலிருந்த சிறுகதைகள் பலவற்றை மீள்பிரசுரம் செய்தது. அவருக்குச் சாகித்திய அகாதெமி விருதினைப் பெற்றுத்தந்த 'சில நேரங்களில் சில மனிதர்கள்' கதிரில் முதலில் 'காலங்கள் மாறும்' என்னும் பெயரில் ஆரம்பமாகி பின்னர் 'சில நேரங்களில் சில மனிதர்களா'கத் தொடர்ந்தது. பின்னர் அதுவே 'கங்கை எங்கே போகின்றாள்' எனத்தொடர்ந்தது. கோபுலுவின் உயிர்த்துடிப்பான ஓவியங்களுடன் வெளியான நாவல்கள் அவை. விகடனில் அவர் எழுதிய 'அக்கினிப் பிரவேச'த்தின் தொடர்ச்சியான நாவல்களும் கூட. அக்காலகட்டத்தில்தான் ஜெயகாந்தனின் 'ரிஷி மூலம்' கதிரில் வெளியானது. மிகுந்த சர்ச்சைகளை உருவாக்கியது.  இனிமேல் கதிரில் இதுபோன்ற கதைகளை வெளியிட மாட்டோமென்று ஆசிரியரை அறிவிக்கச் செய்த குறுநாவலது.

## 43. எழுத்தாளர் சாண்டில்யன் பற்றிய நினைவுகள்...



என் வெகுசன எழுத்து வாசிப்பில் எழுத்தாளர் சாண்டில்யனுக்கும் (இயற்பெயர் பாஷ்யம்) முக்கியமானதோரிடமுண்டு. மகாகவி பாரதியார் மறைந்த அதே செப்டம்பர் 11இல்தான் சாண்டில்யனும் மறைந்தார். பேராசிரியர் பசுபதி அவர்களின் 'பசுபதிவுகள்' வலைப்பதிவில் வெளியான சாண்டில்யனின் நினைவு நாட் பதிவின் மூலம் சாண்டில்யனின் நினைவு தினமும் செப்டெம்பர் 11 என்பதையறிந்தேன்.

மிக நீண்ட சொற்றொடர்களை உள்ளடக்கிய இவரது நாவல்களை பரபரப்பான நவகாலச்சூழலில் வாழும் வாசகர்களை வாசிக்க வைத்த எழுத்துத்திறமை மிக்கவராக விளங்கியவர் சாண்டில்யன். உதாரணத்துக்கு ஒரு வரி:

"'காஞ்சி இருக்கக் கலிங்கம் குலைந்த களப்போர் பாடத் திறமினோ' என்று கலிங்கத்துப் பரணியில் ,பரணிக்கோர் புலவரான செயங்கொண்டார் தமிழக மகளிரை அறைகூவி அழைத்து, மகளிர் தத்தம் கணவருடன் நடத்திய கலவிப் போரையும் கழற்சென்னியான முதலாம் குலோத்துங்கன் கலிங்கத்தின்மீது நடத்திய ஆயுதப் போரையும் சிலேடை கோத்துப் பாடியது பல வருஷங்களுக்குப் பின்புதானென்றாலும், அந்தப் போருக்கு வித்திடுவதற்குப் பல ஆண்டுகளுக்கு முன்பே காரணமாயிருந்த கலிங்கத்தின் பாலூர்ப்பெருந்துறை, சித்திரா பௌர்ணமியின் அந்திமாலை நேரத்தில் இயற்கை வனப்பின் எல்லையை எட்டிக்கொண்டிருந்தாலும், இயற்கை வனப்புடன் இணையும் எத்தனை எத்தனையோ செயற்கைக் கஷ்டங்களையும் சுட்டிக்காட்டிச் சென்றுகொண்டுதானிருந்தது."

இது அவரது புகழ்பெற்ற 'கடல்புறா' நாவலின் முதல் பாகத்தின் ஆரம்ப வரி. ஒரு வரி ஒரு பந்தி வரை நீண்டுள்ளது. இவ்விதமான அவரது நீண்ட வரிகளுக்கு அடிமையாகிக் கிடந்தவர்கள் நாம்.. இன்றும் அவரது நூல்கள் விற்பனையிலுள்ளன என்பது அவரது எழுத்துக்குக் கிடைத்த வெற்றி.

பொன்னியின் செல்வன் வந்தியத்தேவனுக்கு அடுத்து என்னைக் கவர்ந்த வரலாற்றுப் பாத்திரம் இளைய பல்லவனென்று கடல்புறாவில் அழைக்கப்படும் கருணாகரத் தொண்டைமான். இளைய பல்லவன் என்னைக் கவர்ந்ததற்கு இன்னுமொரு




காரணமுமுண்டு. அது: யாழ்ப்பாண மாவட்டத்தின் வடமராட்சியிலுள்ள தொண்டைமானாறுக் கால்வாயை வெட்டுவித்தவன் இவனே என்பது வரலாறு. இவனை வைத்துக் செயங்கொண்டார் கலிங்கத்து வெற்றியை மையமாக வைத்துக் கலிங்கத்துப் பரணி பாடியுள்ளதும் குறிப்பிடத்தக்கது. முதலாம் குலோத்துங்கனின் படைத்தளபதியான கருணாகரத்தொண்டைமான் வரலாற்றுப் புகழ்மிக்க சோழர் படைத்தளபதிகளில் முதன்மையானவன்.

சாண்டில்யன் சுதந்திரப் போராட்ட வீரர்களிலொருவர். தமிழ்த்திரையுலகிலும் இவரது பங்களிப்புண்டு.

என் பால்ய பருவத்தில் வீட்டில் அப்பா கல்கி, விகடன், அம்புலிமாமா, கலைமகள், தினமணிக்கதிர், மஞ்சரி என்று தமிழகச் சஞ்சிகைகள் பலவற்றை வாங்கினார். ஆனால் குமுதம் சஞ்சிகையை மட்டும் வாங்கவில்லை. அக்காலத்தில் சாண்டில்யனின் நாவல்கள் குமுதம் சஞ்சிகையிலேயே வெளியாகிக்கொண்டிருந்தன. அதனால் கல்கி, ஜெகசிற்பியன், அகிலன் , நா,பார்த்தசாரதி, மீ.ப.சோமு போன்ற எழுத்தாளர்களின் வரலாற்று நாவல்களையறிந்திருந்த எனக்குச் சாண்டில்யனின் வரலாற்று நாவல்களை அறிந்திருக்கும் வாய்ப்பு கிட்டவில்லை.

அச்சமயத்தில் வவுனியா மகாவித்தியாலயத்தில் என்னுடன் படித்துக்கொண்டிருந்த ரிஷாங்கன் என்னும் மாணவரின் வீட்டில் குமுதம் வாங்கிக்கொண்டிருந்தார்கள். அவர் மூலமே எனக்குக் குமுதம் சஞ்சிகை முதலில் அறிமுகமாகியது. அதில் வெளியாகிக்கொண்டிருந்த சித்திரக்கதைத்தொடரான 'கடற்கன்னி' என்னை மிகவும் கவரவே அப்பாவிடம் குமுதம் சஞ்சிகையையும் வாங்குமாறு கூறினேன். அப்பாவும் வாங்கத்தொடங்கினார். அப்பொழுது குமுதத்தில் சாண்டில்யனின் ராஜமுத்திரை வெளியாகிக்கொண்டிருந்தது. ஏற்கனவே முதற்பாகம் முடிந்து இரண்டாவது பாகம் தொடங்கியிருந்தது. இரண்டாம் பாகத்தில் இந்திரபானு என்னும் தளபதியே நாயகன்.

முதற்பாகத்தில் சேரமன்னன் வீரரவியால் கடத்தப்பட்ட அவனது காதலியான பாண்டிய ராஜகுமாரியை மீட்பதில் பெரும்பங்கு வகித்தவன் இந்திரபானு. நான் வாசித்த முதலாவது சாண்டில்யனின் நாவல் ராஜமுத்திரை நாவலின் இரண்டாம் பாகம்தான். வெகுகாலத்துக்குப் பின்னரே ராஜமுத்திரையின் முதற்பாகத்தைப் படித்தேன்.

அதன் பின்னர் ராணிமுத்து பிரசுரங்களாக வெளியான சாண்டில்யனின் ஜீவபூமி, உதயபானு, இளையராணி , மஞ்சள் ஆறு ஆகிய நாவல்களை வாசித்தேன். இவை பெரிய நாவல்களல்ல. இவற்றில் ஜீவபூமி என்னை மிகவும் கவர்ந்த நாவல். அதில்வரும் ராஜபுதனத்து வீரனான ரதன் சந்தாவத் சலும்பரா என்னை மிகவும் கவர்ந்த சாண்டில்யனின் நாயகர்களில் ஒருவர்.

இதன் பின்னர் என் வாழ்க்கை யாழ்ப்பாணத்தை மையமாகக் கொண்டு மாறியபோதே ஆச்சி வீட்டிலிருந்த பழைய குமுதம் சஞ்சிகைகளில் வெளியாகியிருந்த சாண்டில்யனின் கடல்புறா நாவலின் முதற்பாகத்தின் ஆரம்ப அத்தியாயங்கள் சில கிடைத்தன. அவற்றைப் படித்தபோது இளைய பல்லவனும், காஞ்சனாதேவியும் என்னை மிகவும் கவர்ந்தார்கள். அவர்களைக் குமுதத்தில் வரைந்த ஓவியர் லதாவின் ஓவியங்களுக்கும் நான் அடிமையாகிப்போனேன்.

சில வருடங்களுக்கு முன்னர் கடல்புறாவின் மூன்று  பாகங்களும் வெளியானபோது வெளிவந்த லதாவின் ஓவியங்களுடன் இணையத்தில் கிடைத்தன. கடல்புறாவின் ஏனைய பாகங்களையும் ஓவியர் லதாவின் ஓவியங்களுடன் வாசிக்க வேண்டுமென்று என் பதின்ம வயதுகளில் எண்ணினேன். அவ்வாசை அப்போதுதான் நிறைவேறியது.

கடல்புறாவுக்கு இன்னுமோர் அரசியல் முக்கியத்துவமுண்டு. ஊடகச் செய்திகளின்படி விடுதலைப்புலிகளின் தலைவர் அமரர் வேலுப்பிள்ளை பிரபாகரனுக்குப் பிடித்த வெகுசனப்புனைகதைகள் இரண்டு: ஒன்று ர.சு.நல்லபெருமாளின் 'கல்லுக்குள் ஈரம்'. அடுத்தது சாண்டில்யனின் 'கடல்புறா'. புலிகளின் கப்பல்களிலொன்றுக்குப் பெயரும் 'கடல்புறா'தான்.

இவ்விதமாகப் பல்வகைகளில் கடல்புறாவுக்கு முக்கியத்துவமிருந்தது. ஸ்ரீலங்கா புத்தகசாலையில் புத்தக அலமாரிக்குள் அடுக்கி வைக்கப்பட்டிருந்த கடல்புறாவின் மூன்று பாகங்களையும் வாங்கப்பணமற்று ( மூன்று பாகங்களும் ரூபா 120 விலையென்று ஞாபகம்)  ஆசையுடன் அவற்றைப்பார்த்து  ,பத்து ரூபாவுக்கு சாண்டில்யனின் 'பல்லவ திலகம்' நாவலை வாங்கி வந்ததை இப்போதும் நினைவு கூருகின்றேன். இக்கடல்புறா என்றதும் நினைவுக்கு வருமின்னுமொரு விடயம்: என் உறவுக்கார அக்காவொருத்தியின் சிநேகிதியொருவர்  ஒவ்வொரு முறை அவரைச் சந்தித்து  மீண்டும் வீடு திரும்புகையிலும் அவரை அவரது வீடு மட்டும் நான் பத்திரமாகக் கூட்டிச் சென்று விடுவதற்காகச் செய்யும் தந்திரம் அவரது சித்தன்கேணி உறவினரிடமிருக்கும் கடல்புறா நாவலை மறுமுறை வருகையில் கொண்டு வந்து தருவதாக அளிக்கும் சத்தியம்தான். இவ்விதம் அவர்  பல தடவைகள் நம்பிக்கையூட்டியிருப்பார். ஆனால் கடல்புறா ஒருபோதும் கிடைத்ததேயில்லை. இலண்டனில் வசித்து வந்த அவர் அண்மையில் மறைந்து விட்டார் என்பது துயர் தருவது.

இவ்விதமாகப் பால்ய , பதின்ம வயதுகளில் என்னை ஈர்த்த நாவல்களில் சிலவற்றை ஒரு நினைவுக்காக வாங்கி வைத்திருக்கின்றேன். அவற்றுள்  கடல்புறாவும் ஒன்று. அதே கடல்புறாவின் மூன்று பாகங்களையும் 'டொரோண்டோ' நூலகக் கிளையொன்று விற்பனைக்குப் போடப்பட்டிருந்தபோது வாங்கினேன். அம்மூன்று பாகங்களையும் நண்பரொருவருக்குக் கொடுத்துவிட்டேன்.

வானதி பதிப்பகம் வெளியிட்ட நூல்களில் அட்டைப்படம் சிறப்பாக அமைந்த நூல்களிலொன்று கடல்புறா என்பேன்.ஓவியர் லதாவின் கண்ணைக்கவரும் அட்டைப்பட ஓவியமே கடல்புறா என்றதும் முதலில் நினைவுக்கு வரும் ஓவியமென்பேன்.

இவரது 'மலைவாசல்' , 'மன்னன் மகள்' ஆகிய நாவல்களை யாழ் பொதுசன நூலகத்தில் இரவல் பெற்று வாசித்தேன்.

இவர் சமூக நாவல்களும் எழுதியுள்ளார். 'நங்கூரம்' குமுதம் சஞ்சிகையில்  தொடராக வெளியானது. ஆனந்த விகடனிலும் இவரது சமூக நாவலொன்று  தொடராக வெளியானது. இவரது வரலாற்று நாவல்கள் பெற்ற வரவேற்பு சமூக நாவல்களுக்குக் கிட்டவில்லை.

# 44. அமரர் அ.மா.சாமி (குரும்பூர் குப்புசாமி , கும்பகோணம் * அமுதா கணேசன்) நினைவுக் குறிப்புகள்!

அண்மையில் மறைந்த முன்னாள் ராணி வாராந்தரி ஆசிரியர் அ.மா.சாமி மறைவையொட்டிய காணொளியொன்றைப் பார்த்தபோது (எழுத்தாளர் அண்ணா கண்ணன் பதிவேற்றியது), பத்தியொன்றை வாசித்தபோது (எழுத்தாளர் ஜெயமோகன் தன் வலைப்பதிவில் எழுதியது) என் சிந்தனைக்குருவி சிறகடித்து என் பால்ய காலத்துக்கே சென்று, கும்மாளமிடத்தொடங்கி விட்டது. நான் வாசிக்கத்தொடங்கி அதிலேயே பித்துப்பிடித்திருந்த பால்ய பருவத்தில் எனக்கு ராணி வாராந்தரி இதழுடனும் சிறிதுகாலம் தொடர்பேற்பட்டது. அத்தொடர்பு இன்று வரைக்கும் மறக்க முடியாத தொடர்பாகவே நினைவுகளில் பதிந்து கிடக்கின்றது. ஒவ்வொருவருக்கும் அவரவர் வாழ்க்கைப்படிகளில் பல்வேறு பருவத்து நினைவுகளும் , நினைக்குந்தோறும் இன்பமளிக்கும் நினைவுகளாக நிலைத்து நின்று விடுகின்றன. அவ்வகையில் எனக்கும் ராணி வாராந்தரியுடனான நினைவுகளும் நிலைத்து நிற்கின்றன.

ராணி வாராந்தரியில் முகப்பு எப்பொழுதும் பெண்களை, குறிப்பாக நடிகைகளின் புகைப்படங்களைத் தாங்கி வெளியாவதுதான் வழக்கம். இன்றுவரை அது தொடர்ந்துகொண்டேயிருக்கின்றது. மிகவும் எளிய தமிழில் , தன் வாசகர்களுக்கேற்ப பல்வகைப்பட்ட படைப்புகளையும் தாங்கி வரும் ராணியின் நடுவில் ஓரிரு பக்கங்கள் சிறுவர்களுக்கானதாக வெளியாகிக்கொண்டிருந்த காலகட்டத்தில் நான் ராணி இதழினை விரும்பி வாசித்துக்கொண்டிருந்தேன். அதில் நிச்சயம் ஒரு பக்கச் சிறுவர் தொடர்கதையொன்றும் பிரசுரமாகும். அப்பொழுது அவ்விதம் பிரசுரமாகி எம்மையெல்லாம் கவர்ந்திருந்த சிறுவர் தொடர்கதை 'பேசும்சிலை'. நானும் , என் சகோதர, சகோதரிகளும் போட்டி போட்டு வாசித்த சிறுவர் தொடர்களிலொன்று அத்தொடர்நாவல். அத்தொடர் நின்று விட, நாமும் ராணி வாசிப்பதை நிறுத்தி விட்டோம். அத்தொடர்கதையை அழகாக 'பைண்டு' செய்து வைத்திருந்தோம்.

ராணியின் ஆசிரியராக 44 வருடங்கள் வரையிலிருந்த அ.மா.சாமி அவர்கள் ராணி, தினத்தந்தி ஆகியவற்றில் பல்வேறு புனைபெயர்களில் எழுதிக்கொண்டிருந்தார். அமுதா கணேசன் என்னும் பெயரில் எழுதும் அவரது தொடர்நாவல்களைப் பெண்கள் விரும்பி வாசிப்பார்கள். நீண்ட காலம் அமுதா கணேசன் ஒரு பெண் என்றே நினைத்திருந்தேன். குரும்பூர் குப்புசாமியென்னும் பெயரிலும் அவர் பல தொடர்கதைகளை ராணியிலும், தினத்தந்தியிலும் எழுதியுள்ளார். அவ்விதம் வெளியான தொடர்கதையொன்றின் ஒரு அத்தியாயத்தை மட்டும் வாசித்த நினைவுண்டு. அதில் இதய மாற்றுச் சத்திரச்சிகிச்சை செய்வதைப்பற்றி சம்பவமொன்றிருந்தது நினைவிலுண்டு. இவை தவிர கும்பகோணம் என்னும் பெயரிலும் அவர் நாவல்கள் எழுதியுள்ளார். அவ்விதம் எழுதிய நாவல்களிலொன்று 'பார் பார் பட்டணம் பார்' ராணிமுத்து வெளியீடாக அக்காலகட்டத்தில் வெளியாகியது.

அப்பொழுதெல்லாம் எனக்கு அ.மா.சாமி பற்றி எதுவுமே தெரியாது. ஆனால் குரும்பூர் குப்புசாமி, அமுதா கணேசன், கும்பகோணம் பற்றியெல்லாம் தெரிந்திருந்தது. பல வருடங்களுக்குப் பின்னரே அ.மா.சாமியே மேற்படி புனைபெயர்கள் பலவற்றில் எழுதினாரென்பதை அறிந்து கொண்டேன்.

ராணி என்றதும் அந்நிறுவனம் வெளியிட்ட ராணிமுத்து மாதநாவல்களின் நினைவுகளும் கூடவே தோன்றிவிடும். ஆரம்பத்தில் ஜெயகாந்தன், ஜெகசிற்பியன், அகிலன், மு.வரதராசன், காண்டேகர், ஜெயகாந்தன், அறிஞர் அண்ணா, கலைஞர் கருணாநிதி, பானுமதி ராமகிருஷ்ணா (நடிகை பானுமதி), சாண்டில்யன், சி.ஏ.பாலன், லக்சுமி, குரும்பூர்

குப்புசாமி, விந்தன், அமுதா கணேசன், கும்பகோணம், நாரண துரைக்கண்ணன், மாயாவி என்று எழுத்தாளர்கள் பலரின் புகழ்பெற்ற நாவல்கள் ராணிமுத்து நாவல்களாக மாதந்தோறும் வெளியாகியிருந்தன.

என்  வாசிப்புப் படிக்கட்டுகளில் அ.மா.சாமி ஆசிரியராகவிருந்தபோது வெளியான ராணி பத்திரிகைக்கும், ராணிமுத்து வெளியீடுகளுக்கும் நிச்சயம் மறக்க முடியாத இடமுண்டு. அவையெல்லாம் எம் குழந்தைப்பருவத்து அழியாத  கோலங்கள்.

அதே ராணி வாராந்தரியில்தான் முதன் முதலில் நான் மர்மக்கதை மன்னன் என்று அந்நாளில் அறியப்பட்ட நாஞ்சில் பி.டி.சாமியை முதன்  முதலில் அறிந்துகொண்டேன். அவரது தொடர்கதையொன்று , 'சிவப்புச் சேலை' என்று பெயரென்று நினைவு, வெளியாகிக்கொண்டிருந்தது. முதல் அத்தியாயத்தில்  பெண்ணோருத்தி மாடியொன்றிலிருந்து விழுந்து இறந்து விடுகின்றாள். அவளது மரணம் கொலையா , இல்லையா என்பதை அறிவதுதான் நாவலின் பிரதான கருப்பொருள். அவரது இன்னுமொரு தொடரொன்றும் நான் வாசிப்பதற்கு முதல் வெளியான ராணி இதழ்களில் வெளியாகிக்கொண்டிருந்தது. அதன் ஓரிரு அத்தியாயங்களை வாசித்திருக்கின்றேன். அத்தொடர் நாவலின் பெயர் : அழகியின் ஆவி.

ராணி என்றதும் நினைவுக்கு வரும் இன்னுமொரு விடயம். அதன் முதற்பக்கத்தில் வெளியாகும் குரங்கு குசாலா கேலிச்சித்திரம். அ.மா.சாமியே தினத்தந்தியில் அறுபதுகளில் தொடங்கி இன்று வரை வெளியாகிக்கொண்டிருக்கும் சிந்துபாத்தின் கன்னித்தீவு சித்திரத்தொடரை ஆரம்பித்து வைத்தவர். இதனையும் அண்மையில்தான் அறிந்துகொண்டேன்.

## 45. ஜெயகாந்தன் நினைவாக.......

எழுத்தாளர் ஜெயகாந்தனின் பிறந்த தினம் ஏப்ரில் 24.

எழுத்தாளர் ஜெயகாந்தன் என் வாசிப்பனுவத்தில் மறக்க முடியாத இலக்கிய ஆளுமை. வெகுசனப் படைப்புகளில் மூழ்கிக்கிடந்த பருவத்தில் வெகுசன ஊடகங்களினூடு, வித்தியாசமானவராக அறிமுகமாகி என்னைக் கவர்ந்தவர் ஜெயகாந்தன். இவர் பெயரை நான் முதன் முதலில் கேட்டது என் பெற்றோரின் உரையாடலொன்றின்போதுதான். அவர்கள் ஆனந்தவிகடனில் வெளியான இவரது 'ஆடும் நாற்காலிகள் ஆடுகின்றன', 'கோகிலா என்ன செய்து விட்டாள்' போன்ற முத்திரைக்கதைகளாக வெளியான குறுநாவல்களைப்பற்றி உரையாடியபோதுதான் முதன் முதலில் இவரது பெயரை நான் அறிந்துகொண்டேன்.

ஜெயகாந்தனின் 'கைவிலங்கு' குறுநாவல் கல்கியில் வெளியானது. இதுவே பின்னர் 'காவல் தெய்வ'மாகத் திரைக்கு வந்தது. அதே பெயரில் ராணிமுத்து பிரசுரமாகவும் வெளியானது. எழுத்தாளர் சாவியை ஆசிரியராகக் கொண்டு வெளியான 'தினமணிக்கதிர்' ஜெயகாந்தனின் 'ஒரு பிடி சோறு' சிறுகதைத்தொகுப்பிலிருந்த சிறுகதைகள் பலவற்றை மீள்பிரசுரம் செய்தது. இவரது புகழ்பெற்ற 'டிரெடில்', 'பிணக்கு', 'ஒரு பிடி சோறு', 'ராசா வந்துட்டாரு' போன்ற சிறுகதைகளை அப்போதுதான் வாசித்தேன்.

அவருக்குச் சாகித்திய அகாதெமி விருதினைப் பெற்றுத்தந்த 'சில நேரங்களில் சில மனிதர்கள்' கதிரில் முதலில் 'காலங்கள் மாறும்' என்னும் பெயரில் ஆரம்பமாகி பின்னர் 'சில நேரங்களில் சில மனிதர்களா'கத் தொடர்ந்தது. பின்னர் அதுவே 'கங்கை எங்கே போகின்றாள்' எனத்தொடர்ந்தது. கோபுலுவின் உயிர்த்துடிப்பான ஓவியங்களுடன் வெளியான நாவல்கள் அவை. அதில் வரும் ஹென்றி அற்புதமான மானுடன். மறக்க முடியாத மானுடன். அவனை உயிரோட்டமாக்கியவர் ஜெயகாந்தன் மட்டுமல்லர் ஓவியர் கோபுலுவும் கூடத்தான். அந்த ஒரு நாவல் போதும், அந்த ஒரு பாத்திரம் போதும் ஜெயகாந்தனை இலக்கிய உலகில் நிலைத்து நிற்க வைப்பதற்கு. ஹென்றிக்கு அடுத்து என்னைக் கவர்ந்த அவரது பாத்திரம் 'சில நேரங்களில் சில மனிதர்கள்' கங்கா!

அக்காலகட்டத்தில்தான் ஜெயகாந்தனின் 'ரிஷி மூலம்' கதிரில் வெளியானது. மிகுந்த சர்ச்சைகளை உருவாக்கியது. இனிமேல் கதிரில் இதுபோன்ற கதைகளை வெளியிட மாட்டோமென்று ஆசிரியரை அறிவிக்கச் செய்த குறுநாவலது.

விகடனில் ஜெயகாந்தனின் மிகவும் புகழ்பெற்ற குறுநாவல்கள் பல வெளிவந்தன. 'யாருக்காக அழுதான்?", 'உன்னைப்போல் ஒருவன்', 'அக்கினிப் பிரவேசம்', 'ஆடும் நாற்காலிகள் ஆடுகின்றன', 'கோகிலா என்ன செய்து விட்டாள்' போன்ற பல குறுநாவல்களை விகடன் பிரசுரித்தது. கூடவே பல முத்திரைச் சிறுகதைகளையும் பிரசுரித்தது. 'உன்னைப்போல் ஒருவ'னை அவர் திரைப்படமாகத் தயாரித்தார். வாங்க விநியோகஸ்தர்கள் இல்லாது போனாலும் விருது பெற்ற திரைப்படமது.

உண்மையில் வெகுசன இதழ்களான விகடன், கல்கி, தினமணிக்கதிர் ஆகியவை அவருக்குக் களமமைத்துக்கொடுத்தன என்பது வியப்புக்குரியது. இவரது இறுதிக்காலப் படைப்புகள் பலவற்றை நான் வாசிக்கவில்லை. வாசித்தவையும் பெரிதாக என்னை ஈர்க்கவில்லை. ஜெயகாந்தன் என்றதும் என் நினைவில் வருபவை ஆரம்பத்தில் நான் வாசித்த படைப்புகள்தாம். மிகவும் பிடித்த நாவல் 'ஒரு மனிதன் ஒரு வீடு ஒரு உலகம்'.

## 46. எழுத்தாளர் நாரண துரைக்கண்ணன்



அறுபதுகளில் தமிழ் நாட்டுத் தமிழ் எழுத்தாளர் ஒருவர் தனது நாவலொன்றின் மூலம் கிடைத்த வருமானத்தைக்கொண்டு வீடு கட்டியிருக்கின்றார். ஆச்சரியமாகவிருக்கின்றதா? உண்மை. அவர் வேறு யாருமல்லர் 'ஜீவா' என்று எழுத்துலகில் அறியப்பட்ட எழுத்தாளர் நாரண.துரைக்கண்ணன்தான். இதனை அவரே 'இலக்கு' (எழுத்தாளர் தேவகாந்தன் ஆசிரியராகவிருந்த சிற்றிதழ்) இதழ் நடத்திய நேர்காணலில் கூறியிருக்கின்றார். அந்த நாவலின் பெயர் 'தரங்கிணி'. அந்த கட்டிய வீட்டுக்கும் அதனால் தரங்கிணி என்றே பெயரும் வைத்திருக்கின்றார்.

எழுத்தாளர் நாரண.துரைக்கண்ணன் எனக்கு அறிமுகமானது அவரது 'உயிரோவியம்' நாவலின் மூலம். ராணிமுத்து வெளியீடாக என் பால்யபருவத்தில் வெளியானது. அக்காலகட்ட வாசிப்பில் எனக்குப்பிடித்த நாவல்களிலொன்று. அதில்வரும் கற்பகம், நடராஜன் பாத்திரங்கள் நினைவில் நிலைத்து நிற்கும் பாத்திரங்கள். தூய்மையான காதலைப்பற்றிப் பேசும் நாவல். நாடகமாகவும் டி.கே.எஸ் /டி.கே.பகவதி சகோதரர்களின் நாடக்குழு நாடகமாகவும் மேடையேறியுள்ளது. இன்னுமொரு பதிப்பகமும் அதன் சுருக்கப் பதிப்பை ராணிமுத்து பிரசுரம் போல் வெளியிட்டுள்ளது.

நாரண.துரைக்கண்ணன் பெயருக்குக் காரணம்: அவரது இயற்பெயர் துரைக்கண்ணன். தந்தையின் பெயர் நாராயணசாமி. இரண்டையும் இணைத்து உருவாக்கிய பெயரே நாரண.துரைக்கண்ணன். இவரது ஜீவா என்னும் புனைபெயருக்குக் காரணம். இவர் தன் இளைமைப்பருவத்தில் ஜீவா என்னும் பெண் மேல் காதல் கொண்டிருக்கின்றார். அது அப்பெண்ணுக்குக்கூடத் தெரியாது. ஒருதலைக்காதல். அதன் நினைவாக இவர் வைத்துக்கொண்ட புனைபெயரே ஜீவா. இதை அவரே வெளிப்படையாகக் கூறியிருக்கின்றார். தமிழ் எழுத்தாளர் ஒருவர் தன் நூல் வருமானத்தின் மூலம் வீடு கட்டியிருக்கின்றார். ஆச்சரியப்பட வைக்கின்றது. கூடவே மகிழ்ச்சியையும் தருகின்றது.

# 47. . பன்முகத்திறமை மிக்க பானுமதி




நடிகை பானுமதி என்னைக் கவர்ந்த பன்முகத்திறமை வாய்ந்த நடிகையர்களில் ஒருவர். பாட்டு, இயக்கம், தயாரிப்பு, எழுத்து, நடிப்பு. நடனம், இசையமைப்பு என இவரது பன்முகத்திறமை என்னை வியக்க வைப்பது. தனது மகனின் பெயரான பரணி என்னும் பெயரில் புகழ்பெற்று விளங்கிய பரணி ஸ்டுடியோ இவருக்குச் சொந்தமானதுதான். எம்ஜிஆர் முதலமைச்சராக  இருந்தவேளை தமிழ்நாட்டு இசைக்கல்லூரியின் அதிபராக இவரை எம்ஜிஆர் நியமித்தார். இவரைப்போல் தனது பன்முகத்திறமை காரணமாக என்னை வியக்க வைத்தவர் ஜெயலலிதா.

நாற்பதுகளில் 'அபூர்வ சகோதரர்கள்' திரைப்படம் மீண்டும் எழுபதுகளில் 'நீரும் நெருப்பும்' திரைப்படமாக வெளியானபோது 'அபூர்வ சகோதரர்கள்' திரைப்படத்தில் பானுமதி நடித்த அதே வேடத்தில் ஜெயலலிதா நடித்திருப்பார்.

பானுமதி தெலுங்கில் மிகப்பிரபல்யமான எழுத்தாளரும் கூட. இவரது புகழ்பெற்ற மாமியார் கதைகள் தொகுப்பு ("Attagari Kathalu) தெலுங்கில் ஆந்திர மாநிலச் சாகித்திய விருது பெற்றதும் குறிப்பிடத்தக்கது. மாமியாரை வைத்துச் சுவையாக , விழுந்து விழுந்து சிரிக்க வைக்கும் படியாக எழுதியிருப்பார். இவரது நகைச்சுவைச் சிறுகதையொன்றினை கல்கி அல்லது  ஆனந்தவிகடன் தீபாவளி மலரொன்றில் (அறுபதுகளில்) வாசித்துச் சிரித்து மகிழ்ந்திருக்கின்றேன். அதில் இவருக்குப் பல்லியென்றால் மிகவும் பயம். அப்பயத்தை வைத்து அக்கதையினைப் பின்னியிருப்பார்.

ராணிமுத்து பிரசுரமாக வெளியான 'மாமியார் கதைகள்' மூலமே இவரது புகழ்பெற்ற மாமியார் கதைகளைப் பற்றி நான் முதன் முதலில் அறிந்துகொண்டேன்.

# 48.. ஜெகசிற்பியனின் 'நந்திவர்மன் காதலி'



ஆரம்பகால ராணிமுத்துப் பிரசுரமாக வெளியான எழுத்தாளர் ஜெகசிற்பியனின் 'நந்திவர்மன் காதலி' என் பால்ய, பதின்ம வயதுகளில் படித்து இரசித்த நாவல். வானதி பிரசுரமாகப் பல பதிப்புகளைக் கண்ட நாவல் அண்மையில் புதிய பதிப்பாக வெளிவந்துள்ளது.

அவரது எழுத்து நடை என்னை மிகவும் கவர்ந்தது. அவரது சரித்திர நாவல்களில் 'நந்திவர்மன் காதலி', 'பத்தினிக்கோட்டம்' ஆகியவை எனக்கு மிகவும் பிடித்தவை. ஆனந்தவிகடன் நடாத்திய சரித்திர நாவல் போட்டியில் இவரது முதலாவது சரித்திர நாவல் 'திருச்சிற்றம்பலம்' முதற் பரிசைப்பெற்றுள்ளதும் குறிப்பிடத்தக்கது. அந்நாவல் விகடனில் கோபுலுவின் ஓவியங்களுடன் தொடராக வெளிவந்திருக்கின்றது. அது நான் வாசிக்கத்தொடங்குவதற்குப் பல வருடங்களுக்கு முன்பு. பின்னர் இவரது 'ஆலவாய் அழகன்;' நாவலும் விகடனில் ஓவியர் கோபுலுவின் ஓவியங்களுடன் தொடராக வெளியாகியுள்ளன. கல்கி சஞ்சிகையில் இவரது சமூக நாவல்கள் பல (ஜீவ கீதம், சொர்க்கத்தின் நிழல் , கிளிஞ்சல் கோபுரம், காணக்கிடைக்காத தங்கம் & ஞானக்குயில்) ஆகியவை தொடராக வெளிவந்துள்ளன. கல்கியில் வெளிவந்த இவரது ஒரேயொரு சரித்திர நாவல் 'பத்தினிக்கோட்டம்'. பரமேஸ்வர பல்லவனை மையமாக வைத்துப் பின்னப்பட்ட வரலாற்று நாவல்.

'நந்திவர்மன் காதலி' நந்திக் கலம்பகத்தையொட்டி, மூன்றாம் நந்திவர்மனை நாயகனாகக் கொண்டு பின்னப்பட்ட நாவல். அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவரான கழற்சிங்க நாயனாராகக் கருதப்படுபவர்.

'நந்திவர்மன் காதலி' சுவையான நாவல். காதல், யுத்தம், தியாகம், சதி என்று பல்வகை அம்சங்கங்களை வைத்துச் சுவையாகப் பின்னியிருப்பார் ஜெகசிற்பியன். நாவல் பல்லவருக்கும், இராஷ்ட்டிர கூடருக்கும் நடைபெறும் போருடன் ஆரம்பமாகும். அதன்

விளைவாக இராஷ்ட்டிரகூட இளவரசி சங்காவை மணக்கின்றான் நந்திவர்மன். சங்காவை மறக்க முடியாத பாத்திரமாகப் பின்னியிருப்பார் ஜெகசிற்பியன். சிவபூசைக்குரிய நந்தியாவட்டைப் பூவைத் தொட்டதிற்காக அவளது ஒரு  கையையே வெட்டி விடுகின்றான் நந்திவர்மன். அவ்வயதில் அதனை வாசித்தபோது அவள் மேல் ஏற்பட்ட அநுதாப உணர்வு இன்னும் நெஞ்சில் பசுமையாக, அழியாத கோலமாக நெஞ்சிலுள்ளது. ஆனால் அதையெல்லாம் மீறி அவள் அவன் மீது காதலுடனிருக்கின்றாள்.

நாவலில் நந்திவர்மனின் மாற்றாந்தாய்ப்பிள்ளைகள் ஆட்சியைக் கைப்பற்றுவதற்காகச் செய்யும் சதி நடவடிக்கைள், பாண்டியன் சீமாற சீவல்லபனுடன் நடக்கும் தெள்ளாற்றுப் போர், பாண்டியனின் சகோதரி வாருணிதேவியின் நந்திவர்மன் மீதான காதல் ஆகியவை விபரிக்கப்பட்டிருக்கும்.

சைவ சமயத்தில் மிகவும் தீவிர நாட்டமுள்ள இவன் தமிழுக்காகத்  தன் உயிரைக்கொடுத்தவனாகக் கருதப்படுபவன். நந்திக்கலம்பகம் அரங்கேறுகையில் , அது தன் உயிரைக்குடிக்கும் என்று அறிந்த நிலையில், அதனை அரங்கேற்றித் தன் உயிரை விட்டவனாகக் கருதப்படுபவன். அதனை மையமாக வைத்தே  பின்னப்பட்ட சரித்திர நாவல் நந்திவர்மன் காதலி.

இறுதியில் நாவலில் நந்திக்கலம்பகத்தைக் கேட்டுக்கொண்டு இறுதிப்பாடலைக்கேட்டு ,அவனிருந்த பந்தல் எரிந்து போகும் போது அங்கு ஓடிவரும் வாருணிதேவி அத்தீயினுள் பாய்ந்து தன்னை மாய்த்துக்கொள்வாள். அதுதான் நாவலின் முடிவு. அப்பொழுதுதான் தெரியும் வாசகர்களுக்கு நந்திவர்மன் காதலி யாரென்று..

# 49. மீ.ப.சோமுவின் 'கடல் கொண்ட கனவு'




எழுத்தாளர் மீ.ப.சோமுவின் எழுத்து நடை எனக்கு மிகவும் பிடித்த நடை. அவரது தொடர்கதைகளில் 'வெண்ணிலவுப் பெண்ணரசி' (சரித்திர நாவல்) தவிர ஏனையவை நான் வாசிக்கத் தொடங்கும் முன்னர் வெளியானவை. சில நான் பிறப்பதற்கு முன்னர் வெளியானவை. குறிப்பாகக் 'கடல் கொண்ட கனவு', 'ரவிசந்திரிகா' ஆகியவை நான் பிறப்பதற்கு முன் வெளியானவை. 'நந்தவனம்' நான் வாசிக்கத்தொடங்குவதற்கு முன்னர் வெளியான நாவல். இவற்றையெல்லாம் பின்னர் நண்பர்களின் குடும்பங்களிலிருந்து பெற்று வாசித்துள்ளேன்.

இவற்றில் 'கடல் கொண்ட கனவு' எனக்குப் பிடித்த வரலாற்று நாவல்களிலொன்று. மூன்றாம் நந்திவர்மனைப்பெற்றி ஜெகசிற்பியனின் 'நந்திவர்மன்' காதலி கூறும். அவனது மகன் தந்திவர்மனைப்பற்றிச் சாண்டில்யனின் 'பல்லவ திலகம்' விபரிக்கும். மூன்றாம் நந்திவர்மனின் தந்தையான இரண்டாம் நந்திவர்மனைப்பற்றி (பல்லவ மல்லன்) சோமுவின் 'கடல் கொண்ட கனவு' பேசும். இரண்டாம் , மூன்றாம் நந்திவர்மன்கள் இருவருமே இராஷ்டிரகூட இளவரசிகளை மணந்தவர்கள். இவர்களில் மூன்றாம் நந்திவர்மனே பெரியபுராணத்தில் விபரிக்கப்படும் கழற்சிங்கநாயனார். சிவபக்தன்.

இரண்டாம் நந்திவர்மன் தனது பன்னிரண்டாவது வயதிலேயே அக்காலகட்டத்தில் நிலவிய அரசியற் சூழல் காரணமாகப் பதவிக்கு வந்து நீண்ட காலம் ஆட்சியிலிருந்தவன்.

அவனுக்கு உறுதுணையாக விளங்கிய அவனது தானைத்தலைவன் உதயசந்திரனும் வரலாற்றில் புகழ்பெற்றவன். கடல் கொண்ட கனவு இந்நந்திவர்மனைப்பற்றி, உதயசந்திரனைப்பற்றி விபரிக்கும்.

இந்நாவலுக்கு இன்னுமொரு சிறப்புமுண்டு. இலங்கை எழுத்தாளர் யாழ்நங்கை (அன்னலட்சுமி இராஜதுரை) தன் புனைபெயரை எடுத்தது இந்நாவலில் வரும் யாழ்நங்கை பாத்திரம் மூலமே. இலங்கையின் இன்னுமொரு முக்கிய பெண் எழுத்தாளர் தாமரைச்செல்வி. இந்தப் புனைபெயரும் மீ,ப.சோமுவின் ‘நந்தவனம்’ நாவலின் நாயகி மீதுள்ள பிரியத்தால் சூடப்பட்டது என்பதும் குறிப்பிடத்தக்கது.

# 50. கல்கியில் வாசித்த தொடர்கதைகள்




கல்கி நிறுவனம் தனது இணையத்தளத்தில் கல்கியின் ஆரம்ப இதழ்களிலிருந்து இன்று வரையிலான இதழ்களை ஆவணப்படுத்தி வைத்துள்ளது. நீங்கள் விரும்பிய வருட இதழ்களை வருடச்சந்தா கட்டி வாசிக்கலாம். தற்போது கல்கியில் வெளியான தொடர்கதைகளில் சிலவற்றை மேலும் அதில் வெளியான ஏனைய தொடர்களையெல்லாம் தனித்தனி நூல்களாக உருவாக்கி விற்பனைக்கு வைத்துள்ளது. கல்கியின் நாவல்களைத் தனித்தனி பாகங்களாக, கல்கியில் வெளியான ஓவியங்களுடன் கூடிய அத்தியாயங்களுடன் நூல்களாக்கியுள்ளது. கல்கி, ராஜாஜி, மீ.ப.சோமு, கௌசிகன், வாண்டுமாமா (கௌசிகன்), கல்கி ராஜேந்திரன் போன்ற பலரின் படைப்புகளைக் காண முடிகின்றது. எதிர்காலத்தில் ஏனையவர்களின் படைப்புகளையும் வெளியிடுவார்களென்று எதிர்பார்க்கலாம்.

என் பால்ய காலத்தில் , மாணவப்பருவத்தில் நான் அதிகமான விரும்பிப்படித்த நாவல்கள் கல்கியில் வெளியானவையே. அவற்றையெல்லாம் நாட்டுச்சூழல் காரணமாக இழந்த நிலையில் மீண்டும் கல்கி இதழில்  அவற்றைக் கண்டபோது மகிழ்ச்சியைத் தந்தது.

இவையெல்லாம் எம் வாழ்வுடன் பின்னிப்பிணைந்து விட்ட, அழியா நினைவுகளின் மூலங்கள்.

அக்காலகட்டத்தில் நான் கல்கியின் மகனான கி. ராஜேந்திரனின் நாவல்களையெல்லாம் விரும்பி வாசித்ததுண்டு. அவற்றில் நான் வாசிக்கத்தொடங்கியதற்கு முன் வெளியான நாவல்களும் அடங்கும். அவற்றில் 'போர்முனை', 'நெஞ்சில் நிறைந்தவள்' மற்றும் 'பொங்கிவரும் பெரு நிலவு' ஆகியவை நினைவிலின்னும் நிற்கின்றன. அவற்றிலும் 'போர்முனை' அக்காலகட்டத்தில் மிகவும் பிடித்திருந்தது. அதில் வரும் விதவைப்பெண் தாரா பாத்திரம் இன்னும் பசுமையாக மனத்திலுள்ளது.

இன்னுமொரு நாவல் நான் பிறப்பதற்கு  முன்னர் கல்கியில் வெளியான மீ.ப.சோமுவின் 'கடல் கண்ட கனவு'. ஓவியர் மணியத்தின் ஓவியங்களுடன் வெளியான , 'பைண்டு'' செய்யப்பட்ட நாவலை நண்பரொருவரிடமிருந்து பெற்று வாசித்தேன். எனக்கு மிகவும் பிடித்த மீ.ப.சோமுவின் நாவல் அது. இரண்டாம் நந்திவர்மன் (பல்லவ மல்லன்) ஆட்சியைபற்றிய கதை. சிறுவனான நந்திவர்மனுக்கு ஆட்சிப்பொறுப்பு கிடைக்கின்றது. அவரது தலைமை அமைச்சர் உதயசந்திரன் அவருக்குப் பக்க பலமாக விளங்கி அவனது வெற்றிகளுக்கெல்லாம் காரணமாக அமைகின்றார். ( இரண்டாம் நந்திவர்மனின் பேரனான, தந்திவர்மனின் மகன் , மூன்றாம் நந்திவர்மனின் வரலாற்றை மையமாக வைத்து எழுத்தாளர் ஜெகசிற்பியன் 'நந்திவர்மன் காதலி' என்றொரு நாவலை எழுதியுள்ளார். அந்நாவலும் எனக்கு மிகவும் பிடித்த நாவலாக விளங்கியது. இருவருமே (நந்திவர்மன் 2 & நந்திவர்மன் 3) இராட்டிரகூட இளவரசிகளையே மணமுடித்தது வரலாறு,

'போர்முனை', 'கடல் கண்ட கனவு' மற்றும் 'நெஞ்சில் நிறைந்தவள்' ஆகிய நாவல்களையும் கல்கியின் புகழ்பெற்ற நாவல்களுடன் கல்கியின் இணையத்தளத்தில் காணமுடிந்தது.

# 51. எழுத்தாளர் நாரண துரைக்கண்ணன் (ஜீவா) அவர்களின் 'உயிரோவியம்'

எழுத்தாளர் நாரண துரைக்கண்ணன் (ஜீவா) பற்றி நான் முதன் முதலில் அறிந்துகொண்டது ராணிமுத்து நாவலொன்றின் மூலம்தான். ராணிமுத்து ஆரம்பிக்கப்பட்ட காலத்தில் சிறந்த நாவல்கள் பலவற்றை மாத நாவல்களாக வெளியிட்டு வந்தது. விந்தனின் 'பாலும் பாவையும்', அகிலனின் 'சிநேகிதி', மற்றும் 'பொன்மலர்', மு.வரதராசனின் 'அந்த நாள்', சாண்டில்யனின் 'ஜீவபூமி', ஜெகசிற்பியனின் 'நந்திவர்மன் காதலி', அறிஞர் அண்ணாவின் 'பார்வதி பி.ஏ', கலைஞரின் 'வெள்ளிக்கிழமை', நா.பார்த்தசாரதியின் 'வஞ்சிமாநகரம்', எஸ்.பொ.வின் 'சடங்கு', பானுமதி ராமகிருஷ்ணாவின் 'மாமியார் கதைகள்', மாயாவியின் 'வாடாமலர்' , நாரணதுரைக்கண்ணனின் 'உயிரோவியம்' எனப் பல நாவல்கள் இன்னும் பசுமையாக ஞாபகத்திலுள்ளன.

நாரணதுரைக்கண்ணனின் 'உயிரோவியம்' மறக்க முடியாத காதலின் சிறப்பினை வெளிப்படுத்தும் புதினம். அதில்வரும் கற்பகம், அவளுக்குப் பாடம் கற்பிக்க ஒழுங்கு செய்யப்படும் நடராஜன் இருவரும் ஒருவர் மீது ஒருவர் காதல் வயப்படுகின்றார்கள். நடராஜன் மீது ஒருதலைக்காதல் கொள்ளும் சக ஆசிரியை ஒருவருக்கு, தனக்குப்பதில் கற்பகத்துக்குப்பாடம் போதிக்க நடராஜனை ஒழுங்கு செய்ததில் ஏற்கனவே ஆத்திரமிருந்தது. அவளது சூழ்ச்சியால் கற்பகத்துக்கு இன்னுமொருவருடன் திருமணம் நடைபெறுகிறது. அவள் நடராஜனுக்குத் திருமணத்தைத்தடுத்து நிறுத்த எழுதிய கடிதங்களை அவன் சந்தர்ப்பவசத்தால் பார்க்காமலே போய்விடும் சூழலில், திருமணம் முடிந்த நிலையில், இருவரின் காதலையும் கற்பகத்தின் கணவர் உணரும் சந்தர்ப்பம் ஏற்படுகின்றது. அதன் விளைவாக அவரே காதலர்கள் இருவரையும் சேர்த்து வைப்பதாக நாவல் புனையப்பட்டுள்ளது.

இதுபோன்றதொரு நாவல்தான் அகிலனின் 'சிநேகிதி' நாவலும். நடிகர் சந்திரபாபுவின் சொந்த வாழ்க்கையிலும் இந்நாவலில் வரும் சம்பவங்களையொத்த சம்பவங்கள் நடைபெற்றிருக்கின்றன. ஆனால் ஜீவாவின் இந்த 'உயிரோவியம்' நாவல் 1942இல் எழுதப்பட்டதாகவும், அதற்கு எழுத்தாளர் வ.ரா முன்னுரை எழுதியிருப்பதாகவும் எழுத்தாளர் விக்கிரமன் எழுதிய 'நாரண துரைக்கண்ணன் - ஜீவா இலக்கிய உலகில் மறக்க முடியாத பெயர்' என்னும் கட்டுரையில் குறிப்பிடப்பட்டுள்ளது.

விந்தனுக்கு 'பாலும் பாவையும்' போல் , நா.பார்த்தசாரதிக்கு 'குறிஞ்சி மலர்' போல் எழுத்தாளர் நாரணதுரைக்கண்ணனுக்கு 'உயிரோவியம்' என்று குறிப்பிடலாம்.

மேற்படி 'உயிரோவியம்' நாவல் டி.கே.எஸ். சகோதரர்களினால் நாடகமாக மேடையேற்றப்பட்டதை அறிய முடிகின்றது. 'உயிரோவியம்' நாவலை இணையத்தில் தேடியும் எங்கும் காணவில்லை. ஆனால் அவரது படைப்புகள் நாட்டுடைமையாக்கப்பட்டதால், ஏனைய படைப்புகளைக்காணமுடிகிறது. அதற்கான இணைப்பினைக்கீழே தந்திருக்கின்றேன்.

# 52. ஜெகசிற்பியனின் ‘கிளிஞ்சல் கோபுரம்’

அறுபதுகளின் இறுதியில் 'கல்கி'யில் நான் வாசித்த ஜெகசிற்பியனின் 'கிளிஞ்சல் கோபுரம்' காட்சி...அக்காலகட்டத்தில் வெளியான தொடர்களையெல்லாம் மீண்டும் இதழ் இதழாக வாசிக்கும் வசதியைத்தந்துள்ள 'கல்கி'யினை வாழ்த்துகின்றேன்.

ஜெகசிற்பியனின் இந்நாவலைத் தொடராகக் கட்டி வைத்திருந்தேன். எனக்கு மிகவும் பிடித்த ஜெகசிற்பியனின் சமூக நாவல்களில் இது முக்கியமானது.
கல்கியில் அதிக தொடர்கள் எழுதிய எழுத்தாளர்களில் ஜெகசிற்பியனும் ஒருவர். இவரது 'ஜீவகீதம்', 'சொர்க்கத்தின் நிழல்', 'ஊமைக்குயில்', 'காணக்கிடைக்காத தங்கம்' மற்றும் 'பத்தினிக்கோட்டம்' ஆகிய நாவல்கள் தொடர்களாக வெளியாகியுள்ளன. இவர் ஆனந்த விகடன் நடாத்திய நாவல் போட்டியில் 'திருச்சிற்றம்பலம்' நாவலுக்காக முதற் பரிசு பெற்றவர். அந்நாவலும் , 'ஆலவாய் அழகன்' என்னும் நாவலும் ஆனந்த விகடனில் தொடர்களாக வெளியாகியன. இவரது 'நந்திவர்மன் காதலி' வரலாற்று நாவல் அக்காலகட்டத்தில் என்னை மிகவும் கவர்ந்த நாவல்களிலொன்று. 'ராணிமுத்து'வின் ஆரம்ப காலத்துப் பிரசுரங்களிலொன்றாக வெளியாகியபோதுதான் எனக்கு அறிமுகமாகியது.

இவ்விதமாகக் கட்டி வைத்திருந்த நூல்களையெல்லாம் இலங்கையில் நிலவிய அரசியல் சூழல் காரணமாக இழந்து விட்டேன்.

மீண்டும் அவற்றை வெளிவந்த மாதிரியே வாசிக்கும் சந்தர்ப்பத்தைத் தற்போது கல்கி ஏற்படுத்தித் தந்திருக்கின்றது.

இவ்விதமான வெகுசன இதழ்களில் வெளியான படைப்புகள்தாம் என் வாசிப்புப் பழக்கத்தின் ஆரம்பப் படிக்கட்டுகள்.வாசிப்பில் இன்பத்தை, ஆர்வத்தை அக்காலகட்டத்தில் ஏற்படுத்தியவை.

# 53.. சிந்தையில் நிற்கும் 'ஜீவபூமி'




என் மாணவப்பருவத்தில் நான் வாசித்த சாண்டியல்யனின் முதலாவது சரித்திர நாவலான் 'ஜீவ பூமி' 'அமுதசுரபி'யில் தொடராக வெளியான நாவல். எவ்விதத்தொய்வுகளுமற்ற அவரது சிறந்த வரலாற்று நாவலாக நான் முதலில் கருதுவது இதனையே.

ராஜபுதனத்து மன்னர்களை வைத்துப் பல நாவல்களை எழுதியிருக்கின்றார் சாண்டில்யன். 'ஜீவபூமி' மேவார் ராணா இரண்டாவது ராஜசிம்மன் காலத்தை விபரிக்கும் நாவல். இதில் வரும் ரதன் சந்தாவத் ஸலூம்பராதான் நாவலின் பிரதான நாயகன். கடல் புறாவில் இளைய பல்லவனாக வரும் கருணாகரத் தொண்டைமானைப் போல் இந்தச் சிறிய நாவலில் ரதன் சந்தாவத் ஸலும்பரா கட்டமைக்கப்பட்டிருக்கின்றான். இளையபல்லவன் போல் ரதனும் சரித்திர புருஷன். உண்மையில் வாழ்ந்தவன். கற்பனைப்பாத்திரமல்லன்.

நான் முதன் முதலில் இந்நாவலை வாசித்தது 'ராணிமுத்து' பிரசுரமாக வெளியானபோதுதான். இந்நாவலின் கதாநாயகன் ரதன் சந்தாவத் ஸலூம்ப்ரா எனக்குப் பிடித்த சாண்டியல்யனின் வரலாற்றுக் கதாநாயகர்களிலொருவர். (ஏனையவர்களாகக் 'கடல்புறா' இளையபல்லவன், 'ராஜமுத்திரை' இந்திரபானு, 'ஜலதீபம்' இதயச்சந்திரன் ஆகியோரைக்கூறுவேன்.)

'ஜீவபூமி' நாவலைச் சிவாஜி/ சரோஜாதேவி நடிப்பில் திரைப்படமாக எடுக்கப்பட்ட முயற்சி பத்திரிகை விளம்பரங்களுடன் நின்று போனது. 'ராணிமுத்து'வின் 'ஜீவபூமி' அட்டைப்படத்திலும்கூட சிவாஜி/ / சரோஜாதேவி விளம்பரக் காட்சியொன்றினையே ஓவியர் ஜெயராஜ் தீட்டியிருந்தார். நடிகர் திலகமும், கன்னடத்துப் பைங்கிளியும் காட்சியளிக்கும் அவ்விளம்பரத்தையும், ஜீவபூமி ராணிமுத்து அட்டைப்படத்தினையும் ஒப்பிட்டுப் பாருங்கள். ஓவியர் ஜெயராஜ் ராணிமுத்து அட்டைக்குப் பாவித்தது ஜீவபூமி திரைப்படக் காட்சியையே என்பதைப் புரிந்து கொள்வீர்கள். ஜீவபூமி திரைப்படத்தில்

நடித்த நடிகர் திலகம், சரோஜாதேவியையே ரதன் சந்தாவத்தாகவும், அகிலாவாகவும் வரைந்து விட்டார் ஓவியர்.

## 54. மனத்தில் நிற்கும் ‘மஞ்சள் ஆறு’

எழுத்தாளர் சாண்டில்யனின் வரலாற்று நாவல்களைச் சிலர் இலேசாக ஒதுக்கித்தள்ளிவிட்டுப் போய்விடுவார்கள். சாண்டில்யனின் எழுத்து ஏனைய வரலாற்றுப் புதினங்களைப் படைத்த எழுத்தாளர்களிடமிருந்து பெரிதும் வேறுபடுகின்றது. சாண்டியல்யன் மாதிரி நீளமான வசனங்களை எந்தவிதமான சலிப்புமில்லாதவகையில் எழுதித் தமிழ் வாசகர்களைக் கவர்ந்த இன்னுமோர் சரித்திர நாவலாசிரியர் எவருமிலர் என்பதுதான் என் கருத்து. அதே சமயம் அவரது புனைவுகள் எல்லாவற்றிலுமே சிருங்கார ரசம் பொங்கி வழியும். அனைவரும் அறிந்ததுதான். ஆனால் அது மட்டும்தான் அவரது வெற்றிக்குக் காரணமான ஒன்றல்ல. மேலும் பல காரணங்கள் உள்ளன. மேலே கூறிய நீண்ட வசனங்கள் அவற்றிலொன்று. இவ்விதமான நீண்ட வசனங்களை ஆறுதலாக வாசிக்கும் வாசகர் ஒருவருக்கு அவ்வசனம் விபரிக்கும் விடயம் காட்சியாக மனத்திரையில் படிந்து விடுகிறது. ஏனென்றால் ஒவ்வொரு 'கமா'வும் வாசகரின் மனதில் அவ்வசனம் விபரிக்கும் விடயத்தைக் காட்சியாக்கிவிடுகிறது.

'மஞ்சள் ஆறு' என்னும் மேவார் ராணா ஸங்கனைப்பற்றிய சிறு வரலாற்று நாவல் பின்வருமாறு ஆரம்பமாகின்றது. கவனியுங்கள் வசனத்தின் நீளத்தை. கவனியுங்கள் இந்த நீண்ட வசனம் விபரிக்கும் காட்சிப்பிம்பத்தை.

""நாஹ்ராமக்ரோ என்ற புலிமலை உச்சியை மாலை நேர மஞ்சள் கதிர்கள் தழுவிக் கிடந்ததால், ஏற்கனவே செடி கொடிகள் அதிகமின்றி உடைந்த பாறைகளுடனும் அந்தப்பாறைகளிலிருந்து உதிர்ந்து அக்கம் பக்கத்தில் பதிந்து கிடந்த சின்னஞ்சிறு மணல் திட்டுக்களுடனுமிருந்த அந்த மலைப்பிரதேசம் சொர்ணச்சாயைக் கொஞ்சம் அதிகமாகவே பெற்றிருந்ததல்லாமல் , மலையுச்சியிலிருந்த சாருணி தேவியின் ஆலயத் தங்கக் கலசங்கள் வெயிலில் ஜாஜ்வல்லியமாக மின்னி, மேவார் நாட்டில் கதிரவனையும் தோற்கடிக்கும் ஒளிப் பிழம்புகள் பல உண்டு என்பதைப் பறைசாற்றிக்கொண்டிருந்தன."

புத்தகம் எத்தனையாவது பதிப்பு என்று பார்த்தேன். இருபத்து நான்காம் பதிப்பு பிப்ரவரி 2016 என்றிருந்தது. 159 பக்க நூல். ஆச்சரியமாகவிருந்தது. யார் சொன்னது இந்தக்காலத்து வாசகர்களுக்கு வாசிக்கப் பொறுமையில்லையென்று

அடுத்தது பாத்திரங்களுக்கிடையிலான உரையாடல்கள் என்னை மிகவும் கவர்ந்தவை. சிரிப்பைத்தரும்; சிந்திக்க வைக்கும்; வாசிப்பு இன்பத்தை வழங்கும். அதே வேளை அவ்விதம் உரையாடல்களை அமைக்கும் சாண்டில்யனின் எழுத்துத்திறமையும் வியக்க வைக்கும்.

அவரது நீண்ட நாவல்களில் அதிகப் புகழ் பெற்ற நாவல்களென்றால் யவனராணி, கடல் புறா, ஜலதீபம் மற்றும் ராஜமுத்திரை ஆகியவைதாம். ஆனால் அவரது சிறிய நாவல்கள் பல தொய்வில்லாமல் நகர்ந்து செல்பவை. உதாரணமாக ஜீவபூமி, மஞ்சள் ஆறு ஆகிய சிறு நாவல்கள் எனக்குப் பிடிக்கும். இச்சிறு நாவல்கள் தொய்வற்று, கட்டுக்கோப்பானவை.

ஜீவபூமி நாவலை முதன் முதலாக நான் வாசித்தது ராணிமுத்துப் பிரசுரமாகத்தான். முன்னட்டையில் உள்ள ஓவியம் ஜெயராஜ் வரைந்தது. சிவாஜியையும், சரோஜாதேவையையும் ஞாபகப்படுத்தும் வகையில் வரையப்பட்டிருந்தது ஞாபகத்துக்கு வருகின்றது. அண்மையில் எனது பதிவொன்றின் பின்னூட்டத்திலும் கனடா மூர்த்தி அதனையே குறிப்பிட்டிருந்ததும் ஞாபகத்துக்கு வருகின்றது.

உண்மையில் ஓவியர் ஜெயராஜ் சிவாஜி, சரோஜாதேவி ஆகியோரை வைத்துத்தான் அந்த அட்டைப்படத்தை வரைந்திருக்க வேண்டும். உண்மையில் சிவாஜி, சரோஜாதேவி நடிப்பில் ஜீவபூமி திரைப்படமாக வெளிவருவதாக விளம்பரங்கள் அந்தக் காலத்தில் வெளிவந்ததை அண்மையில் அவதானித்திருக்கின்றேன்.

ராஜபுதனத்து மன்னர்களை வைத்துப் பல நாவல்களை எழுதியிருக்கின்றார் சாண்டில்யன். 'ஜீவபூமி' மேவார் ராண இரண்டாவது ராஜசிம்மன் காலத்தை விபரிக்கும் நாவல். இதில் வரும் ரதன் சந்தாவத் ஸலூம்பராதான் நாவலின் பிரதான நாயகன். கடல் புறாவில் இளைய பல்லவனாக வரும் கருணாகரத் தொண்டைமானைப் போல் இந்தச் சிறிய நாவலில் ரதன் சந்தாவத் ஸலும்பரா கட்டமைக்கப்பட்டிருக்கின்றான். இளையபல்லவன் போல் ரதனும் சரித்திர புருஷன். உண்மையில் வாழ்ந்தவன். கற்பனைப்பாத்திரமல்லன்.

"ரதன் சந்தாவத் ஸலும்பராவின் சிரிப்பு அந்தக் கிருஷ்ணபஷத்து இரவின் பயங்கரமான அமைதியைச் சரேலென்று கிழித்து, இடையிலிருந்த எவ்வளவோ இடைஞ்சல்களை ஊருருவிச்சென்று, உதயசாகரத்தின் அலைகளில் இரைச்சலோடு கலந்து கொண்டது. அந்த இரவில் அவன் அவ்வளவு பலமாகச் சிரித்திராவிட்டால் இந்தக் கதை நிகழ்ந்தே இராது"

இவ்விதம் ரதன் சந்தாவத் ஸலும்பராவின் சிரிப்புடன் ஆரம்பமாகும் நாவல் இறுதியில்

"ஹாஸ்ய புருஷரான பண்டித்ஜீக்கா அர்த்தம் புரியாது, வாய்விட்டுப் பெரிதாகச்சிரித்தார். ரதன் உதயசாகரத்தில் சிரித்த சிரிப்பை விட அது கொஞ்சம் பலமாகவே இருந்தது."

என்று முடியும். இவ்விதம் நாவலை ஆரம்பத்தில் சிரித்த ரதனின் சிரிப்புடன் நினைவு படுத்தி மீண்டும் சிரிப்புடன் முடித்திருப்பது ஆசிரியரின் கற்பனை வளத்தையும், படைப்புத்திறமையினையும் வெளிப்படுத்துமொன்று என்பேன். இந்த ஜீவபூமி நாவல் அமுதசுரபி இதழில் வெளியான சாண்டில்யனின் முதலாவது நாவல். நாவலாக வெளியானபோது வாசகர்களின் பேராதரவைப்பெற்றதென்றும் அறிந்திருக்கின்றேன்.

அண்மையில் சாண்டில்யனின் சிறு நாவல்களிலொன்றான 'மஞ்சள் ஆறு' நாவலை இங்குள்ள நூலகக்கிளையொன்றிலெடுத்து வாசித்தபொழுது நாவல் எந்தவிதத்தொய்வுமில்லாமல் கட்டமைக்கப்பட்டிருந்ததை உணர முடிந்தது. சாண்டியல்யனுக்கேயுரிய நீண்ட வசனங்களும், சுவையான உரையாடல்களும் வாசிப்பு இன்பதைத்தந்தன. மாதிரிக்கு நாவலின் நாயகனான மேவார் ராணா ஸங்கனுக்கும், நாவலின் நாயகி சொர்ணாதேவிக்குமிடையில் நடைபெறுமோர் உரையாடலைத்தருகின்றேன். வாசித்துப்பாருங்கள். சாண்டில்யனைப்பற்றிய என் கருத்துகள் சரிதாம் என்பதை உணர்வீர்கள்.

"காயம் பட்டதால் சிரித்தாயோ?"
"ஆம், சிரித்தேன்."
"அழுகையும் சிரிப்புக்குச் சமம் என்று சுட்டிக்காட்டினாயே?"
"ஆமாம்."
"அப்படிப்பட்டவன் வேதாந்தியாயத்தான் இருக்க வேண்டும்."
:ஆம்."
அதுவரை நிதானமாகப்பேசி வந்தவள் திடீரெனப்பெருங்கோபத்துடன் கேட்டாள்:
"பெண்களை வெறித்து வெறித்துப் பார்ப்பதும் வேதாந்தியின் வேலையோ?" என்று.
ஸங்கன் தலையைத்தாழ்த்திக்கொண்டான். பிறகு சொன்னான்: "அதுவும் ஒரு வகையில் வேதாந்தியின் வேலைதான்" என்று.

கோபத்திலும் அவள் கண்கள் ஆச்சரியத்தால் மலர்ந்தன. "அழகையும் ஆராய்வது வேதாந்தியின் வேலையா?" என்று வினவினாள்.
"ஆம்; அழகு ஆண்டவன் கரங்களிலிருந்து மலர்வது, அதைக் காண்பதில் ஆண்டவனைக் காண்கிறோம்."
"அப்படியானால் என்னிடத்தில் ஆண்டவனிருக்கிறானா>"
"இல்லாவிட்டால் இத்தனை அழகு இருக்காது."
""என்னிடத்தில் ஆண்டவனைக் கண்டாயா?' அழகைக் கண்டாயா?"
"இரண்டையுந்தான்"
"புரியவில்லை, எனக்கு!:
"அழகு வேறு, ஆண்டவன் வேறல்ல."
"நல்ல வேதாந்தம் இது. இந்த வேதாந்தத்தை எல்லோரும் கடைப்பிடித்தால் என்ன ஆகும்?"
"வேதாந்தத்தை எல்லோரும் கடைப்பிடிக்க முடியாது."
"ஏன்?"
"அதற்கு மனப்பக்குவம் வேண்டும்."
"அப்படியா?'
"ஆம்; ராவண கிருகத்தில், நிலையும் ஆடையும் குலைந்த பல ஸ்திரீகளை அனுமார் பார்த்தார்.அவர் மனம் சலிக்கவில்லை. அது வேதாந்தியின் பார்வை. அழகை ரசிக்கும் ஆனால் பொருளில் மனதைச்செலுத்தாது."

இவ்விதமாக நாயகனுக்கும், நாயகிக்குமிடையில் நடைபெறும் உரையாடல் சிரிப்பையூட்டும் அதே சமயம், வாசகர்தம் நெஞ்சங்களை இன்பத்தேனாலும் நிறைத்துவிடும் தன்மை மிக்கது. [மஞ்சள் ஆறு; பக்கங்கள் 47 &48]

## 55. ராணிமுத்தும், விடுகதை ஒன்றும்.

ராணிமுத்து வெளியான சமயம் , அதன் முதல் பத்து பிரசுரங்கள் வரையில் அப்பா ஏனைய பத்திரிகை, சஞ்சிகைகளுடன் வாங்கியிருந்தார். அப்பொழுது அப்பா வாங்கிய பத்திரிகை/ சஞ்சிகைகளின் பட்டியல் இதோ: தினமணி, 'இந்தியன் எக்ஸ்பிரஸ்', 'த ஹிந்து', ஈழநாடு, சுதந்திரன், வீரகேசரி, மித்திரன் (வார மஞ்சரி), தீப்பொறி, மஞ்சரி, கலைமகள், கலைக்கதிர், அம்புலிமாமா, பொம்மை, பேசும்படம், கல்கி, ஆனந்த விகடன், தினமணிக்கதிர், ராணி, ராணிமுத்து, சிரித்திரன், பொன்மலர் (காமிக்ஸ்), பால்கன் (காமிக்ஸ்), அவ்வப்போது இந்திரஜால் காமிக்ஸ்..

இவை தவிர அவருக்குப் பிடித்த ஆங்கில நூல்கள் (பி.ஜி.வூட்ஹவுஸ், கிரகாம் கிறீன், ஆர்.கே.நாராயணன், டால்ஸ்டாய் போன்றவர்களை அவருக்குப் பிடிக்கும்). ராணிமுத்து வெளியிட்ட ஆரம்பகாலத்துப் பிரசுரங்களில் முதலாவதாக வெளிவந்தது அகிலனின் 'பொன்மலர்'. அது வாங்கியிருக்கவில்லை. இரண்டாவதாக வெளிவந்தது அறிஞர் அண்ணாவின் 'பார்வதி பி.ஏ'. இவை தவிர எங்களிடமிருந்த ராணிமுத்து பிரசுரங்களில் சில: அறிஞர் அண்ணாவின் 'ரங்கோன் ராதா' கலைஞரின் 'வெள்ளிக்கிழமை', சாண்டில்யனின் 'ஜீவபூமி', 'உதயபானு' , மாயாவியின் 'வாடா மலர்', மு.வரதராசனாரின் 'அந்த நாள்', பானுமதி ராமகிருஷ்ணாவின் 'மாமியார் கதைகள்', ஜெகசிற்பியனின் 'நந்திவர்மன் காதலி', அநுத்தம்மாவின் 'கேட்ட வரம்'. இவை தவிர இன்னுமொரு பிரசுரம் 'பார் பார் பட்டணம் பார்' என்றொரு நாவல். குரும்பூர் குப்புசாமி எழுதியதாகவிருக்கக் கூடும்.

இவ்விதமான ராணிமுத்து பிரசுரங்களிலொன்றில் சில விடுகதைகள் போட்டிருந்தார்கள். அவற்றிலொன்றின் ஞாபகம் இன்னும் பசுமையாகவிருக்கின்றது. அது கீழே:
விடுகதைக்கான விடையினைக் கண்டு பிடியுங்கள் பார்க்கலாம்
விடுகதை:

"காலாறு சிறை நான்கு
கடுகைப் போல் கண்ணிரண்டு,
ஈயடா இளிச்ச வாயா! இன்னும் தெரியலையா
பொக்கை வாயா?"

## 56. அறிஞர் அண்ணா!



அறிஞர் அண்ணாவின் பிறந்த தினம் செப்டம்பர் 15. இன்று தமிழகத்தில் திராவிடக் கட்சிகளின் ஆதிக்கத்தை வேறெந்தக் கட்சிகளாலும் உடைக்க முடியாத நிலைதானுள்ளது. இதற்குப் பலமான அத்திவாரமிட்டவராக அறிஞர் அண்ணாவைக் கூறலாம். சினிமா, நாடகம், இலக்கியம் என்னும் ஊடகங்களின் பயன்களை நன்கு உணர்ந்து, அவற்றைத்தம் கொள்கைகளைப் பரப்பும் சாதனங்களாகப் பயன்படுத்துவதில் மிகுந்த வெற்றியடைந்தவர்கள் அண்ணாவின் தலைமையில் உருவாகி, வளர்ந்து தமிழகத்தின் ஆட்சிக்கட்டிலைப்பிடித்த திராவிடக்கட்சியினரே.

அண்ணாவின் பிறந்ததினமான இன்று அவரை நான் எவ்விதம் முதன் முதலில் அறிய வேண்டி வந்தது என்பதை நினைத்துப்பார்க்கின்றேன். அதுவே இன்றைய முகநூற்பதிவாகின்றது.

திராவிடக் கட்சியினரின் ஆதிக்கத்தால் ஏற்பட்ட எதிர்மறையான விளைவுகள் நிறையவேயுள்ளன. அவை பெரும்பாலும் பதவியும், ஆட்சியும் தரும் போதையினால் அரசியல்வாதிகள் பலர் புரியும் ஊழல்கள். ஆனால் அதற்காக அவர்களால் விளைந்த நேர்மறையான விளைவுகளைப் புறக்கணித்துவிட முடியாது. இந்தியத் தேசியக்கட்சிகளின் ஆதிக்கத்திலிருந்த தமிழகத்தை, மாநிலக் கட்சிகளின் ஆதிக்கத்தின் கீழ் கொண்டுவந்தவை திராவிடக் கட்சியினரே.

மூடநம்பிக்கைகளுக்கெதிரான சீர்திருத்தக் கருத்துகளைத் தம் எழுத்துகள் மூலமும், கலை வடிவங்கள் மூலமும் வெளிப்படுத்தி மக்கள் மத்தியில் விழிப்புணர்வை உருவாக்கியவர்கள் அறிஞர் அண்ணாவின் பாசறையில் வளர்ந்த திராவிடக் கட்சியினரே. இவை ஆரோக்கியமான விளைவுகள். அடிப்படையில் இவர்களும் நடைமுறையிலிருக்கும் சமுதாய அமைப்பின் அங்கத்தினர்களென்பதால், இவர்களால் தாமிருக்கும் சமுதாய அமைப்பின் அனைத்துப்பிரச்சினைகளையும் தீர்க்க முடியாது. அது அமைப்பினை அடியோடு மாற்றுவதால் மட்டுமே சாத்தியம். எனவே இவர்கள் இருக்கும்

அமைப்பினுள் வைத்துத்தான் இவர்களின் குறை, நிறைகளை நான் அறிந்து கொள்கின்றேன். புரிந்து கொள்கின்றேன்.

முதல் முதலாக நான் அறிஞர் அண்ணாவை அறிந்த தருணத்தை நினைத்துப்பார்க்கின்றேன். உலகத்தமிழாராய்ச்சி மாநாடு சென்னையில் நடந்த காலகட்டத்தின்போதுதான் முதன் முறையாக அறிஞர் அண்ணாவை நான் அறிந்துகொண்டேன். அப்பா திராவிட முன்னேற்றக்கழகத்தினரின் ஆதரவாளராக அக்காலகட்டத்திலிருந்தார். அறிஞர் அண்ணா, கலைஞர் கருணாநிதி மற்றும் நாவலர் நெடுஞ்செழியன் போன்றோர் மீது மதிப்பு வைத்திருந்தவர். அந்த தமிழாராய்ச்சி மாநாடடையொட்டி மிகவும் தரமான, அழகான விழா மலரொன்றினை வெளியிட்டிருந்தார்கள். அம்மலர்க்குழு பொறுப்பாளராக எம்ஜிஆர் இருந்திருக்க வேண்டுமென்று ஞாபகம். மலரின் ஆரம்பத்தில் மலருக்கான அவரது வரவேற்பிருந்தது. தடித்த அட்டையுடன் கூடிய மலரைத்திறந்ததுமே முதற் பக்கத்துக்கும், அட்டைக்குமிடையில் தாமரை மலரொன்று விரிவது போல் அமைக்கப்பட்டிருந்ததாகவும் ஞாபகம்.

அந்த மலரின் மூலம்தான் முதன் முறையாகத் அறிஞர் அண்ணாவைப்பற்றி, அன்றைய திராவிட முன்னேற்றக் கழகத்தினரைப்பற்றியெல்லாம் அறிந்து கொண்டேன். அப்பொழுது நான் ஐந்தாவது வகுப்பில் படித்துக்கொண்டிருந்தேன். அக்காலகட்டத்தில் தினத்தந்தி நிறுவனத்தினர் மாதாந்த நாவல் திட்டமாக ராணிமுத்துப் பிரசுரத்தை அறிமிகப்படுத்தினர். ராணிமுத்துப் பிரசுரமாக முதலில் வெளியான நாவல் அகிலனின் 'பொன்மலர்'. அடுத்தது அறிஞர் அண்ணாவின் 'பார்வதி பீ.ஏ'. பின்னர் 'ரங்கோன் ராதா'வும் ராணிமுத்துப் பிரசுரமாக வெளியானது

என் பதின்மவயதுகளில் யாழ்ப்பாணத்தில் என் வாழ்க்கை கழிந்தபோது நான் அண்ணாவின் நூல்களை ஒருவித வெறியுடன் தேடித்தேடி வாசிக்குமொரு வாசகனாகவும் விளங்கியிருக்கின்றேன். அவரது 'ஏ தாழ்ந்த தமிழகமே' , 'கம்பரசம்' பொன்ற நூல்களைக்குறிப்பிடலாம். மூடம்பிக்கைகளை, இந்துமதப்புனைவுகளில் சாதி வகித்த பங்கினை, அதன்காரணமாகவே ஓரவஞ்சகமாகக்கட்டப்பட்ட புனைவுகளையெல்லாம் அவரது நூல்கள் தோலுரித்துக்காட்டின. அதனால் அவை அக்காலகட்டத்தில் பிடித்திருந்தன.

என் வாசிப்பின் வரலாற்றில் அண்ணாவின் , திமுகவினரின் நூல்களுக்கும் ஓரிடமுண்டு..

அண்ணா என்றால் உடனே நினைவுக்கு வருவது அவரது குரலும், சந்தர்ப்ப சூழ்நிலைகளுக்கேற்ப விரைவாக அவர் உதிர்க்கும் சொற்களின் அழகும்தாம். உதாரணத்துக்கு ஒன்றினைக் குறிப்பிடலாம். ஒரு முறை தேர்தல் கூட்டத்துக்கு நேரம் சென்று வந்தார். இரவு பத்தரையை நெருங்கிக்கொண்டிருந்தது. அது ஒரு சித்திரை மாதம். அவரை எதிர்பார்த்துக் காத்துக்கிடந்த மக்கள் தூங்கி வழிந்துகொண்டிருந்தார்கள். வந்த வேகத்தில் அண்ணா தனது பேச்சினை ஆரம்பித்தார்.

"மாதமோ சித்திரை.
நேரமோ பத்தரை.
நீங்களோ நித்திரை."

அவ்வளவுதான் தூங்கி வழிந்துகொண்டிருந்த மக்களின் தூக்கக்கலக்கம் போன இடமே தெரியவில்லை.

அப்பாவுக்குப் பிடித்த அறிஞர் அண்ணாவின் அடுக்கு மொழி!

அண்மையில் டொராண்டோ நூலகக் கிளையொன்றில் அறிஞர் அண்ணாவின் 'ரங்கோன் ராதா' நாவலைப்பார்த்தவுடன் என் நினைவலைகள் என் தந்தையார் வாழ்ந்த காலகட்டத்துக்கு ஒருமுறை சென்றது.

அப்பா இருந்தவரை திமுக ஆதரவாளர். அப்பொழுது திமுக பிளவு படாமலிருந்த காலகட்டம். அறிஞர் அண்ணாவின், கலைஞரின் எழுத்துகள் அப்பாவுக்கு மிகவும் பிடிக்கும். குறிப்பாக அவர்களின் அடுக்கு மொழிகளை அவர் மிகவும் இரசிப்பார். அவ்விதம் அவர் இரசித்த அறிஞர் அண்ணாவின் அடுக்கு மொழிகளிலொன்று ரங்கோன் ராதா நாவலின் இறுதி வசனம். அந்த நாவல் கீழ்க்கண்டவாறு முடியும்:

"இன்பமே" என்றேன் நான்.
கண்களை ஒரு விநாடி மூடித்திறந்தாள் - செந்தாமரை மலர்ந்தது. அருகே வந்தாள், வசந்தம் வீசிற்று!
புன்னகை புரிந்தாள், புது விருந்து உண்டேன்! "

இதிலுள்ள புன்னகை புரிந்தாள், புது விருந்து உண்டேன்! என்ற நாவலின் முடிவில் வரும் அடுக்குமொழித்தொடர் அவருக்கு மிகவும் பிடித்திருந்தது. அதனை வாசித்து அண்ணாவின் அடுக்கு மொழித்திறனை எண்ணி, அவர் தனக்குத்தானே மெல்லிய புன்னகையினைச்சிந்தியது இன்னும் நெஞ்சினில் பசுமையாக உள்ளது.

மேற்படி ரங்கோன் ராதா நாவல் 1956இல் திரைப்படமாகவும் மேகலா பிக்சர்ஸ் நிறுவனத்தால் தயாரிக்கப்பட்டு வெளியானது. சிவாஜி/பானுமதி/ எம்.என்.ராஜம் நடிப்பில் வெளியான திரைப்படமது. கலைஞரின் வசனத்தில் வெளியான திரைப்படத்தில் அவரது பாடல்கள் சிலவும் உள்ளன.

அறிஞர் அண்ணாவின் பெயர் அரசியலில் மட்டுமல்ல, தமிழ்ச்சினிமாவிலும் நிலைத்து நிற்கும். தமிழ்ச்சினிமாவில் சீர்சிருத்தக்கருத்துகளைப் புகுத்தியதில், அதுவரை பாடல்கள் வகித்த பங்கினை வசனங்களுக்கு மாற்றியதில் அண்ணாவின், திமுகவினரின் திரைப்படங்கள் முக்கிய பங்காற்றின.

# 57. என் மனதுக்குகந்த மணிவண்ணன் ( நா.பார்த்தசாரதி)



எழுத்தாளர் நா.பார்த்தசாரதி பற்றி எழுத்தாளர் திருப்பூர் கிருஷ்ணன் இந்திய சாகித்திய அகாதெமியின் இந்திய இலக்கியச் சிற்பிகள் வரிசைக்காக எழுதிய வாழ்க்கை வரலாற்று நூலிது.

நா.பா எனக்குப் பிடித்த எழுத்தாளர்களில் ஒருவர். முக்கிய காரணம் அவரது தமிழ். அடுத்தது அவரது இலட்சியநோக்கு மிக்க பாத்திரப் படைப்புகள். 'குறிஞ்சி மலர்', 'பொன் விலங்கு' மற்றும் 'மணி பல்லவம்' போன்ற அவரது நாவல்களை மறந்துவிட முடியுமா?

நா.பார்த்தசாரதியின் 'குறிஞ்சி மலர்' நாவலுக்கும் , திலகவதி (திருநாவுக்கரசரின் அக்கா) அம்மையாருக்குமிடையில் மிகுந்த ஒற்றுமையுண்டு. பூரணி தந்தையை இழந்து விடுகின்றாள். தன் தம்பியை வளர்க்கத் தன் வாழ்வை அர்ப்பணிக்கின்றாள். அவள் வாழ்வில் அரவிந்தன் எதிர்ப்படுகின்றான். அதுபோல் திலகவதியார் வாழ்விலும் கலிப்பகையார் எதிர்ப்படுகின்றார். அரவிந்தன், கலிப்பகையார் இருவருமே இறந்துவிடுகின்றார்கள்.

மேலும் நா.பா அவர்களே திலகவதியாரின் வரலாற்றை அடிப்படையாக வைத்தே பூரணி என்னும் பாத்திரத்தைப் படைத்தார் என்பதற்கு நாவலுக்கு அவர் எழுதிய முன்னுரை மற்றும் முடிவுரையில் வரும் பின்வரும் கூற்றுகளே போதுமானவை:

"சைவ சமயக் குரவர் திருநாவுக்கரசரின் தமக்கையார் திலகவதி - கலிப்பகையார் ஆகியவர்களின் நிறைவடையாத உறவு - இவற்றைச் சற்றே நினைவுபடுத்திக் கொண்டு இந்த நாவலைப் படித்தால் இதன் இலக்கிய நயம் விளங்க முடியும்." (முன்னுரையில்)

"நாட்டுப்பற்றும், மொழிப்பற்றும் கொண்டு ஞானப் பூங்கோதையாய் நின்று நோயும், வறுமையும் நிறைந்த மனிதர்களிடையே அருளொளி பரப்பி உயரிய வாழ்வு காண ஆசைப்படும் பெண் திலகத்தை - திலகவதிகளை எங்கே கண்டாலும் அங்கே பூரணி பிறந்திருப்பதாக நினைத்து வணங்குங்கள்! வாழ்த்துங்கள்! " (முடிவுரையில்)

மேற்படி நா.பா பற்றிய வரலாற்று நூலில் பூரணிக்கும், திலகவதிக்குமுள்ள ஒற்றுமை பற்றியும் குறிப்பிட்டிருந்தால் நன்றாக இருந்திருக்குமென்று தோன்றுகிறது.

எம் பால்ய , பதின்ம வயதுகளில் எம்மைத் தன் எழுத்தாள் வசியப்படுத்தி வைத்தவர் எழுத்தாளர் நா.பா (மணிவண்ணன்).

# 58. நா.பா.வின் 'பொன் விலங்கு" பற்றிய உணர்வுகள்.....




வெகுசன இதழ்களில் வெளியான படைப்புகளில் எழுதிய எழுத்தாளர்களில் முதலிடத்தில் இருப்பவர் (சமூக நாவல்களைப்பொறுத்தவரையில்) எழுத்தாளர் நா.பார்த்தசாரதி (மணிவண்ணன்) அவர்கள்தாம். அவரது 'குறிஞ்சி மலர்', 'பொன் விலங்கு' இரண்டுமே எனக்கு மிகவும் பிடித்த நாவல்கள். அவரது படைப்புகளைப் பொறுத்தவரையில் முக்கிய குறைபாடு முடிவு பெரும்பாலும் சோகத்தில் அமைந்துவிடுவதுதான். அதுவும் சாதாரண சோகமல்ல. நெஞ்சைப்பிழிந்துவிடும் சோகம். குறிப்பாக 'பொன் விலங்கு' நாவல் அகப்பட்டால் வாசித்துப் பாருங்கள். நாவலின் இரு நாயகியர்களில் பிரதானமானவரான மோகினியின் நிலையினை விபரிக்கும் இறுதி அத்தியாயத்தை வாசித்துப் பாருங்கள். புரிந்துகொள்வீர்கள்.

நா.பார்த்தசாரதியின் எழுத்தில் எனக்குப் பிடித்த அம்சங்களாகப் பின்வருவனவற்றைக் கூறுவேன்: பாவிக்கப்பட்டுள்ள மொழி நடை, ஆங்காங்கே தூவப்பட்டிருக்கும் கருத்தும், கவித்துவமும் செறிந்த சொற்றொடர்கள், வாசிப்பவர் உள்ளங்களைக் கொள்ளை கொள்ளும் வகையில் படைக்கப்பட்டுள்ள பாத்திரப்படைப்பு. இவரது புனைகதைகளில் பிரதான பாத்திரங்கள் இலட்சிய புருஷர்களாகப்படைக்கப்பட்டிருப்பார்கள். 'குறிஞ்சி மலர்' அரவிந்தன், பூரணி, 'பொன்விலங்கு' சத்தியமூர்த்தி, பாரதி, மோகினி போன்ற பாத்திரங்களின் குணநலன்களை இவர் விபரித்திருக்கும் விதம் வாசிப்பவர்கள் இதயங்களில் அப்பாத்திரங்களைக்கொண்டுசென்று குடியேற்றுவதைக் கச்சிதமாகச் செய்கின்றன.

இன்னுமொரு முக்கியமான பண்பினையும் இவரது சில படைப்புகளில் காணலாம். நாவலில் ஆங்காங்கே நெஞ்சையள்ளும் கவிதைகளைச் சேர்ப்பதற்காக , பாத்திரங்களுக்குப் பிடித்த கவிஞர் ஒருவரையும் நா.பா உருவாக்கியிருப்பார். உதாரணமாகப் 'பொன் விலங்கு' நாவலில் நவநீத கவி என்னும் கவிஞர் உருவாக்கப்பட்டிருப்பார். அவ்வப்போது பாத்திரங்களின் குணவியல்புகளைப் பிரதிபலிக்கும் வகையில் அவரது கவிதைகள் நாவலில் ஆங்காங்கே உள்ளடக்கப்பட்டிருக்கும்.

அமரர் கல்கியும் இவரைப்போல் தனது பொன்னியின் செல்வனில் ஆங்காங்கே தன் கவிதைகளை இணைத்திருப்பது நினைவுக்கு வருகின்றது. குறிப்பாக 'அலைகடலும் ஓய்ந்திருக்க அகக் கடல்தான் பொங்குவதேன்?' என்னும் பூங்குழலி பாடுவதாக வரும் கவிதையை யார் தான் மறக்க முடியும்? ஆனால் அவர் கவிதைகளை அவ்வப்போது இணைப்பதற்கு கவிஞர் எவரையும் நா.பா. போல் துணைக்கழைப்பதில்லை.

பூங்குழலியின் பொன்னியின் செல்வர் மீதான காதல் உணர்வுகளை வெளிப்படுத்தும் வகையில் எழுதப்பட்டிருக்கும் கல்கியின் அற்புதமான கவிதை வரிகள் இதோ:

" அலைகடலும் ஓய்ந்திருக்க அகக் கடல்தான் பொங்குவதேன்?
நிலமகளும் துயிலுகையில் நெஞ்சகந்தான் பதைப்பதுமேன்?
காட்டினில் வாழ் பறவைகளும் கூடுகளைத் தேடினவே!
வேட்டுவரும் வில்லியரும் வீடு நோக்கி ஏகுவரே
வானகமும் நானிலமும் மோனமதில் ஆழ்ந்திருக்க
மான்விழியாள் பெண்ணொருத்தி மனத்தில் புயல் அடிப்பதுமேன்?
வாரிதியும் அடங்கி நிற்கும் மாருதமும் தவழ்ந்து வரும்
காரிகையாள் உளந்தனிலே காற்றுச் சுழன் றடிப்பதுமேன்?"

'பொன் விலங்கு' நாவலிலும் இது போன்ற கவிதைகள் சில வருகின்றன. நாவலின் ஆரம்பத்திலிருந்து அவ்வப்போது நாயகன் சத்தியமூர்த்தியின் அழகான சிவந்த பாதங்களைக் காதலுடன் நாயகி பாரதி பார்ப்பதை நா.பா. விபரித்திருப்பார். உதாரணத்துக்குக் கீழுள்ள விபரிப்பைப்பாருங்கள்:

"ஈரப்பட்டுச் செந்தாமரைப் பூக்களாகச் சிவந்திருந்த அவனுடைய பாதங்களையும் இழைத்த சந்தனத் தண்டு போல் மினுமினுக்கும் பொன்னிறத் தோள்களையும் பாராததுபோல் பார்த்து மறுபடியும் பார்க்கத்தவிக்கும் கண்களோடு நின்று கொண்டிருந்தாள் அவள். நாணித் தலையைக் குனிந்து கொள்ளும் பாவனையில் அவனுடைய தங்கத்திருவடிகளையும் அவற்றில் வெண்முத்துப் பதித்தாற்போன்ற நகங்களையும் அவள் சுலபமாகக் காணமுடிந்தது. அந்தக் கால்கள் குளியறையிலிருந்து நடந்து வந்த வழியெல்லாம் சித்திரம் பதித்தாற்போல் நீர்ப் பிரதிகளில் பாதக் கோலமாக பதிந்திருந்தன. கண்ணன் பிறப்புக்கு மாக்கோலம் போட்டதுபோல் அளவாகத் தெரிந்த அந்த நீர்ப்பிரதிகளை ஓடிப்போய் இரண்டு கைகளாலு தொட்டுக் கண்களில் ஒத்திக்கொண்டுவிட வேண்டும் போலத்தவித்தாள் அவள். பொன்னில் வார்த்துக் குழைத்தெடுத்தாற் போன்ற அந்தத்தோள்களை இன்னொருமுறை எப்படியும் பார்த்துவிடவேண்டுமென்று அவள் தன் அழகிய கண்களின் பார்வையை நிமிர்த்தி ஓரமாகச் சாய்த்தபோது அவன் தன் கையில் பிழிந்து வைத்திருந்த ஈரத்துண்டை மெல்ல உதறி மேலே போர்த்திக்கொண்டிருந்தான்."

இதைவிட அவளது அவன் மீதான காதலை வர்ணிப்பதற்கு வார்த்தைகள் வேறுதாம் உண்டா? இவ்விதமான சூழலை விபரிப்பதற்கு நா.பா நவநீதக் கவியின் கவிதை வரிகளையும் சேர்த்திருப்பார்:

"அந்த நிலையில் பாரதிக்கு  ஒரு கவிதை நினைவு வந்தது.  அம்பிகாபதி -அமராவதி கதையை நவீன காவியமாக எழுதி வெளியிட்டிருந்தார் நவநீத கவி என்ற கவி. அவர் ஒரு மறுமலர்ச்சித்தமிழ்க்கவிஞர். அதில் ஒரு பாட்டு பாரதிக்கு  மனப்பாடமே ஆகியிருந்தது. அவளுக்கு மிகவும் பிடித்த பாட்டு அது.

"பார்க்கத்தவித்துப் பார்த்ததுவும்
பாராதிருந்தே தவித்ததுவும்
யார்க்கும் தெரியா திணைந்ததுவும்
யாரும் அறிந்தே பிரிந்ததுவும்,
பேசத் தவித்துப் பேசியதும்
பேசா திருந்தே தவித்ததுவும்
நேசம் தெரிந்து மணந்ததுவும்
நீசர் கலைக்கக் கலைந்தனவே"

இவ்விதம் பாடலை இணைத்திருக்கும் நா.பா மேலும்  கூறுவார்: " சத்தியமூர்த்தியின் இந்தப்பாதங்களைப் பார்க்கும்போதும் அவள் தவித்தாள். பார்க்கமுடியாத போதும் அவள் தவித்தாள்.  இந்த உணர்ச்சியை அந்தக் கவி எவ்வளவு அழகாகச் சொல்லியிருக்கிறார்?"

நாவலின் நாயகியர்களில் ஒருவரான பாரதியின் உளநிலையை விபரிப்பதற்கு நவநீத கவியின் மேற்படி கவிதையை நாவலில் உள்ளடக்கியிருக்கும் நா.பா இன்னுமோரிடத்தில் நாயகன் சத்தியமூர்த்தியின் உளநிலையை விபரிக்கக் கீழுள்ள நவநீத கவியின் கவிதையையினை உள்ளடக்கியிருப்பார்:

"இதழ் மலர்ப் பொழிலில் எண்ணங்கள் மலர்ந்திருக்க
எண்ண மலர்க் குவையில் ஏடெழுதும் கவியிருக்கக்
கண்ணும் மனமும் பசித்திருக்கக் கண்டவுலகில் பொய்யிருக்க
எண்ணுமெழுத்தும் சலித்திருக்க ஏதோ நலிந்திருந்தேன்
என்னுள் மெலிந்திருந்தேன்...."

இன்னுமோரிடத்தில் நாவலின் பிரதான நாயகியான மோகினி பாடுவதாகக் கீழுள்ள கவிதையினைப் பாவித்திருப்பார்:

" முன்னும் பின்னும் நினைவாகி
முடிவிற் பெரிய கனவாகி
நீயும் நானும் கதையாகி நம்
கதையும் உலகிற் செலவாகிக்
காலப் படுகை யதன்மேலே - முன்
கழிந்த நினைவுகள் கண்ணயர
அழிந்த நினைவுகள் கண்கலங்க
அங்கும் இங்கும் அலைபாயும்.."

வெகுசனப்படைப்புகளில் வெளியான சமூக நாவல்களில் என் நெஞ்சில் முதலிடத்திலிருப்பது நா.பா.வின் 'பொன் விலங்கு'

## 59. பால்ய, பதின்ம வயதில் படைத்தவை

[நான் என்  பால்ய ,பதின்மப் பருவத்து வாசிப்பு, எழுத்தனுபவங்களை இங்கு எழுதுவதற்கு முக்கிய காரணம் குழந்தைகள், சிறுவர்கள் மற்றும் இளைஞர்கள் இவ்வனுபவங்களை அறிய வேண்டுமென்பதற்காகவே. பொதுவாக எழுத்தாளர்கள் தம் பால்ய, பருவத்து எழுத்து, வாசிப்பனுபவங்களை விரிவாக எழுதுவது குறைவு. எனது அப்பருவத்து அனுபவங்கள் இப்பொழுதும் மகிழ்ச்சியைத்தருவன. இந்நிலையில் இவற்றை வாசிக்கும் இளம் பருவத்தினருக்கும் இவ்வனுபவங்கள் நிச்சயம் இன்பத்தைத்தருவதுடன் , வாசிப்பு, எழுத்தில் ஆர்வமுள்ளவர்களை மேலும் இத்துறைகளில் ஆழ்ந்து ஈடுபடத்தூண்டும் என்பதில் எனக்கு நம்பிக்கையுண்டு. அத்துடன் இவ்வனுபவங்களை இன்பத்தையும் தருமென்பதிலும் சந்தேகமேயில்லை. - வ.ந.கி]

எட்டாம் வகுப்பிலிருந்து பன்னிரண்டாம் வகுப்புவரை (பல்கலைக்கழகப்புகுமுக வகுப்பு அல்லது கல்விப்பொதுத்தராதர உயரதர வகுப்பு) என் கல்வி யாழ் இந்துக்கல்லூரியில் தொடர்ந்தது. வெளி மாவட்டத்திலிருந்து யாழ் இந்துக்கல்லூரிக்குச் சென்றதால் பரிட்சை வைத்தே எடுத்தார்கள்.  வழக்கம்போல் நான் தீவிர வாசிப்பு மிக்கவனாகவே அக்காலகட்டத்திலிருந்தேன். என் வாசிப்புக்கு அக்காலகட்டத்தில் உறுதுணையாகவிருந்தவர்களின் பெயர்களையும் நிச்சயம் கூறவேண்டும். யாழ் இந்துக்கல்லூரியில் படிக்கத்தொடங்கிய காலத்தில் நான் அதிகம் பழகிய பாடசாலை நண்பர்களிலொருவர் கவிஞர் வேந்தனாரின் மகனான இளஞ்சேய். அதற்குக்காரணம் இருவருமே வாசிப்பில் மிகுந்த ஈடுபாடுடையவர்கள் என்பதுதான். நானும் அவரும் இருவரிடமும்  இருக்கும் நூல்களை ஒருவருக்கொருவர் பரிமாறிக்கொள்வோம். இளஞ்சேய் பேச்சாற்றல் மிக்க மாணவனாக அக்காலகட்டத்திலேயே விளங்கினார்.

என் இந்துக்கல்லூரி காலகட்டத்தில் சக மாணவர்கள் யாருக்காவது  நான் எழுதுவது தெரிந்திருக்குமா என்பது சந்தேகமே. நான் யாருக்கும் பெரிதாக நான் ஈழநாடு மாணவர் மலரில் எழுதுவதையெல்லாம் கூறுவதில்லை. ஆனால் என்னுடன் பாடசாலயில் நன்கு பழகிய மாணவர்களுக்கு நான் தீவிர வாசிப்பாளன் என்பது தெரியும். ஒரு சிலர் தம்மிடமிருந்த நூல்களை நான் கேட்காமல் கொண்டு வந்தும் கொடுத்திருக்கின்றார்கள். அதே சமயம் பாடசாலையில் எனக்குத் தமிழ்  கற்பித்த  ஆசிரியர்கள் எவருக்குமே நான் எழுதுவது தெரிந்திருக்காதென்றே நினைக்கின்றேன். ஏனென்றால் யாருக்குமே நான் அது பற்றிக் கூறியதில்லை.

மேலும் அக்காலகட்டத்தில் இலங்கைத்தமிழ் இலக்கிய உலகில் நன்கு அறியப்பட்ட எழுத்தாளர் சொக்கன், எழுத்தாளர் தேவன் (யாழ்ப்பாணம்) ஆகியோர் அங்கு கற்பித்துக்கொண்டிருந்தபோதிலும் அவர்களில் எவரும் எனக்குத் தமிழாசிரியர்களாக இருந்ததில்லை. ஒரு வேளை அவர்களிலொருவராவது வந்திருந்தால் நானும் என் எழுத்துகளை அவர்களுக்குக் காட்டியிருக்க முடியும். அவற்றைப்பார்த்து அவர்களும் என்னை அதிகமாக ஊக்குவித்திருக்க முடியும். ஏனென்றால் அக்காலகட்டத்தில் தேவன் (யாழ்ப்பாணம்)  அவர்கள் மொழிபெயர்ப்பில் தமிழில் வெளியான மணிபல்லவம் நூல் (Treasure  Island) என்னிடமிருந்தது. அதனை நான் விரும்பி வாசித்திருந்தேன். அதுபோல் சொக்கன் அவர்கள் எழுதிய சிறுகதைகள் சிலவற்றை வாசித்திருந்தேன். குறிப்பாகக் கலைச்செல்வி சஞ்சிகையில் அவர் எழுதிய சிறுகதையொன்றின் மூலம் என் மனத்தில் அவர் இடம் பிடித்திருந்தார். இவர்களில் யாராவது எங்களுக்குத் தமிழ்ப்பாடமெடுத்திருந்தால் நிச்சயம் தமிழ் இலக்கியம்  பற்றி, அவர்களது படைப்புகள்

பற்றி, எனது எழுத்துலக முயற்சிகள் பற்றி அவர்களுடன் உரையாடும் சந்தர்ப்பமேற்பட்டிருக்கலாம்.

அதே சமயம் தமிழாசிரியர்களைப் பொறுத்தவரையில் ஒருவரை எனக்கு இன்னும் நினைவிலுள்ளது. அவரது பெயர் குமாரசுவாமி. பத்தாவது வகுப்பில் எங்களுக்கு அவர் தமிழாசிரியராக இருந்தார். ஒரு முறை ஆற்றங்கரைக் காட்சியொன்றைப்பற்றி நான் எழுதிய வர்ணனையைப்படித்து விட்டு, அதை எடுத்துச் சென்று அவர் தமிழ் படிப்பிக்கும் வேறு வகுப்பு மாணவர்களுக்குக் கொண்டு சென்று காட்டி வந்து பாராட்டினார். அவருக்கும் நான் ஈழநாடு மாணவர் மலரில் எழுதுவது தெரிந்திருக்காதென்றே நினைக்கின்றேன். நான் அது பற்றிக்கூறியதில்லை. அவரும் கேட்டதில்லை. அவர் அறிந்திருந்தால் நிச்சயம் அதனைப்பாராட்டி மேலும் ஊக்குவித்திருப்பார்.

இதே சமயம் ஒன்பதாம் வகுப்பு , பத்தாம் வகுப்பில் நானிருந்தபோது என் வாசிப்புக்குத் தீனி போட உதவியவர் நண்பர் அமலவண்ணன். அக்காலகட்டத்தில் இவர் என்னுடன் நெருங்கிப்பழகினார். அவருடைய அம்மா, என் அம்மா, அவருடைய அம்மாவின் சகோதரி எல்லோரும் யாழ் இந்துமகளிர் பாடசாலைத்தோழிகள். அவருக்கும் நான் எழுதுவது தெரியுமோ என்பது எனக்குத் தெரியாது. ஆனால் அவருக்கு நான் ஒரு தீவிர வாசிப்பாளன் என்பது தெரியும். எனக்கு அதிக அளவில் நான் தேடிக்கொண்டிருந்த நூல்களையெல்லாம் வாசிப்பதற்கு அவர் ஒருவகையில் உதவியிருக்கின்றார். அவரது உறவினர் ஒருவர் மானிப்பாய் 'றோட்டி'ல் வசித்து வந்தார். அவர் எங்களை விட வயதில் முதியவர். அவர் கல்கி, விகடன், கண்ணன் எனப் பல சஞ்சிகைகளில் வெளியான தொடர்கதைகளையெல்லாம் அழகாக 'பைண்டு 'செய்து வைத்திருப்பார். அவரிடம் நான் வாசிக்கத்தொடங்கியதற்கு முன்னர் வெளியான தொடர்கதைகள் பல இருந்தன. ஜெகசிற்பியனின் 'பத்தினிக்கோட்டம்', ஜெகசிற்பியனின் 'ஜீவகீதம்' , கி.ராஜேந்திரனின் 'போர்முனை', நா.பார்த்தசாரதியின் 'பொன்விலங்கு' , நா.பா.வின் 'குறிஞ்சி மலர்', அகிலனின் 'கயல்விழி' இவற்றுடன் கண்ணன் சஞ்சிகையில் வெளியான பல சிறுவர் தொடர்கதைகள், சிறுகதைகள் & கவிதைகளின் 'பைண்டு' செய்யப்பட்ட தொகுப்புகள் பலவற்றை நான் அவரிடமிருந்துதான் பெற்று வாசித்தேன். பதிலுக்கு நான் என்னிடமிருந்த நூல்கள் பலவற்றை அவருக்கு வாசிக்கக் கொடுப்பேன். நண்பர் பரதனை முதன் முதலில் அறிந்துகொண்டது அமலவண்ணன் மூலம்தான். இருவரும் நெருங்கிய நண்பர்கள்.

யாழ் இந்துவில் என்னுடன் படித்த பாடசாலை மாணவர்களை விட வெளியிலும் எனக்குப் பல நண்பர்களிருந்தார்கள். என் அம்மாவின் தம்பியொருவரின் மகன் எனக்கு உறவினன் என்றாலும் ,நண்பனாக விளங்கியவன். குட்டி என்று அழைத்தால்தான் அவனை எல்லோருக்கும் தெரியும். உருவத்தில் குட்டி அல்லன். அவனைச்சுற்றி எப்பொழுதும் நண்பர்கள் படையொன்றிருக்கும். அவர்களில் சிலர் எனக்கும் நண்பர்களானார்கள். அவர்களில் குறிப்பிடத்தக்கவர் நண்பர் லிங்கேஸ்வரன். என்னுடன் அக்காலகட்டத்தில் சினிமா, யாழ் நூலகம், யாழ் உணவகங்களென்று அவ்வப்போது அலைந்து திரிந்திருக்கின்றார். அவரைப்போன்ற சிலருக்கு நான் ஈழநாடு பத்திரிகையில் எழுதுவது தெரியும்.

உண்மையில் அக்காலகட்டத்தில் என் வாசிப்புக்கு அதிக அளவில் தீனிபோட்டு நண்பனாக விளங்கிய ஒருவனாக நான் குறிப்பிடுபவன் உண்மையிலேயே மானுட இனத்தைச் சாராத யாழ் பொதுசன நூலகம்தான். அங்குதான் நான் அதிக அளவில் பல்வகை நூல்களையும் இரவல் பெற்று வாங்கி வாசித்து வாசித்து என் வாசிப்புக்குத் தீனி போட்டுக்கொண்டேன். சஞ்சிகை, பத்திரிகைகளை வாசிப்பதற்கு கந்தசாமி 'மாஸ்ட்டர்' வீட்டுக்கு முன்னால் அமைந்திருந்த அண்ணா அறிவகம் உதவியாக விளங்கியது. இவை என் பதின்ம வயது வாசிப்பு அனுபவங்களை விபரிப்பதற்காகக் கூறுகின்றேன்.

இவை தவிர இன்னுமொருவரையும் குறிப்பிட வேண்டும். இவர் என் பால்ய காலத்து வாசிப்புக்கு மிகவும் உதவியவர். அவர் என் அம்மாவின் கடைசித்தம்பி. அண்மையில் கனடாவில் காலமானார். அவர் பெரிதாக வாசிப்பதில்லை. ஆனால் நான் வாசிப்பதை உணர்ந்து தன் நண்பர்களிடமிருந்து வேதாள மயாத்மாவின் காமிக்ஸ், மேதாவி, சிரஞ்சீவி, & தமிழ்வாணனின் மர்ம நாவல்கள் என அதிக அளவில் கொண்டு வந்து தந்தவர். உண்மையில் என் யாழ் இந்து கல்லூரி வாழ்க்கை ஆரம்பித்த சமயம் அவர் கனடாவுக்குச் சென்று விட்டார். அவர் எனக்கு அவ்விதம் நூல்களைக்கொண்டு வந்து என் வாசிப்புக்கு உதவியது என் பால்ய பருவத்தில் விடுமுறைகளில் நான் வவுனியாவிலிருந்து யாழ்ப்பாணத்துக்கு ஆச்சி வீட்டுக்கு வரும் சமயங்களில்தாம். அத்துடன் ஆச்சி வீட்டுப்பரணும் எனக்கு என் வாசிப்பில் உதவியிருக்கிறது. அக்காலகட்டத்தில் அப்பரண் எனக்கு அள்ள அள்ளக்குறையாத காமதேனு. பழைய கல்கி, ராணி, சஞ்சிகைகளின் சில  இதழ்கள், மறைமலையடிகளின் நாகநாட்டரசி குமுதவல்லி, கோகிலாம்பாள் கடிதங்கள், பெரிய அளவிலான திப்புசுல்தான் நாவல் (எழுதியவர் யார் என்பது நினைவிலில்லை) எனப் பழைய நூல்களையெல்லாம் அங்குதான் வாசித்தேன். பழைய சஞ்சிகைகள் அங்கிருந்ததற்குக் காரணம் தமிழ்ப்பண்ணையில் பணியாற்றிய இளைஞரொருவர்தான். அவர் ஆச்சியின் மீது மதிப்பு வைத்துள்ள ஒருவர். மிஞ்சிய சஞ்சிகைகள், தினத்தந்தி பத்திரிகைகள் போன்றவற்றையெல்லாம் அங்கு வந்து கொடுத்து  விடுவார். அவ்விதம் கொடுத்தவை காலப்போக்கில் நிறைந்து விட்டிருந்தன. பிரச்சினை என்னவென்றால் அச்சஞ்சிகைகளெல்லாம் ஒரே காலகட்டத்தைச் சேர்ந்தவையல்ல. இதனால் அவற்றில் காணப்படும் தொடர்கதைகளின் ஒன்றிரண்டு அத்தியாயங்களையே வாசிக்க முடிந்தது. வாசிப்பு வெறியனாக இருந்த எனக்கு அவ்வோரிரு அத்தியாயங்களை வாசித்ததும் அத்தொடர்களை முழுமையாக வாசிக்க வேண்டுமென்ற ஆவலோங்கும். அதனால் அப்படைப்புகளைத் தேடி அலைந்ததுமுண்டு.

இவையெல்லாம் சேர்ந்து என் வாசிப்புக்கு பெருமளவில் உதவின. இதன் விளைவாகத்தான் நான் அதிகமாக அக்காலகட்டத்திலேயே ஈழநாடு மாணவர் மலருக்கு எழுதத்தொடங்கத்தொடங்கினேன். எனவே என் எழுத்துலக முயற்சிகளைப்பற்றிக் குறிப்பிடுகையில் , அதற்கு உதவிய வாசிப்புக்கு உதவியவர்களைப்பற்றியும் நிச்சயம் குறிப்பிட வேண்டுமென்பதால்தான் அவர்களை இங்கு நான் நினைவு கூர்ந்தேன். அதே சமயம் என் பால்ய பருவத்திலிருந்து என்னை எழுத ஊக்குவித்து,

தொடர்ச்சியாக என் பதின்ம, இளமைப்பருவங்களில் என் படைப்புகளைப்பிரசுரித்த ஈழநாடு பத்திரிகை நிறுவனத்துக்கும், அச்சமயம் அங்கு பணியாற்றி என் படைப்புகளைத் தேர்ந்தெடுத்துப்பிரசுரித்த எழுத்தாளர்கள் அனைவரையும் நான் இத்தருணத்தில் நினைவு கூர்கின்றேன். இவர்களில் ஒருவரைக்கூட நான் நேரில் பார்த்து  உரையாடியதில்லை. பின்னர் என் சிறுகதைகளை, ,கட்டுரைகளைப்பிரசுரித்து ஊக்குவித்த ஈழநாடு வாரமலர் ஆசிரியர்  பெருமாளைக்கூட நான் ஒரு தடவைகூடப் பார்த்துக் கதைத்ததில்லை. அவ்விதமானதொரு நிலையில்தான் ஈழநாடு பத்திரிகை எவ்வளவு தூரம் என் எழுத்துக்கு உதவியிருக்கின்றது என்பதை உணர முடியும்.

1971 -1974 காலகட்டத்தில் ஈழநாடு மாணவர் மலரில் நான் குறிப்பிடத்தக்க ஆக்கங்களை எழுதியுள்ளேன். அவை வருமாறு (இவற்றில் அண்மையில் நூலகம் தளத்திலுள்ள ஈழநாடு பிரதிகளில் கண்டு பிடித்தவை திகதிகளுடன் உள்ளன. ஏனையவற்றில் என்னிடம் பிரதிகளுள்ளன. திகதிகள் தெரியவில்லை. ஆனால் அவை பெரும்பாலும் 73 காலகட்டத்தில் வெளிவந்தவையாகவிருக்க வேண்டும். நூலகம் தளத்தில் அவ்வருடப் பிரதிகளைக் காணவில்லை. 1974இல் வெளியான ஈழநாடு மாணவர் மலர்களையும் தேடிப்பார்க்க வேண்டும்.)

21.11.71 -கவிதை -வான்மதி ஆசிரியர் - செல்வன் ந.கிரிதரன் - மாணவர் மலர், ஈழநாடு
21.11.71 - ஆசிரியர் - செல்வன் ந.கிரிதரன் - மாணவர் மலர், ஈழநாடு
6.2.72_ வால் நட்சத்திரங்களும் & எரி நட்சத்திரங்களும் - செல்வன் ந.கிரிதரன் - வண்ணார்பண்ணை - மாணவர் மலர்
26.11.72 - மயக்க மருந்து எப்படி வந்தது? - வ.ந.கிரிதரன் - ஈழநாடு மாணவர் மலர் - ஈழநாடு
3.9.72 - வளம் கொழிக்கும் மலைநாட்டில் ஒரு வாரம் - - வ.ந.கிரிதரன் - - மாணவர் மலர் - ஈழநாடு
21.5.72 - மாணவர் அமைதியின்மைக்கு - வ.ந.கிரிதரன் - மாணவர் மலர் - ஈழநாடு -
24.9.72- வாழ்வின் இரு கண்கள் - .ந.கிரிதரன் - மாணவர் மலர் - ஈழநாடு -
- ஒலி பிறந்த போது - வ.ந.கிரிதரன் - மாணவர் மலர் - (ஈழநாடு) -
- விஞ்ஞானிகளாக.. - வ.ந.கிரிதரன் - மாணவர் மலர் - (ஈழநாடு)
- நேற்று - இன்று - நாளை - வ.ந.கிரிதரன் - மாணவர் மலர் - (ஈழநாடு)
- தமிழர் நன்னாள் பொங்கற் திருநாள் - வ.ந.கிரிதரன் - மாணவர் மலர் (ஈழநாடு) -
குட்டிக்கதை - ஈசாப் கதையைத் தழுவி எழுதியது -

# 60. வின்சரில் படம் பார்ப்பதுமோர் அனுபவமே!




இன்றுள்ளவாறு தகவல் தொழில் நுட்பம் வளர்ச்சியுற்றிராத , டிஜிட்டல் ஊடகங்களெதுவுமற்ற அன்றைய காலகட்டத்தில் , சினிவா பார்ப்பதென்பது முக்கியமானதொரு பொழுதுபோக்கு. திரையரங்குகளைப் பற்றி எண்ணியதுமே என் நினைவுக்கு வருவது யாழ் வின்சர் திரையரங்குதான்.

வின்சரில் நான் பார்த்த திரைப்படங்கள் அதிகமென்று கூறுவதற்கில்லை. விளையாட்டுப்பிள்ளை, காவியத்தலைவி, ரகசிய பொலிஸ் 115, தேடி வந்த மாப்பிள்ளை, இருளும், ஒளியும், ராஜ ராஜ சோழன் என்று சில திரைப்படங்களே உடனடியாக நினைவுக்கு வருகின்றன. வின்சரில் படம் பார்ப்பதென்பதே சுகமானொதோர் அனுபவம்தான்.

விசாலமான திரையரங்கு; பெரிய ஜன்னல்கள் படம் தொடங்கும்மட்டும் திறந்திருப்பதால் காற்று ஜிலுஜிலுவென்று வீசிக்கொண்டிருக்கும்,. படம் தொடங்குவதற்குச் சிறிது நேரத்தின் முன், பணியாளர் ஒருவர் ஒவ்வொரு ஜன்னலையும் 'சாத்தத் தொடங்குவார். அதனைத்தொடர்ந்து திரையரங்கினுள் உள்ள ஒளியை வழங்கும் மின் குமிழ்கள் ஒவ்வொன்றாக மங்கிக்கொண்டு வர, திரைப்படம் ஆரம்பமாகும்.

அக்காலகட்டத்தில் இலங்கையிலேயே சிறந்த திரையரங்காக வின்சரே திகழ்ந்ததாக ஞாபகம். இன்று வின்சரில் திரைப்படங்கள் ஓடவில்லை. கடடடக்கூட்டுத்தாபனப்பொருட்கள் விற்குமோரு விற்பனை நிலையமாக மாறிவிட்டது. அதன் இன்றைய தோற்றத்தையே இங்குள்ள புகைப்படத்தில் காண்கின்றீர்கள்.

# 61. இலங்கைத் தமிழர்தம் சமூக, , அரசியல் வாழ்வில் 'சைக்கிளி'ன் ஆதிக்கம்!

அண்மையில் முகநூலில்  நண்பர் சின்னையா ராஜேஸ்குமார் அவர்கள் இலங்கைத்தமிழர்களின் ஆயுதப்போராட்டம் பற்றி வெளியிட்ட கருத்தொன்று சம்பந்தமாக நான் வெளியிட்டிருந்த கருத்தொன்றில் எழுபதுகளில் யாழ்ப்பாணத்தில் சிங்களப்பொலிசார் சைக்கிளில் செல்லும் தமிழ் இளைஞர்கள் மேல் நடாத்திய பாரபட்சமான ஒழுங்கு நடவடிக்கைகள் பற்றிக் குறிப்பிட்டிருந்தேன். அது சைக்கிள் பற்றிய பல்வேறு கருத்துகளையும் எழச்செய்து விட்டது. அது பற்றித் தொடர்ந்தும் பதிவு செய்யப்பட்ட கருத்துகளை ஆவணப்படுத்துவதற்காக அவற்றைத் தொகுத்து இங்கு தருகின்றேன். சைக்கிள் பற்றிய எதிர்வினைகளில் பலர் பலவிதமான கருத்துகளையும் பகிர்ந்துகொண்டார்கள். அவையெல்லாம் முக்கியமானவை.

இலங்கைத்தமிழர் அரசியலுக்கும் சைக்கிளுக்குமுள்ள தொடர்பே இலங்கைத்தமிழர் வாழ்வில் சைக்கிளின் ஆதிக்கத்தைக் காட்டும். உண்மையில்  இலங்கைத்தமிழர்களின் அன்றைய வாழ்வில் வீட்டுக்கு அடுத்து முக்கிய இடத்தை வகித்த சாதனங்களிலொன்று சைக்கிள்.

தமிழ் காங்கிரஸ் சார்பில் 1947 - 1965 தேர்தலில் யாழ்ப்பாணத்தில் ஜி.ஜி.போட்டியிட்டபோது (1952, 1960 யூலை தேர்தல்களில் தவிர) அவர் போட்டியிட்ட காங்கிரஸ் கட்சியின் சின்னம் சைக்கிள். இன்றும் தான். இலங்கைத்தமிழர் அரசியலில், வாழ்வில் சைக்கிளின் ஆதிக்கத்தை வெளிப்படுத்த சைக்கிள் சின்னம் ஒன்றே போதும்.

பின்னர் உருவான தமிழரசுக்கட்சி வீடு சின்னத்தைப்பாவித்தது. இன்று வரை இலங்கைத் தமிழர்கள் அரசியலில் சைக்கிள் சின்னமும் ஆதிக்கம் செலுத்தி வருவது கண்கூடு. இவ்விதமாக உருவான சைக்கிள் பற்றிய சிந்தனைகளில் சின்னையா ராஜேஸ்குமார் பகிர்ந்துகொண்ட பல தகவல்கள் சுவாரசியமானவை; முக்கியத்துவம் வாய்ந்தவையும் கூட. இவை தவறிப்போய் விடக்கூடாதென்பதற்காகவே அவற்றை உள்ளடக்கிய இத்தொகுப்பு.

சின்னையா ராஜேஸ்குமார் முகநூற் பதிவொன்றில் ' எனது கேள்வி ஜன நாயக ரீதியான போராட்டங்கள் தோற்றதால் தான் ஆயுதப்போராட்டம் தொடங்கியதா என்பதே?' என்றொரு கேள்வியினைக் கேட்டிருந்தார். இதற்கான எனது எதிர்வினையாக 'ஆயுதப் போராட்டம் உருவானதற்குக் காரணம் தமிழ்ப்பகுதிகளில் உருவாகிவந்த அரச பயங்கரவாதமும் , படையினரின் மனித உரிமை மீறல்களும் , இனக்கலவரங்களுமே... புதிய அரசியலமப்பு உருவாக்கிய போராட்டங்கள்.. அக்காலகட்டத்தில் பல எழுச்சிக்கூட்டங்கள் நடைபெற்றன.. நீராவியடிப்பிள்ளையார் கோவிலில் காசி ஆனந்தன் புதிய அரசியலமைப்பை எரித்துக் கைது செய்யப்பட்டமை , தமிழ் இளைஞர் பேரவை இளைஞர்கள் கைது செய்யப்பட்டமை, அவ்வப்போது நடைபெற்ற படையினரின் அத்து மீறல்கள்.. இவை போன்ற காரணங்களினால் சமூகத்தில் ஏற்பட்ட சூழல் இளைஞர்களை ஆயுதங்களை ஏந்த வைத்தது... இவ்விதமான சூழல் ஒருவித சுதந்திரமற்ற நிலையை உணர்வதற்கு வழி வகுத்தது.. அவ்விதமான உணர்வுகள் ஏற்பட்டதால்தான் இயல்பாகவே போராட்டம் ஆயுதத்தை நோக்கித் திரும்பியது.... கூட்டணியினர் அரசியல் அமைப்பாகச் செயல்பட , திரைமறைவில் இளைஞர்கள் ஆயுதப்போராட்ட அமைப்பாகச் செயற்படும் நிலைதான் ஆரம்பத்தில் நிலவியது.' என்று எழுதியிருந்தேன்.

அதற்குரிய தனது எதிர்வினையாக அவர் ' 70 களின் ஆரம்பத்தில் படைகளின் அத்துமீறல்கள் எங்கு நிகழ்ந்தது. முக்கியமாக பலாலி முகாமில் 150 பேர் வரை தான்

இருந்தனர். வெள்ள நிவாரணத்துக்கு வரும் படையாகவே அது இருந்தது' என்று கூறியிருந்தார். இதற்குரிய என் எதிர்வினையாக நான் 'நான் இங்கு படையினர் என்று பாவித்தது பொதுவான அர்த்தத்தில். ஆரம்பத்தில் காவல் படையினரால் (போலிஸ்) தமிழ் இளைஞர்கள் மேல் புரியப்பட்ட மனித உரிமை மீறல்கள் என்னும் அர்த்தத்தில்.... ஆரம்பத்தில் 1979 வரையென்று கூறலாம் பெரும்பாலும் காவல்படையினராலேயே மனித உரிமை மீறல்கள் புரியப்பட்டன. 74 தமிழாராய்ச்சி படுகொலை, 77 கலவரத்தில் யாழ் நகரில் தமிழ் இளைஞர்கள் கொல்லப்பட்டமை போன்றவை.. சாதாரண பொதுமக்கள் மீதெல்லாம் தேவைக்கதிகமாக ஓரபட்சமாக சட்டத்தைக் காவல் படையினர் பிரயோகித்தார்கள்... இவையெல்லாமே ஒரு வித சுதந்திரமற்ற நிலையினை இளைஞர்களுக்கு உணர வைத்தன.. குறிப்பாகச் சிங்கள இனக்காவல் படையினர் தமிழ் இளைஞர்களின் சைக்கிள்களின் காற்றைத்துறந்து விடல், அது போன்ற குற்றங்களில் பிடிபட்டவர்களைக் காவல் நிலையத்துக்கு அழைத்துச் சென்று வழக்குப் பதிவு செய்தல் போன்றவையெல்லாம் ... சாதாரணத் தமிழ் இளைஞனின் உணர்வுகளைத் தூண்டி விட்டன' என்று கூறியிருந்தேன். இவ்விதமாகத்தான் சைக்கிள் இவ்விவாதத்தில் நுழைந்தது. இதனைத்தொடர்ந்து இலங்கைத்தமிழர்களின் வாழ்வில் , அவர்தம் உளவியலில் சைக்கிள் எவ்வளவு தூரம் ஆதிக்கம் செலுத்தியது என்பது பற்றிய சிந்தனையின் விளைவுகளாக அவர் சில பதிவுகளையிட்டிருந்தார்.

அவ்விதமான பதிவுகளிலொன்றில் அவர் பின்வருமாறு கூறியிருந்தார்: "நண்பர் கிரிதரன் 70 களில் நடந்த படையினரின் அட்டூழியங்களாக தமிழாராய்ச்சி மாநாட்டுப் படுகொலைகள் மற்றும் 77 வன்முறைகளை சொல்லிவிட்டு சொல்லி ஒரு சுவாரசியமான தகவலையும் சொன்னார். அது பின்வருமாறு:. ' குறிப்பாகச் சிங்கள இனக்காவல் படையினர் தமிழ் இளைஞர்களின் சைக்கிள்களின் காற்றைத்துறந்து விடல், அது போன்ற குற்றங்களில் பிடிபட்டவர்களைக் காவல் நிலையத்துக்கு அழைத்துச் சென்று வழக்குப் பதிவு செய்தல் போன்றவையெல்லாம் ... சாதாரணத் தமிழ் இளைஞனின் உணர்வுகளைத் தூண்டி விட்டன'. இதனை சொன்னவுடன் எனக்கு பழைய நினைவொன்று. நான் 1981 இல் புலிகளில் இருந்தவர்களுக்கு மதுரையில் ஒரு பெரும் வீடொன்றெடுத்து உடற்பயிற்சி மற்றும் ஆயுதங்கள் பற்றிய வகுப்பு எடுத்துவந்தேன். கிட்டு பொன்னம்மான் சந்தோசம் போன்றோருக்கு அப்போ பயிற்சி கொடுத்தேன். எனது பயிற்சி முறை கடினமானது. தங்களை வாட்டி எடுப்பதாக சொல்லுவர். நானும் சேர்ந்து அவர்களுடன் பயிற்சி செய்வேன். அப்போ ஒரு நாள் பொன்னம்மானை பார்த்து தமிழீழம் வந்தா உனக்கு என்ன பதவி விருப்பம் என்று . அவர் உடனே பொலிஸ்காரராக வந்தா காணும் . லைட்டில்லாமல் சைக்கிளிலை போறவையை மறிச்சு அவைக்கு இரண்டு அடி போட்டு காற்றை திறந்து விட்டா சந்தோசம் என்றார்."

இவ்விதமாகப் பதிவிட்ட அவர் மேலும் சில பதிவுகளில் சைக்கிளைப்பற்றிக் குறிப்பிட்டிருந்தார். அவை வருமாறு:

"யாழ்ப்பாணத்தாருக்கும் சைக்கிளுக்கும் ஒரு அன்னியோன்னிய பிணைப்பு இருந்தது. சைக்கிளை அவர்கள் காதலித்தார்கள். அதனை கழுவித்துடைத்து எண்ணை பூசி பார் முழுக்க கிளிப் போட்டு உலாவிவருபவர் பலர். சைக்கிளை தொட்டால் கோபப்படுபவர்களும் இருந்தார்கள். ரலி சைக்கிள் வைத்திருப்பவர்கள் அது பற்றி ஒரு வரலாறே வைத்திருப்பர். இயக்கம் தொடங்கினதே சைக்கிளில் தான். சைக்கிளில் வந்த இருவர் சரமாரியாக சுட்டனர் என அக்காலம் பத்திரிகை தலையங்கங்கள்.. சைக்கிளை பற்றி தெரியாதவர் இலக்கியம் பற்றி பேச தகுதியற்றவர் என்றளவுக்கு சைக்கிள் செல்வாக்கு செலுத்தியது. ஜேசுராசாவின் அலை சஞ்சிகையில் ஒரு விமர்சனம். ஒருவர் இன்னொருவர் பற்றிய இலக்கிய விமர்சனம் செய்கையில் அந்த குறிப்பிட்ட நபருக்கு சைக்கிள் டயருக்கு வால் டியூப் மாத்தத்தெரியாது என்பது ஒரு முக்கிய விமரசனமாக அமைந்தது. இதனை நான் ஏன் சொல்கிறேன் என்றால் ஆயுதப்போராட்டம்

ஆரம்பித்ததற்கு சைக்கிளும் ஒரு காரணமாயிருந்திருக்கிறது. ஈபி ஆர் எல் எப் இன் மாணவர் அணி ஒழுங்கு செய்த மாபெரும் ஊர்வலத்தின் போது ஈபி ஆர் எல் எப் தோழர் ஒருவர் தனது அயல்வீட்டுக்காரரையும் கூட்டிக்கொண்டு போயிருக்கார். அவரது சைக்கிளில் இருவரும் போனார்கள். ஊர்வலத்தில் போன்வர்களின் சைக்கிள்களை பொலிஸ் பறிமுதல் செய்தது. அரசுக்கெதிரான கோசங்களில் திருடிய சைக்கிளை திருப்பித்தா என்பதும் ஒன்று. அந்த அயலவர் வேறொரு கோசத்துக்கும் அசையவில்லை. திருடிய சைக்கிள் கோசம் வந்தவுடன் திருப்பித்தா என்று கத்தினாராம். சைக்கிள் அவரது தகப்பனாருக்கு சொந்தம் என்பது கொசுறுத்தகவல்."

இதற்குரிய எதிர்வினையாக நான் இட்ட எதிர்வினையில் பின்வருமாறு கூறியிருந்தேன்: "என் சைக்கிள் அனுபவம் பற்றி ஏற்கனவே முகநூலில் பதிவு செய்துள்ளேன். அம்மா ஆசை ஆசையாக வாங்கித்தந்த ரலி சைக்கிள் யாழ் பொதுசன நூலகத்தில் களவு போனது. பின்னர் அதைக் கண்டு பிடித்ததாக பொலிசார் அறிவித்தனர். இரண்டு மூன்று வருடங்களாக யாழ் நீதி மன்றத்தில் வழக்கு நடந்தது. அவ்வழக்கில் பொறுப்பாக இருந்த பொலிஸ் அதிகாரி சார்ஜன் அண்டன். வழக்கை நடத்தியவர் நீதிபதி ஞானச்சந்திரன். சைக்கிளைப்பறிகொடுத்த எனக்காக ஆஜராகியவர் முன்னாள் மேயர் விசுவநாதன். வழக்கு எடுப்பதற்கு நேரம் சென்றதால் அவரது உதவியாளரே வழக்கு கவனத்துக்கு வந்தபோது எனக்காக ஆஜரானார். அவர் விசுவநாதன் அவர்களின் உதவியாளராகவிருந்த யாழ் முன்னாள் எம்.பி.யோகேஸ்வரன். நான் நீண்ட தலை முடி வளர்த்து, பெல் பாட்டத்துடன் நீதி மன்றம் சென்றிருந்தேன். நீதிபதி ஞானச்சந்திரன் கடுமையாக எச்சரித்தார். வருடங்கள் கழிந்து வழக்கு முடிந்தபோது புதிதாக வாங்கிப் பறிகொடுத்திருந்த என் சைக்கிளின் கறள் பிடித்த சைக்கிள் பாரின் துண்டுகள் இரண்டும், இரண்டு வீல்களும் மீள எனக்குக் கிடைத்தன. வழக்கைக் கையாண்ட சார்ஜன் அண்டன் பரிசுத்த விலாசில் இராணுவத்தினருடன் ஏற்பட்ட சலசலப்பில் இராணுவத்தினரால் சுட்டுக்கொல்லலப்பட்டார். நீதிபதி ஞானச்சந்திரனும் முல்லைத்தீவு அரசாங்க அதிபராகவிருந்தபோது கொல்லப்பட்டார். யாழ் எம்.பி.யோகேஸ்வரனும் பின்னர் கொல்லப்பட்டார். சைக்கிள் தொலைந்தபோது என்னிடமிருந்த அதன் டைனமோவை குமாரசுவாமி டெக்ஸ்டைலில் வேலை செய்த இளைஞர் ஒருவருக்கு 200 ரூபாவுக்கு விற்றிருந்தேன். அவர் 77இல் யாழில் பொலிசாரால் சுட்டுக்கொல்லப்பட்ட இளைஞர்களிலொருவர். என் சைக்கிள் புராணம் இப்படிச் செல்கிறது. அதன் பின் என் வாழ்க்கையில் ரலி சைக்கிளே எனக்குக் கிடைத்ததில்லை."

மேலுமொரு பதிவில் அவர் பின்வருமாறு எழுதியிருந்தார்: "சைக்கிளுக்கும் ஆயுதப்போராட்டத்துக்கும் உள்ள ஆழமான உறவுக்கு ஒரு பெரும் கதையே உருவாக்கலாம் போலிருக்கு. சைக்கிளைப்பழித்தவனை என் தாய் தடுத்தாலும் விடேன் என்று கோசத்தை மாத்தலாம். இன்னொரு முக்கிய தகவல் . 78 இல் பிரபாகரன் தேடப்படும் போஸ்டரை இலங்கை அரசு தயாரித்த போது அவருக்கு மேல் சாட்டப்பட்ட குற்றங்களில் ஒன்று சைக்கிள் திருட்டு."

இவை பற்றிய சைக்கிள் பற்றிய பதிவுகளைத்தொடர்ந்து சின்னையா ராஜேஸ்குமார் ' நீங்க சைக்கிளை பற்றி எழுதினதால நான் சைக்கிள் பற்றி நிறைய எழுதிட்டேன். உங்க கமெண்டுகளால் எனது சிந்தனை அதிகமாகுது.' என்று தனது எதிர்வினையொன்றில் தெரிவித்திருந்தார்.

சைக்கிளைப்பற்றிய மேற்படி முகநூற் பதிவுகள் மேலும் பலவற்றை நினைவு படுத்தி விட்டன. முதன் முதலாகச் சைக்கிள் ஓடப் பழகியது, கல்லுண்டாய் வீதி வழியாக காலையும், மாலையும் செய்த சைக்கிள் சவாரிகள், யாழ் நகரில் சைக்கிளில் சுற்றித்திருந்த பதின்ம வயது நினைவுகள், கீரிமலைக்கு நண்பர்களுடன் செய்த சைக்கிள்

பயணங்கள் என்று எழுதுவதற்குப் பலவுள்ளன. அவற்றை இன்னுமொரு சமயத்தில் பார்ப்போம்.

## 62. அராலி நினைவுகள்..

என் பால்ய காலம் அதிகமாக வன்னி மண்ணில் கழிந்தால் (ஆரம்பத்தில் யாழ் வண்ணார்பண்ணை) , பதின்ம வயதுப்பருவம் யாழ் நகரிலும், அராலி வடக்கிலும் கழிந்தது. என் அம்மாவின் ஆசிரியப்பணி காரணமாகவே எமது இடமாற்றமும் நிகழ்ந்தது. என் சகோதர, சகோதரிகளுடன் ஒப்பிடும்பொழுது அவர்களது பால்ய மற்றும் பதின்மவயதுப்பருவத்தில் முக்கிய இடம் பெற்றிருப்பது அராலி வடக்கு. ஆனால் நான் என் பதின்மவயதுப் பருவத்தில் பெரும்பாலும் ஆச்சி வீட்டிலிருந்தே பாடசாலை சென்றதாலும் (யாழ் இந்துக்கல்லூரி), என் பதின்ம வயதினை ஆக்கிரமித்திருந்தது யாழ்ப்பாணமே.

அராலியென்றதும் என் நினவில் பசுமையாக நிற்பவை கல்லுண்டாய் வெளியும், காக்கைதீவுக் கடற்கரையும், கடற்கரையை நோக்கி விண்ணில் கோடு கிழிக்கும் நீர்க்காகங்களும், நவாலி மண் கும்பிகளும், பசுமையான வயல்வெளிகளும், அந்திகளில் கட்டுமரங்களில், படகுகளில் பயணிக்கும் மீனவர்களும், அராலிப் பாலமும், அராலி வடக்கினூடு சுழிபுரம் செல்லும் இ.போ.ச பஸ்ஸும்தாம்.

அதிகாலைகளில் சைக்கிளில் யாழ்ப்பாணம் செல்லும்போதும், அந்திப்பொழுதுகளில் சைக்கிளில் சைக்கிளில் வீடு திரும்புவதும் எனக்கு மிகவும் பிடித்தமான பொழுதுகள். குறிப்பாக அந்திப்பொழுதுகள் அற்புதமானவை. இன்பம் பயப்பவை. இன்னும் அவ்வந்திப்பொழுதுகள் நெஞ்சில் பசுமையாகவுள்ளன.

ஓட்டுமடத்திலிருந்து காரைநகருக்குச்செல்லும் பாதை பிரிகிறது. அப்பாதை பின்னர் அராலியில் அராலி தெற்காகவும், அராலி வடக்காகவும் பிரிந்து, அராலி வடக்கினூடு செல்லும் பாதை நேராக வட்டுக்கோட்டையை ஊடறுத்துக்காரைநகரை நோக்கிச்செல்லும். ஓட்டுமடத்திலிருந்து பிரிந்ததும் உடன் தெரிவது யாழ் முஸ்லிம் மக்கள் குடியிருந்த பொம்மை வெளிக்குடியேற்றம்தான். யாழ் மேயர் துரையாப்பாவின் காலத்தில் அவர் முஸ்லிம் மக்களின் பேராதரவு பெற்றவராகவிருந்தார். அவரது காலத்தில் உருவான குடியேற்றத்திட்டமது. அதனைத்தாண்டிச் சென்றால் நாவாந்துறையிலிருந்து வரும் பாதை காரைநகர்நோக்கிச்செல்லும் பாதையுடன் வந்திணையும். அந்தச்சந்தியைத்தாண்டினால் புகழ்பெற்ற காக்கைத்தீவுக்கடற்கரையும் , மீன் சந்தையும் எதிரே விரியும். காக்கைதீவுச்சந்தையைக் கடந்தால் மீண்டும் பாதை வெளியினூடு ஊடறுத்துச்செல்லும்.

மேற்குப்புறத்தில் காக்கைதீவுக்கடலும், புல்வெளியும், கிழக்கில் வயல்களும், வயல்களை ஊடறுத்து நோக்கினால் தொலைவில் தனிமையில் மோனமியற்றும் துறவிகளாக நவாலி மண் கும்பிகளும் (இவை பண்டைய யாழ்ப்பாணத்தின் வரலாற்றை வெளிப்படுத்தும் மண் மேடுகள். தொல்லியல் வரலாற்று ஆய்வாளர் பொ.இரகுபதி ஆனைக்கோட்டை, நவாலை மண் கும்பிகளை ஆய்ந்து நூல்கள் எழுதியிருக்கின்றார்.) காணப்படும். தொடர்ந்து சென்றால் புகழ்பெற்ற கல்லுண்டாய் வெளியும், புகழ்பெற்ற கல்லுண்டாய் வைரவர் ஆலயமும் எதிரே தெரியும். அதன் பின் செல்லும் பாதையின் மேற்குப்புறத்தே கல்லுண்யாய் உப்பளமும் அதனைத்தாண்டினால் செல்லும் பாதை அராலிப்பாலத்தைத் தாண்டியதும் இரண்டாகப் பிரியும். மேற்காகப்பிரியும் பாதை அராலி தெற்கு நோக்கிச்செல்ல , நேராகச் செல்லும் பாதை அராலி வடக்கை ஊடறுக்கும். இவ்விதம் ஊடறுக்கும் பாதையை , அராலி தெற்கு நோக்கிச்சென்ற பாதை மீண்டும் வட்டுக்கோட்டைச் சந்தியில் வந்து சந்தித்து, சங்கானை நோக்கிச் செல்லும்.

இந்த அராலிப்பாலம் ஒருவிதத்தில் புகழ்பெற்றது. யாழ்நகரின் புகழ்பெற்ற ஆறான வழுக்கியாறு காக்கைதீவுக்கடலுடன் கலப்பது இந்தப்பாலத்தினூடுதான். இந்த வழுக்கியாறு உண்மையின் நீண்டதொரு வாய்க்காலே. இதுபற்றிச் சுவையானதொரு புதினத்தை எழுத்தாளர் செங்கை ஆழியான் 'நடந்தாய் வாழி வழுக்கியாறு' என்று எழுதியிருக்கின்றார். அது சிரித்திரனில் வெளியான குறுநாவல். பின்னர் சிரித்திரன் பிரசுரமாகவும் வெளியானது.

அந்திப்பொழுதுகளில் தென்றலின் சிலுசிலுப்பில் , வயல்களை, வெளிகளை, ஒருபுறம் விரியும் கடலினை ஊடறுத்துப்பயணிப்பது அற்புதமானதோர் அனுபவம். அந்திபொழுதுகளில் மெல்லிய இருள் பரவத்தொடங்கும். கட்டுமரங்களில், படகுகளில் மீனவர்கள் தொழிலுக்குச்செல்வது நிழல்களாகத்தென்படும். காக்கைதீவுக்கடலும் , சிவந்த அடிவானும் கலக்குமிடத்தில் அந்திச்சூரியன் பேரெழிலுடன் மூழ்கும் காட்சி அனுபவித்து உணரவேண்டியதொன்று.

சில சமயங்களில் காக்கைதீவுக் கடற்கரையைத்தாண்டியதும் , மேற்குப்புறத்தே கடலை நோக்கி விரியும் வெளியில் மீனவர்கள் பெரும் சூலைகளில் கடலட்டைகளை அவிய வைத்து, வீதியின் ஓரமாக அவிந்த கடலட்டைகளைக்காயப்போடுவார்கள். கடலட்டையை பிறநாடுகளுக்கு ஏற்றுமதி செய்தார்கள். அந்தப்பிராந்தியமெங்கும் அக்காலங்களில் கடலட்டை அவியும், காயும் மணமே பரந்துகிடக்கும்.

அதனைத்தாண்டிச்சென்றால் நவாலிபகுதியிலிருந்து வரும் சிலர் ஆட்டு மந்தைகளை ஓட்டிவந்து , புல்வெளியில் (மேற்குப்புறமாகவிருந்த) மேயவிட்டுக்கொண்டிருப்பார்கள். அவர்களில் ஒருவர் 'எண்ணெய்க்கார ஐயா'. இவரிடமிருந்துதான் எங்கள் ஆச்சி நாற்பது வருடங்களாக நல்லெண்ணெய் வாங்கிவந்தார். வீட்டில் செக்கு கொண்டு உருவாக்கும் நல்லெண்ணெய்யை இவரிடமிருந்து வாங்குவதற்கென்று வாடிக்கையாளர்கள் யாழ் நகரில் பலரிருந்தார்கள். கடுக்கனுடன் , எப்பொழுதும் சிரித்த முகத்துடன் காணப்படும் இவரை நாம் 'எண்ணைக்கார ஐயா' என்றே சிறுவயதில் அழைத்தது ஞாபகத்துக்கு வருகிறது.

வடக்கு அராலியினூடு சென்று, வட்டுகோட்டையில் திரும்பி சுழிபுரம் செல்லும் இ.பொ.ச பஸ்ஸை ஒருவிதத்தில் என்னால் மறக்க முடியாது. அதற்குக்காரணம் அந்தப் பஸ்ஸின் 'கண்டக்டர்'தான். அவரது பெயர் மணியம் என்று நினைக்கின்றேன். கட்டப்பொம்மன் மீசையும், சந்தனப்பொட்டும், சிரித்த முகமுமாகக் காணப்படுமிவர், பிரயாணிகளுடன் மிகவும் கலகலப்பாக, வேடிக்கையாகப் பழகுவார். மிகவும் கலகலப்பாகத்தன் பணியினைச் செய்ததுடன், பயணிகளையும் இன்பமுற வைத்தவரிவர். அதனால்தான் இன்னும் என் நெஞ்சில் பவனிவருகின்றார்.

## 63. ‘ஓட்டோ மெக்கானிக் விஞ்ஞானி’

எழுபதுகளில் யாழ்ப்பாணத்தில் 'விஞ்ஞானி' என்றொருவர் இருந்தார். இவர் 'மோட்டார் சைக்கிள் மெக்கானிக்' என்று நினைக்கின்றேன். யாழ் ஸ்ரான்லி வீதியில் இவரது மோட்டார் சைக்கிள் திருத்துமிடம் இருந்திருக்க வேண்டுமென்று நினைக்கின்றேன். மோட்டார் சைக்கிளில் மிகுவும் விரைவாகச் செல்வார். ஒரு நாள் அவ்விதம் சென்றவர் மோட்டார் சைக்கிள் விபத்தில் கொல்லப்பட்டார்.

இன்னுமொருவர் 'கொக்குவில் சந்திரன்'. இவரும் மோட்டார் சைக்கிள்களையெல்லாம் திருத்துவார். இவரைக் காணும் சமயங்களிலெல்லாம் இவர்தாண்டா மோட்டார் சைக்கிள் எஞ்சினில் ஹெலிகொப்டர் செய்தவர் என்பார்கள். அமெரிக்காவில் இருந்திருந்தால் இவர் நிலையே வேறு என்பார்கள். வேறு யார்? நண்பர்கள்தாம். இவர்களைப்பற்றி மேலதிகத் தகவல்களிருந்தால் அறியத்தாருங்கள். நன்றி. இவர்களைப்போன்ற ஆளுமைகள் பற்றிய தகவல்களையெல்லாம் பதிவு செய்ய வேண்டும்.

## 64. 'கொண்டக்டர்' மணியம்!

காணொளி ஓடிக்கொண்டிருந்தது. நாயகனும், நாயகியும் பஸ்ஸொான்றினுள் காதற் கனவினில் மூழ்கிக் கிடக்கின்றார்கள். எஸ்.பி.பி.யின் குரல் மனதை மயக்குக்கின்றது. நினைவுகள் பின்னோக்கிச் செல்கின்றன.

இந்தப்பாடலைக் கேட்டதும் ஒரு காலத்தில் யாழ்ப்பாணத்திலிருந்து அராலி வடக்குக்கு பஸ்ஸில் செல்லும் அனுபவம் நினைவுக்கு வந்தது. மானிப்பாய் வீதியால் சென்று, ஓட்டுமடத்தால் திரும்பி, பொம்மை வெளியை ஊடறுத்து, காக்கைத்தீவுக் கடற்கரையைத் தாண்டி, நவாலி மண் கும்பிகளை வியந்து, கல்லுண்டாய் வைரவைரைத்தரிசித்து, உப்பளம் தாண்டி, வழுக்கியாறு வந்து கடலுடன் கலக்கும் அராலிப் பாலத்தில் மனதைப்பறிகொடுத்துச் செல்லும் பஸ்ஸிலொன்று வட்டுக்கோட்டை வழியாக மூளாய் பக்கம் செல்லும். அந்த இ.பொ.ச (இலங்கை போக்குவரத்து சபை) பஸ்ஸின் 'கொண்டக்டர்'களிலொருவர் (நடத்துநர்) தான் மணியம். சிரித்த முகமும், காதில் சொருகிய பென்சிலும், நெற்றியில் சந்தனப்பொட்டுமாக, காற்சட்டை அணிந்து வருவார். பயணிகளுடன் சிரித்துச் சிரித்து வேடிக்கையாகப் பேசிப் பயணிகள் அனைவரையும் மகிழ்ச்சிக்கடலில் ஆழ்த்தி விடுவார்.

அவரைப்போன்ற ஆளுமைகள் அரிதாகத்தான் அவதரிக்கின்றார்கள். இவ்வளவு வருடங்கள் கழிந்தபின்னும் இன்னும் அவரது ஞாபகம் பசுமையாக மனதில் பதிந்துள்ளதொன்றே அவரது சிறப்பினை எடுத்துக்கூறும்.

# 65. யாழ்ப்பாணத்தில் அன்று ஓடிய 'டபுள் டெக்கர் பஸ்'

ஒரு காலத்தில் யாழ்ப்பாணத்துத் தெருக்களில் 'டபுள் டெக்கர் பஸ்'கள் ஓடித்திரிந்தன. எழுபதுகளின் இறுதிவரையில் ஓடியதாக ஞாபகம். கே.கே.ஸ். வீதிவழியாக மானிப்பாய் வரையில் அவ்விதமோடிய 'டபுள் டெக்கரில்' சில தடவைகள் பயணித்திருக்கின்றேன். 'டபுள் டெக்கரில்' பயணிக்கையில் எனக்கு எப்பொழுதுமே மேற்தட்டில் பயணிப்பதுதான் விருப்பம். 'டிக்கற்' எடுத்ததுமே மேலுக்கு ஓடிவிடுவேன். மேல் தட்டிலிருந்தபடி இருபுறமும் விரியும் காட்சிகளைப்பார்த்தபடி, அவ்வப்போது பஸ்ஸுடன் உராயும் இலைகளை இரசித்தபடி செல்வதில் அப்பொழுது ஒரு 'திரில்' இருக்கத்தான் செய்தது. 'டொராண்டோ'வில் உல்லாசப்பிரயாணிகள் நகரைச்சுற்றிப்பார்ப்பதற்காக இவ்விதமான 'டபுள் டெக்கர்' பஸ்களை இன்னும் பாவிக்கின்றார்கள். அவற்றைப்பார்க்கும் சமயங்களிலெல்லாம் அன்று யாழ்ப்பாணத்தில் 'டபுள் டெக்கரி'ல் பயணித்த பால்ய காலத்து அனுபவங்கள்தாம் நினைவுப் புற்றிலிருந்து படம் விரிக்கும். 'டபுள் டெக்கரில்' பயணிப்பதைப்பற்றி ஏன் துள்ளிசைப்பாடகர்கள் 'டபுள் டெக்கரில்' பஸ்ஸில் போனேனடி!' என்று பாடல்கள் எதுவும் எழுதவில்லை என்று இவ்விதமான சமயங்களில் தோன்றுவதுண்டு.

'டபுள் டெக்கர்' பஸ் என்றதும் ஞாபகத்துக்கு வரும் இன்னொரு விடயம். நண்பரொருவர் மானிப்பாய்ப்பக்கமிருந்து வருபவர். அவரது High school sweet heart' ஒருவர் யாழ் வேம்படியில் படித்துக்கொண்டிருந்தார். இவர் என்ன செய்வாரென்றால் பாடசாலை முடிந்து அந்தப்பஸ்ஸில் பயணிக்கும் அந்தப்பெண்ணைப்பார்ப்பதற்காக, அவரது கவனத்தைக் கவர்வதற்காக யாழ் பொது சனநூலகத்துக்குச் சென்று , காத்திருந்து, பாடசாலை முடிந்து அந்த பஸ்ஸில் பயணிப்பார். ஒருபோதுமே நூலகப்பக்கமே செல்லாத நண்பன் இவ்விதம் நூலகம் சென்றது அக்காலத்தில் எமக்கு வியப்பினைத்தந்தது. பின்னர்தான் உண்மை புரிந்தது. ஆனால் அவரது முயற்சி அவருக்கு வெற்றியளிக்கவில்லை. இவ்விதம் யாழ்ப்பாணத்து 'டபுள் டெக்கர்'களில் பல காதல் காவியங்களும் நிகழ்ந்ததுண்டு. காதல் காவியங்கள் எல்லாமே தோல்வியில் முடிபவைதாமே. அந்த வகையில் நண்பரின் காதலும் காவியமாகிவிட்டது.

இந்த டபுள் டெக்கர் பஸ்ஸென்றதும் இன்னுமொரு விடயமும் ஞாபகமும் வருகின்றது. அண்மையில் கனடா வந்திருந்த நித்தி கனகரத்தினம் தனது 'கள்ளுக்கடைப் பக்கம் போகாதே' பாடலைபற்றிக் குறிப்பிடும்போது கூறியவற்றை அவர் பற்றிய பதிவில் குறிப்பிட்டிருந்தேன். அது வருமாறு:

கள்ளுக்கடைப் பக்கம் போகாதே என்ற பாடலுக்கான காரணம் பற்றி அவர் குறிப்பிடும்போது ஒருமுறை 'டபிள் டெக்கர்' பஸ்ஸில் மேற்தட்டில் பயணித்துக் கொண்டிருந்தபொழுது அங்கே ஒரு கிழவரும் பேரனும் பயணித்துக் கொண்டிருந்ததாகவும், நல்ல நிறைவெறியிலிருந்த கிழவர் பேரனுக்கு கள்ளுக் குடிக்கக்கூடாதென்பதை வலியுறுத்தி அறிவுரைகள் கூறிக் கொண்டிருந்ததாகவும், அவர் அப்போது கூறிய வார்த்தைகளின் தாக்கமே பின்னர் அவரை இந்தப்பாடலை எழுத வைத்ததாகவும் குறிப்பிட்டார். ஆக, நித்தியின் 'கள்ளுக்கடைப்பக்கம் போகாதே' என்னும் பாடலுக்கும் ஒருவிதத்தில் இந்த 'டபுள் டெக்கர்' பஸ் காரணமாகவிருந்திருக்கின்றது என்பது புரிகிறது.

# 66. காரைநகர் கடற்கோட்டை பற்றிய நினைவுகள்...

காரைநகர் கடற்கோட்டைக்குச் சென்ற அனுபவம் இந்தப்புகைப்படத்தை இணையத்தில் பார்த்ததும் மீண்டும் சிந்தையில் படம் விரித்தாடியது. நண்பர் கனகவரதா மொறட்டுவைப் பல்கலைக்கழகத்தில் கட்டடக்கலை பட்டப்படிப்புக்காக, 'கட்டடக்கலையின் வரலாறு' என்னும் பாடத்திற்காக, இறுதியாண்டில் ஆய்வுக்காக எடுத்துக்கொண்டிருந்த விடயம்தான் காரைநகர் கடற்கோட்டை. அதற்காக அந்தக் கடற்கோட்டைக்குச்செல்ல வேண்டியிருந்தது. பல்கலைக்கழகக்கால விடுமுறையில் யாழ்ப்பாணம் சென்றிருந்தபோது அவர் என்னிடம் காரைநகர் கடற்கோட்டைக்கு ஆய்வு விடயமாகச் செல்லவிருப்பதாகவும், என்னையும் வரும்படியும் அழைத்தார். நானும் அதற்கிசையவே, ஒரு நாள் காரைநகர் கடற்கோட்டையினைப்பார்ப்பதற்காகச் சென்றோம். எங்களுடன் கனகவரதாவின் வீட்டில் தங்கி படித்துக்கொண்டிருந்த ஊர்காவற்றுறையைச்சேர்ந்த மனோகரன் என்னும் யாழ் இந்து மாணவரும் கூட வந்தார்.

காரைநகரிலிருந்து கட்டுமரத்திலேறி கடற்கோட்டைக்குச் சென்றோம். அக்காலகட்டத்தில் அக்கடற்கோட்டையானது எந்தவிதமான படையினரின் நடமாட்டமுமின்றியிருந்தது. எழுபதுகளில் ஜேவியினரின் புரட்சியையடுத்துக் கைதான ஜேவிபி தலைவர்கள் பலர் அக்கடற்கோட்டையினுள் அடைத்து வைக்கப்பட்டிருந்ததாகக் கேள்விப்பட்டிருந்தேன். நாங்கள் சென்றது 1979 அல்லது 1980 ஆம் ஆண்டாகவிருக்கலாமென்று நினைக்கின்றேன். ஜேவிபியின் தலைவர் ரோகண விஜேவீராவை அங்குதான் 71 ஜேவிபி புரட்சிக் காலகட்டத்தில் சிறை வைத்திருந்தார்கள்.

அக்கடற்கோட்டைக்கான பயணத்தில் இன்னும் மனதிலிருக்கும் விடயம் அக்கடற்கோட்டையின் உட்புறச்சுவர்களில் கைதிகள் தமிழில் அல்லது சிங்களத்தில் எழுதி வைத்திருந்த எழுத்துகள்தாம். அவை ஜேவியினர் அங்கு அடைக்கப்பட்டிருந்த காலத்தில் எழுதப்பட்டவையென அறிந்தோம்.

போர்த்துகீசர் காலத்திலிருந்து இக்காலகட்டம்வரையில் கடலில் நகரைக்காவல் காக்குமொரு கோட்டையாக விளங்கிவரும் அக்கடற்கோட்டை பல்வேறு காலகட்ட நிகழ்வுகளைச் சந்தித்திருக்கும். அவற்றின் சாட்சியாக, ஊமையாகக்கடலினுள் மௌனித்திருந்த அந்தகோட்டை அந்தப்பயணத்தின்போது எமக்கு ஒருவித நெஞ்சக்கிளர்ச்சியினையும், கூடவே வரலாற்றுச் சின்னமொன்றினைப் பார்க்கின்றோமே என்னும் மகிழ்ச்சியினையும் தந்தது இன்னுமென் நெஞ்சினுள் பசுமையாகவுள்ளது.

## 67. காரைநகர் கடற்கோட்டையும், கடற்படை முகாமும் .. மேலும் சில நினைவுகளும்.

காரைநகர் கடற்கோட்டைக்குச் சென்ற அனுபவம் இந்தப்புகைப்படத்தை இணையத்தில் பார்த்ததும் மீண்டும் சிந்தையில் படம் விரித்தாடியது. நண்பர் கனகவரதா மொறட்டுவைப் பல்கலைக்கழகத்தில் கட்டடக்கலை பட்டப்படிப்புக்காக, 'கட்டடக்கலையின் வரலாறு' என்னும் பாடத்திற்காக, இறுதியாண்டில் ஆய்வுக்காக எடுத்துக்கொண்டிருந்த விடயம்தான் காரைநகர் கடற்கோட்டை. அதற்காக அந்தக் கடற்கோட்டைக்குச்செல்ல வேண்டியிருந்தது. பல்கலைக்கழகக்கால விடுமுறையில் யாழ்ப்பாணம் சென்றிருந்தபோது அவர் என்னிடம் காரைநகர் கடற்கோட்டைக்கு ஆய்வு விடயமாகச் செல்லவிருப்பதாகவும், என்னையும் வரும்படியும் அழைத்தார். நானும் அதற்கிசையவே, ஒரு நாள் காரைநகர் கடற்கோட்டையினைப்பார்ப்பதற்காகச் சென்றோம். எங்களுடன் கனகவரதாவின் வீட்டில்தங்கி படித்துக்கொண்டிருந்த ஊர்காவற்றுறையைச்சேர்ந்த மனோகரன் என்னும் யாழ் இந்து மாணவரும் கூட வந்தார்.

காரைநகரிலிருந்து கட்டுமரத்திலேறி கடற்கோட்டைக்குச் சென்றோம். அக்காலகட்டத்தில் அக்கடற்கோட்டையானது எந்தவிதமான படையினரின் நடமாட்டமுமின்றியிருந்தது. எழுபதுகளில் ஜேவியினரின் புரட்சியையடுத்துக் கைதான ஜேவிபி தலைவர்கள் பலர் அக்கடற்கோட்டையினுள் அடைத்து வைக்கப்பட்டிருந்ததாகக் கேள்விப்பட்டிருந்தேன். நாங்கள் சென்றது 1979 அல்லது 1980 ஆம் ஆண்டாகவிருக்கலாமென்று நினைக்கின்றேன்.

அக்கடற்கோட்டைக்கான பயணத்தில் இன்னும் மனதிலிருக்கும் விடயம் அக்கடற்கோட்டையின் உட்புறச்சுவர்களில் கைதிகள் தமிழில் அல்லது சிங்களத்தில் எழுதி வைத்திருந்த எழுத்துகள்தாம். அவை ஜேவியினர் அங்கு அடைக்கப்பட்டிருந்த காலத்தில் எழுதப்பட்டவையென அறிந்தோம்.

போர்த்துகீசர் காலத்திலிருந்து இக்காலகட்டம்வரையில் கடலில் நகரைக்காவல் காக்குமொரு கோட்டையாக விளங்கிவரும் அக்கடற்கோட்டை பல்வேறு காலகட்ட நிகழ்வுகளைச் சந்தித்திருக்கும். அவற்றின் சாட்சியாக, ஊமையாகக்கடலினுள் மௌனித்திருந்த அந்தகோட்டை அந்தப்பயணத்தின்போது எமக்கு ஒருவித நெஞ்சக்கிளர்ச்சியினையும், கூடவே வரலாற்றுச் சின்னமொன்றினைப் பார்க்கின்றோமே என்னும் மகிழ்ச்சியினையும் தந்தது இன்னுமென் நெஞ்சினுள் பசுமையாகவுள்ளது.

காரைநகர் கடற்கோட்டை என்றதும் எனக்கு ஞாபகத்துவரும் இன்னுமொரு விடயம்: காரைநகர் கடற்படை முகாம். இந்த முகாமுக்கு ஒரு முறை மாணவனாகச் சென்றிருக்கின்றேன். அப்பொழுது யாழ் இந்துக்கல்லூரியில் பல்கலைக்கழக புகுமுக வகுப்பு படித்துக்கொண்டிருந்தேன். அன்று என் முக்கிய நண்பர்களாக விளங்கியவர்களிலொருவர் ஆனைக்கோட்டை கிஷோர்குமார். இவரது பெற்றோர் இருவரும் ஆசிரியர்கள். இவர் அக்காலகட்டத்தில் யாழ்ப்பாணம் வந்திருந்த தென்னிலங்கையைச்சேர்ந்த சிங்கள மாணவர்கள் சிலருடன் யாழ்ப்பாணத்தின் பௌத்தர்களுக்கு முக்கியமான இடங்கள் சிலவற்றுக்குச் செல்லவிருப்பதாகவும் என்னையும் வருமாறும் அழைத்திருந்தார். அக்காலகட்டத்தில் மாணவர்கள் பரிவர்த்தனைத் திட்டமொன்றின்கீழ் தென்னிலங்கை மாணவர்கள் யாழ்ப்பாணம் வந்து தமிழர்கள் இல்லங்களில் தங்குவதும், யாழ்ப்பாண மாணவர்கள் தென்னிலங்கை சென்று சிங்களவர்கள் வீடுகளில் தங்குவதும் வழக்கமாகவிருந்தது.

நண்பர் கிஷோர்குமாரின் வேண்டுகோளை ஏற்று, நானும் அவர்களுடன் சென்றேன். அவ்விதம் சென்ற பல இடங்களில் இன்னும் ஞாபகத்திலிருக்கும் இரு இடங்கள் காரைநகர் கடற்படை முகாம். அடுத்தது காங்கேசன்துறை பெளத்த விகாரை. பெளத்த விகாரைக்குச் சென்றபோது சிங்கள மாணவர்கள் அந்த விகாரையின் மதகுருவின் கால்களில் விழுந்து வணங்கினார்கள். பொதுவாகச் சிங்கள் மக்கள் பெளத்த துறவிகளுக்கு அவர்களது மதகுருக்களுக்கு மிகவும் முக்கியத்துவம் கொடுப்பவர்கள். நாங்கள் கைகளைக்கூப்பி வணக்கத்தைத்தெரிவித்தோம். நாங்கள் பொதுவாக இவ்விதம் மதகுருக்கள் பாதங்களில் விழுந்து வணங்குவதில்லை.

கடற்படை முகாம் சென்றபோது வாசலில் எங்களுடன் வந்த சிங்கள மாணவர்களிலொருவர் அவரது உறவினரொருவர் அங்கு கடற்படை வீரராகவிருப்பதாகவும், அவரைச்சந்திக்க விருப்பதாகவும் கூறினார். அதன் பின்னர் அவர்கள் எங்களை உள்ளே செல்ல அனுமதித்தார்கள். அந்தச்சிங்கள மாணவரின் உறவினரான கடற்படைச்சிப்பாய் எங்கள் அனைவரையும் அழைத்துக்கொண்டு அங்குள்ள கள்ளுத்தவறணைக்குக்கூட்டிச்சென்றார். முகாமினுள் கடற்படை வீரர்கள் பல்வேறு வேலைகள் செய்துகொண்டிருந்ததை அப்போது அவதானித்தோம். பாதைகள் அமைப்பது, மரங்களை வெட்டுவது என்று பல்வேறுவிதமான வேலைகளில் அவர்கள் மும்முரமாகவிருந்தார்கள். அவர்கள் யாரும் எங்களை விடுப்பாகவோ, வியப்பாகவோ அல்லது சந்தேகத்துடனோ பார்க்காதது இப்பொழுது நினைத்தால் வியப்பினைத்தருகிறது.

தவறணையில் உடனிறக்கிய கள்ளினைப்பெற்று, அந்தச்சிப்பாய் அந்தச் சிங்கள மாணவர்களுக்கும், கூட வந்திருந்த தமிழ் மாணவர்களுக்கும் தந்தார். உடன் கள் பெரிதாக வெறிக்காது. இலேசாக கணகணப்பைத்தரும். அவ்வளவுதான். சிறிது நேரம் அந்தச்சிப்பாயுடன் சிங்கள் மாணவர்கள் உரையாடினார்கள். அதன்பின்னர் அவர்களை அழைத்துக்கொண்டு இ.போ.ச பஸ்ஸில் யாழ்ப்பாணம் நோக்கித்திரும்பினோம். அவ்விதம் திரும்பும்போது சிங்கள மாணவர்கள் பைலாப் பாடல்களைப் பாடத்தொடங்கினார்கள். பொதுவாக சிங்கள மக்களுக்குப்பயணிப்பதிலும், அவ்விதம் பயணிக்கும்போது பைலாப்பாடல்களைப்பாடிக்கொண்டும் செல்வது மிகவும் பிடிக்கும். பஸ்ஸின் பின்புறத்தில் அமர்ந்திருந்த சிங்கள மாணவர்கள் பெருங்குரலெடுத்து சிங்கள பைலாப்பாடல்களைப்பாடத்தொடங்கினார்கள். உடனேயே பஸ் சாரதி பஸ்ஸை நிறுத்துவிட்டார். அவர்கள் பாடுவதை நிறுத்திவிட்டு அமைதியாக வந்தால்தான் பஸ் மீண்டும் ஓடுமென்று கூறிவிட்டார். அதன் பிறகு பாடிக்கொண்டிருந்த சிங்கள மாணவர்கள் தம் பாட்டை நிறுத்திவிடவே , பஸ் மீண்டும் நகரத்தொடங்கியது.

அக்காலகட்டத்தில் ஈழத்தமிழர்கள் பிரச்சினை ஆரமபமாகிவிட்டிருந்தது. தமிழ் இளைஞர் பேரவையினர் மீதான படையினரின் அடக்குமுறை தொடங்கிவிட்டிருந்தது. இருந்தாலும் மாணவர்களாகிய நாங்கள் கடற்படை முகாமுக்குச் சென்றபோது அவர்கள் எந்தவிதச்சோதனைகளுமின்றி உள்ளே விட்டார்கள். நாங்கள் மிகவும் இளையவர்களாக, மாணவர்களாக இருந்ததும், சிங்கள மாணவர்களுடன் சென்றதும் காரணங்களாக இருக்கக்கூடும். மேலும் அக்காலகட்டத்தில் யாழ்ப்பாணத்தில் பொலிசாரின் அடக்குமுறையே அதிகமாகவிருந்தது. படையினர் பெரிதும் முகாம்களிலேயே முடங்கிக்கிடந்தனர். அக்காலகட்டத்தில் மாலை நேரங்களில் கடற்படையினர் அழகாக ஆடைகளை அணிந்தபடி , இபோச பஸ்களில் யாழ் நகருக்குச் சென்று திரைப்படங்கள் பார்த்துத்திரும்புவது மிகவும் சகஜமானதொரு விடயமாகவிருந்தது.

ஆனைக்கோட்டை கிஷோர்குமார் ஆறடி வரையில் உயரமானவர். கராட்டியில் கறுப்பு பட்டை பெற்றவர். அவர், அவரது சகோதரன், சகோதரி எல்லாருமே கராட்டியில் வல்லுநர்கள். இவர் பின்னர் தமிழகத்தில் கிறிஸ்ட்டியன் கல்லூரியில் படித்தார்.

அக்காலகட்டத்தில் நான் மொறட்டுவைப் பல்கலைக்கழகத்துச் சென்று விட்டேன். ஒரு நாள் விரிவுரைகள் முடிந்து , மதியம் விடுதியிலுள்ள என் அறைக்குத்திரும்பியபோது அங்கு இவர் என் படுக்கையில் படுத்திருந்ததைக்கண்டு வியப்படைந்தேன். தமிழகத்திலிருந்து இலங்கை திரும்பியிருந்தவர், என் முகவரியை யாரிடமோ பெற்று வந்திருந்தார். அன்று அவருடன் கோட்டையிலுள்ள உலகச்சந்தைக்குச் சென்றேன். அங்கு அவர் தமிழகத்துக்குக்கொண்டு செல்வதற்காகப் பல பொருட்களை வாங்கினார். அன்றுதான் நான் அவரை இறுதியாகச்சந்தித்தது. அதன்பிறகு இன்றுவரை அவரைச்சந்திக்கவில்லை.

தமிழகத்திலோ அல்லது கேரளாவிலோ கராட்டி வகுப்புகளை அவரும் ,அவரது சகோதரனும், சகோதரியும் எடுப்பதாகவும், மலையாள நடிகர்கள் பலர் அவரிடம் கராட்டிக்கலை பயின்றதாகவும், ஒரு சில மலையாளப் படங்களில் அவர் நடித்ததாகவும் செவிவழிச்செய்தியாகக் கேள்விப்பட்டிருக்கின்றேன். உண்மை பொய் தெரியாது. ஆனால் ஒருமுறை இலங்கையில் நடைபெற்ற கராட்டிப்போட்டியொன்றில் முதலாவதாக வந்திருக்க வேண்டிய அவர் இரண்டாவதாக வந்ததாகக் கேள்விப் பட்டிருக்கின்றேன். அந்நிகழ்வுபற்றிய புகைப்படமொன்றினையும் கொழும்பிலிருந்து வெளியான ஆங்கிலப்பத்திரிகையொன்றில் பார்த்ததாக ஞாபகம். அவர் தற்போது ஐரோப்பாவிலெங்கோ வாழ்வதாகவும் கேள்விப்பட்டிருக்கின்றேன். உண்மை பொய் தெரியவில்லை.

# 68. வழுக்கையாறு அல்லது வழுக்கியாறு!

எழுத்தாளர் நட்சத்திரன் செவ்விந்தியன் தனது முகநூற் பதிவொன்றில் 'முன்னொரு காலத்தில் யாழ்ப்பாணத்தில் வழுக்கையாறு என்றொரு வற்றாத ஜீவநதி இருந்தது. இயக்கர் நாகர் காலத்தில் இந்நதியில் தோற்றம்பெற்ற ஒரு நாகரிகமே இருந்தது. இப்போதும் வழுக்கையாற்றுப் படுகையை புகலிடவனமாக பிரகடனப்படுத்தி அதனை சோலையாக்கி அராலியில் தடுப்பணை கட்டி ஆற்றை ஆழ அகலப்படுத்தி அதனோடு இணைந்த குளங்களை புனரமைத்து மேலுஞ்சில குளங்களை அமைத்தால் வழுக்கையாற்றுப் புகலிடவனம் இன்னும் நூறாண்டுகளில் மலைக்காடுகள்(Rainforest) ஆகும். வழுக்கையாறு வற்றாத ஜீவநதியாகும். இந்தக்கனவை நனவாக்குவோம். ' என்று குறிப்பிட்டிருந்தார். உண்மையில் இது நல்லதோர் ஆலோசனை. தமிழ் அரசியல்வாதிகள் கவனிப்பார்களாக.

உண்மையில் வரலாற்றாய்வாளர் முதலியார் இராசநாயகத்தின் கருத்துப்படி மாதோட்டம் புகழ்பெற்ற துறைமுகமாக விளங்கிய காலகட்டத்தில் வழுக்கையாறு பிரசித்தி பெற்றதாகவிருந்தது.

அக்காலகட்டத்தில் நாவாந்துறை, பூநகரி மற்றும் கல்முனை ஆகியனவும் துறைமுகங்களாக விளங்கியதாகவும், நாவாந்துறையிலிருந்து வழுக்கியாற்றின் வழியே யாழ்ப்பாண இராச்சியத்தின் தலைநகராயிருந்த கதிரைமலைக்கு (கந்தரோடை) சங்கடம் என்னுந் தோணிகளில் வியாபாரப்பண்டங்கள் ஏற்றி செல்லப்பட்டனவென்றும், இதனாலேயே நாவாந்துறைக்கு சங்கடநாவாந்துறையென்னும் பெயர் இப்பொழுதும் வழங்கிவருவதாகவும் இராசநாயகம் அவர்கள் கருதுவார்.

வழுக்கையாற்றைப் பொதுவழக்கில் வழுக்கியாறு என்றே கூறுவோம். என் பதின்ம வயதுகளில் படிந்து விட்ட காட்சிகளில் வழுக்கியாறு காக்கைதீவுக் கடலுடன் சங்கமமாகும் அராலிப் பாலமும் அதன் அயற்புறமும் நீங்காத சித்திரங்களாகப் படிந்து விட்டன. அதிகாலைகளில் சைக்கிளில் யாழ்ப்பாணம் நோக்கிச் செல்கையில் அப்பாலத்தடியில் இறால் பிடிக்கும் கடற்றொழிலாளர்களைக் கண்டிருக்கின்றேன். மெல்லிருட்டில் அவர்கள் தொழிலாற்றிக்கொண்டிருக்கும் காட்சியும் என் நெஞ்சில் நிலைத்து நின்று விட்டது.

யாழ் மாவட்டம், வன்னி மாவட்டம் ஆகியவை வரலாற்றுச் சிறப்பு மிக்கவை. இயற்கையெழில் கொண்டவை. உரிய முறையில் இவற்றைக் கவனத்திலெடுத்து அபிவிருத்தி செய்தால் உல்லாசப்பயணிகளின் சொர்க்கபுரிகளிலொன்றாக இதனை மாற்றி விடலாம். ஆக்கபூர்வமாக அபிவிருத்தித்திட்டங்கள் அமைந்தால் மக்களும், நாடும் பெரும் பயனை அடையும்.

## 69. கல்லுண்டாய் வெளிப் பயண நினைவுகள்...

கல்லுண்டாய் வெளியினூடே
பயணித்த நாட்களை
எண்ணிப் பார்க்கின்றேன்.
எத்தனை காலைகள்!
எத்தனை மாலைகள்!
இருள் பிரியா அதிகாலைகளில்
நகர் நோக்கிச் செல்வதுண்டு;
நகர்நோக்கி மானுடர் சிலர்
நடந்தும் சில்லுகளிலும் செல்வர்.
உழைக்கும் தொழிலாளர் அவர்.
வழுக்கியாறு கடலுடன்
சங்கமிக்கும்
பாலத்தில் இறால்
பிடித்துக்கொண்டிருப்பர்
கடற் தொழிலாளர் சிலர்.
கார்க்கியின் தாய் படித்துக்
கனவுகள்
கண்டுகொண்டிருந்த காலமது
கீழ்வானம் சிவந்திருக்க,
அடிவானத்து வெள்ளி கண்டு
அகத்தில் உவகை பொங்க
மேலும் கனவுகளில் ஆழுமென்
நெஞ்சு.
கீழ்வானம் ,
கீழ்வெள்ளி மாந்தர்தம் விடிவினை
எதிர்வு கூறும். என் நெஞ்சோயதை
எண்ணிக் கும்மியடிக்கும்.
உப்பளம், அதையடுத்து
உள்ள கல்லுண்டாய் வைரவர் கோயில்
இன்னும் சிறுதூரம் சென்றால்
இளந்தென்றலில் கதிராடும்
வயல்வெளி, அதனூடு தவமியற்றும்
மண்கும்பிக் குறுமுனிவர்.
கடந்து செல்லின்
காக்கைதீவு மீன் சந்தை.
கட்டுமரம், வள்ளத்தில்
தொழிலுக்குச் செல்லும்
தொழிலாளர்.
தொடர்கையில்
பாதையொன்று நாவாந்துறை பிரிய
பொம்மைவெளி தாண்டி
நகருக்குள் நான்
நுழைவேன்.
மீண்டும் மாலைகளில்
மருத நில மண் நோக்கி
என் பயணம் தொடங்கும்.

மீண்டும் தொடங்குமிரு
சில்லுப் பயணத்தில்
சிந்தை யிழப்பேன்.
அந்திக் கதிராழியில்
அஸ்தமிக்கும் நேரம்.
வெளி ஊடறுத்து விரைகையில்
சில போதுகளில்
உலைகளில் கடலட்டையவித்து
உலரப் போட்டிருப்பர்
வீதியோரங்களில்...
அந்தியிருளில் தொழிலாளர்
வள்ளங்களில் , கட்டுமரங்களில் ..
ஓவியச் சட்டகங்களாய்
நினைவுகளில் படிய..
விரைந்து கொண்டிருப்பேன்.
பசுங்கிளிகள், பல்வகைக்கடற்
பறவைகள்,
வயல்வெளிகளில் பயிர்களாட
வெளிகடந்து , வழுக்கியாறு பாலம்
கடந்து
மடத்தடி தாண்டி வீடு திரும்புகையில்
மனத்தில் மகிழ்ச்சி மலரும்.

# 70. அழியாத கோலங்கள்: மணிவண்ணனின் (நா.பார்த்தசாரதி) 'குறிஞ்சி மலர்'

என் வாசிப்பின் ஆரம்ப காலத்தில் என்னை மிகவும் கவர்ந்த நாவல்களிலொன்று. இந்நாவல் கல்கியில் தொடராக வெளியானபோது நான் தவழ்ந்துகொண்டிருந்தேனென்று நினைக்கின்றேன். ஆனால் பின்னர் வாசிக்கத்தொடங்கியபோது அழகாக 'பைண்டு' செய்யப்பட்ட நிலையில் வாசித்திருக்கின்றேன். பூரணி, அரவிந்தன் மறக்க முடியாத இலட்சிய மானுடர்கள்.

இங்கு கல்கியில் 'குறிஞ்சி மலர்' தொடராக வெளியானபோது ஓவியர் லதாவால் வரையப்பட்ட ஓவியங்களையே காண்கின்றீர்கள். 'குறிஞ்சி மல'ரில் வரும் அரவிந்தனின் பூரணி பற்றிய எழுத்தாளர் நா.பார்த்தசாரதியின் கவிதை வரிகள் எனக்கு மிகவும் பிடித்தவை.

"நிலவைப் பிடித்துச் - சிறு
கறைகள் துடைத்துக் - குறு
முறுவல் பதிந்த முகம்,
நினைவைப் பதித்து - மன
அலைகள் நிறைத்துச்- சிறு
நளினம் தெளித்த விழி.
தரளம் மிடைந்து - ஒளி
தவழக் குடைந்து - இரு
பவளம் பதித்த இதழ்
முகிலைப் பிடித்துச் சிறு
நெளியைக் கடைந்து - இரு
செவியில் திரிந்த குழல்
அமுதம் கடைந்து - சுவை
அளவிற் கலந்து - மதன்
நுகரப் படைத்த எழில்."
"பொன்காட்டும் நிறம்காட்டிப்
பூக்காட்டும் விழிகாட்டிப்
பண்காட்டும் மொழிகாட்டிப்
பையவே நடைகாட்டி
மின்காட்டும் இடைகாட்டி
முகில்காட்டும் குழல்காட்டி
நன்பாட்டுப்பொருள்நயம்போல்
நகைக்கின்றாய் நகைக்கின்றாய்
பண்பாட்டுப் பெருமையெலாம்
பயன்காட்டி நகைக்கின்றாய்."

# 71. ஜெகசிற்பியனின் 'காணக்கிடைக்காத தங்கம்'




என் பால்ய , பதின்மப் பருவங்களில் கல்கி பிரதான பங்கினை வகித்தது என்பேன். நான் விரும்பி வாசித்த எழுத்தாளர்கள் பலரை ,அவர்களது படைப்புகளை அதிகமாக வாசித்தது கல்கி சஞ்சிகையில்தான்.

கல்கியில் வெளியான படைப்புகளூடு என்னை அதிகம் கவர்ந்த எழுத்தாளர்களாகக் கல்கி, கி.ராஜேந்திரன், ஆனந்தி, நா.பார்த்தசாரதி (மணிவண்ணன்), அகிலன், ஜெகசிற்பியன், இந்திரா பார்த்தசாரதி கெளசிகன் (வாண்டுமாமா) , சோமு என்று பலரைக் கூற முடியும். இவர்களது படைப்புகள் பலவற்றையும் , அட்டைகளுடன், கட்டி நூல்களாக வைத்திருந்தேன். விரும்பியபோதெல்லாம் எடுத்து வாசிப்பதுண்டு.

இவ்விதம் எனக்கு அறிமுகமான எழுத்தாளர்களில் ஜெகசிற்பியனும் ஒருவர். அவரது ஜீவகீதம், கிளிஞ்சல் கோபுரம், காணக்கிடைக்காத தங்கம், பத்தினிக்கோட்டம் , சொர்க்கத்தின் நிழல் ஆகியவை என்னிடமிருந்தன.

அவரது எழுத்து நடையும், பாத்திரச் சித்திரிப்பும் என்னை மிகவும் கவர்ந்தவை. அவ்வகையில் என்னைக் கவர்ந்த 'காணக்கிடைக்காத தங்கம்' நாவலின் சில

பக்கங்களையே இங்கு  காண்கின்றீர்கள்.  12.4.70 கல்கியில் வெளியாகி, 21 அத்தியாயங்கள் வரை வெளியாகி முடிவுக்கு வந்த நாவல்.

பெங்களூரில் சைக்கிள் திருத்தும் கடையொன்றில் வேலை செய்யும் அருணகிரி, நகரில் வேலை பார்ப்பவர்களுக்குப் பகலில் சாப்பாடு கொண்டு வந்து கொடுத்துப் பிழைக்கும் கனகா, செல்வச்செழிப்பில் வாழும் மாணவி நிர்மலா, சைக்கிள் கடை முதலாளி ஏழுமலை என்று ஆரம்பமாகும் கதை  அருணகிரி எவ்விதம் தனது திறமையின் காரணமாகக் காலப்போக்கில் குழந்தைகளுக்கான மூன்று சக்கர 'சைக்கிள்' ஒன்றை வடிவமைத்து, உருவாக்கும் தொழிற்சாலையொன்றின் அதிபராக உருவெடுக்கின்றான் என்பதை விபரிக்கும். ஆரம்பத்தில் அவனுக்கு உதவிய 'சோற்றுக்கூடைக்காரி' கனகாவே இறுதியில் அவனது மனைவியாகவும் மாறக் கதை முடிவுக்கு வருகின்றது. ஜெகசிற்பியனின் கதைகள் எல்லாமே ஒரு கருத்தை மையமாகக்கொண்டு உருவாக்கப்பட்டிருக்கும். இதுவும் அத்தகையதொன்றே.

இந்த நாவலில் வரும் அருணகிரி 'நோஞ்சான்' உடல் வாகைக்கொண்டவன். அவனது முதலாளி ஏழுமலையால் 'சோங்கு' என்று அடிகடி அழைக்கப்படுபவன். ஆனால் மிகவும் அழகான, வசீகரம் மிக்க கண்களைக் கொண்டவன். அவனது ஆளுமையை, அவனது வாழ்வை ஆசிரியர் விபரிக்கும் எழுத்து நடை அக்காலகட்டத்தில் வாசிக்கும்போது என்னை மிகவும் கவர்ந்திருந்தது.

# 72. நான்  இரசித்த காதல் கடிதமொன்று! கு.அழகிரிசாமியின் கற்பனைச்சித்திரம்!




புனைகதைகளில் எத்தனையோ காதல் கடிதங்களை வாசித்திருக்கின்றேன். அவையெல்லாம் காலப்போக்கில் நினைவிலிருந்தும் மறைந்து போய்விட்டன, ஒன்றைத்தவிர. அந்த ஒன்று கு.அழகிரிசாமியின் 'தீராத விளையாட்டு' நாவலில் வரும் கடிதம். கல்கி சஞ்சிகையில் தொடராக வெளியான நாவல்களிலொன்று.

இக்கதையின் நாயகன் ரங்கராஜன் தன் தாய் ஜானகியைப்போல் மிகவும் அழகு வாய்ந்தவன். அவனும் அவனது அயல் வீட்டுக்குக் குடிவந்த குடும்பத்தைச் சேர்ந்த பெண் விஜயாவுக்குமிடையில் காதல் முகிழ்க்கிறது. சந்தர்ப்ப சூழ்நிலைகள் காரணமாக அவள் வேறொருவரைத்திருமணம் செய்கின்றாள். பின்னர் அவனுக்கும் வேறொரு திருமணம் நடந்து பல துயர நிகழ்வுகளுக்குள்ளாகிய அவனது வாழ்க்கையில் அவனது முன்னாள் காதலியின் தங்கை எதிர்ப்படுகின்றாள். அவளிடம் அவன் அவளது அக்கா பற்றி விசாரிக்கையில் அவள் இன்னும் தன்னுடன் எடுத்த புகைப்படங்களெல்லாவற்றையும் வைத்திருப்பதாகக் கூறுகின்றாள். அதற்கு அவன் இன்னுமொருவர் மனைவியான அவளது அக்கா தன்னிடம் வைத்திருக்கும் தன் ஞாபகத்தை உணர்த்தும் அனைத்தையும் அழித்துவிட வேண்டுமென்று கூறுகின்றான்.. பதிலாக அவள் தனக்கு எழுதிய கடிதத்தைக்கொடுத்து அதை அவளது அக்காவிடம் கொடுத்து அழித்து விடும்படியும், அவளிடமுள்ள தன்னை நினைவுபடுத்தும் புகைப்படங்கள் அனைத்தையும் வாங்கிவரும்படியும் கூறுகின்றான்.

அக்கடிதத்தைப் படித்துப்பார்த்த காதலியின் தங்கை அதன் மொழி நடையில், வெளிப்படும் அன்பில் சொக்கி இதனை எப்படிக் கிழிப்பது என்கின்றாள். அதனை வாங்கி அதிலுள்ள அவளது அக்காவின் பெயரை அழித்துவிட்டு பதிலாக அதில் தன் பெயரை எழுதி அக்கடிதத்தை மீண்டும் அவனிடமே கொடுக்கின்றாள். அத்துடன் நாவல் முடிகின்றது.

அந்தக் காதல் கடிதம் வெகுசனப்படைப்புகளில் வாசித்த காதற் கடிதங்களில் என்னை ஆகர்சித்ததொன்று. அது இதுதான்:

"பால் வடியும் வதனமே! உனக்குக் கோடி நமஸ்காரம். நீ இல்லாமல் என் மனம் மட்டுமல்ல, இந்த ஊரே வறண்டு கிடக்கிறது. நான் எப்படிப் பொறுமையோடு காத்திருக்க முடியும்? என் பாப்பாக்கள் (கண்ணின் கருமணிகள்) பாலில்லாத குழந்தைகளைப்போல் தாங்க முடியாத பசியால் வாடிப்போய்விட்டன. ஒளி இழந்து உயிர்க்களையும் இழந்து கிடக்கின்றன. உன்னை எப்பொழுது திரும்பவும் காண்பேன்? உன் தரிசனம் மட்டும் எனக்குத் தினம் தவறாமல் கிடைத்துக்கொண்டிருக்கும் என்றால் மற்ற எதற்கும் நான் எத்தனை யுகங்கள் வேண்டுமானாலும் காத்திருப்பேன். கிராமத்து வெயிலில் திரிய வேண்டாம். என் கண்களைப்போல் நீயும் வறண்டுவிடக் கூடாது. வாடிக் கறுத்துப் போய் விடாதே. எனக்காகக் கேட்டுக்கொள்கிறேன். இப்படிக்கு உன் (நான் யாரோ ஏழை என்று வைத்துக்கொள்) - விஜயா "

நாவலில் கிராமத்துக்குச் சென்று விடும் நாயகனின் பிரிவைத்தாங்க முடியாத காதலி எழுதிய காதற் கடிதம்.

எழுத்தாளர் அழகிரிசாமியின் வெகுசன இதழொன்றுக்கான படைப்பென்பதால், வெகுசன இதழ் வாசகர்களின் மனநிலையை உள்வாங்கி காதலுக்கு முக்கியத்துவம் கொடுத்து படைக்கப்பட்ட படைப்பு. ஆனால் கதையில் அவ்வப்போது வெளிப்படும் மண்வாசனையும் , ஆசிரியரின் எழுத்து நடையும், பாத்திரச் சித்திரிப்பும் என்னை என்னை மிகவும் கவர்ந்தவை.

# 73.. தி.ஜானகிராமனின் 'அன்பே! ஆரமுதே!'




தமிழில் எனக்குப் பிடித்த முக்கியமான நாவலாசிரியர்களில் ஒருவர் தி.ஜானகிராமன். இவரது 'செம்பருத்தி', 'மோகமுள்', 'மலர் மஞ்சம்', மற்றும் 'அன்பே ஆரமுதே' ஆகிய நாவல்கள் இவரது நாவல்களில் எனக்கு மிகவும் பிடித்தவை.

'அன்பே ஆரமுதே' நாவலை என் பதின்ம வயதுகளில் வாசித்திருக்கின்றேன். கல்கி சஞ்சிகையில் தொடராக வெளிவந்த நாவலை அழகாக 'பைண்டு' செய்யப்பட்ட நிலையில், ஓவியங்களுடன் வாசித்திருக்கின்றேன். அன்று இந்த நாவலை வாசித்ததற்கும், இன்று வாசிப்பதற்குமிடையில் நாவலை அனுபவிப்பதில், புரிந்து கொள்வதில் நிறையவே வித்தியாசங்களுள்ளன. ஏனென்றால் இந்த நாவலின் பிரதான பாத்திரங்கள் இளம் வயதினரல்லர். முதுமையை எட்டிப்பிடிக்கும் நடுத்தர வயதினர். இவ்வயதினரின் உளவியலை பதின்ம வயதுகளில் புரிந்து கொள்வது வேறு. பாத்திரங்களின் வயதில் புரிந்து கொள்வதென்பது வேறு.

கதை இதுதான். அனந்தசாமி என்னும் சன்யாசி, சென்னையில் வாழும் மக்களுக்கு வர்க்க, சமூக வேறுபாடுகளற்ற நிலையில் நாட்டு வைத்தியம் செய்பவர். பந்தங்களைத் தன் இளவயதில் துறந்தவருக்குப் பந்தங்கள் அவரிடம் வைத்தியம் பார்க்கும் சென்னைவாசிகள்தாம். நாவல் அனந்தசாமியின் தாயாரின் மரணத்துடன் ஆரம்பமாகின்றது. அவருக்குச் சகோதர, சகோதரிகள் நல்ல நிலையில் இருந்தாலும், யாருமே வயதான தாயாரைத் தம்முடன் வைத்துப்பார்க்கத்தயாரில்லை. அனந்தசாமியே தாயாரைத்தன்னுடன் கூட்டி வந்து பராமரிக்கின்றார். இந்நிலையில்தான் தாயாரும்

இறந்து விடுகின்றார். இவரிடம் வைத்தியம் பார்க்கும் செல்வந்தப் பெண்மணியொருத்திதான் நாகம்மாள். அவளுக்கு ஒரு மகள் சந்திரா. காதல் தோல்வியால் துயரத்துக்குள்ளாகியிருப்பவள் சந்திரா.

இந்நிலையில் நாகம்மாளிடம் புது தில்லியில் காலேஜ் ஒன்றில் சரித்திரப்பேராசிரியராகப் பணிபுரியும் ருக்கு என அழைக்கப்படும் ருக்மணி , அவளது தோழி, வருகின்றாள்.

அவள் யார்? முப்பது வருடங்களுக்கு முன்னர் அனந்தசாமிக்கும் ,அவளுக்குமிடையில் திருமணம் நடைபெறத் தீர்மானிக்கப்பட்டிருந்தது. அக்காலகட்டத்தில் ஆன்மிக ஈடுபாடு மிக்கவராக விளங்கிய அனந்தசாமி திருமண நாளன்று சொல்லாமல் கொள்ளாமல் ஓடி விடுகின்றார். சன்யாசியாக அலைந்து திரிகின்றார். இதற்கிடையில் ருக்குவின் நின்று விட்ட கல்யாணத்தின் பின்னர் ருக்கு மீண்டுமொரு கல்யாணம் செய்யவேயில்லை. அவள் தில்லியில் வசிக்கும் , மகளை இழந்த துயரத்திலிருக்கும் தனது பெரியப்பாவுடன் சென்று விடுகின்றாள். அங்கு படித்துக் காலேஜொன்றில் பேராசிரியராகவும் பணி தொடங்கி விடுகின்றாள். வழக்கம்போல் நாகம்மாளுக்கு வைத்தியம் பார்க்க வரும் அனந்தசாமியும், ருக்மிணியும் சந்தித்துக்கொள்கின்றனர்.

முப்பது வருடங்களுக்குப் பின்னர் அவரைச் சந்தித்த ருக்குவோ தனது புது தில்லி திரும்பும் முடிவை மாற்றி, சென்னையிலேயே இருக்க முடிவு செய்து விடுகின்றாள். அதற்குக் காரணம் அனந்தசாமிதான். இதுபற்றி நாவலில் மிகவும் அழகாக விபரித்திருப்பார் நாவலாசிரியர். உதாரணத்துக்கு ஒரு மாதிரி:
ருக்குவின் சென்னையிலே தங்கும் முடிவைப்பற்றி அனந்தசாமிக்கும், ருக்குவுக்குமிடையில் நடைபெறும் உரையாடல் நாவலின் முக்கியமான உரையாடல்களிலொன்று. **'அன்பே ஆரமுதே': பக்கம் 146, 147 & 148]**

// அனந்தசாமி:: "உங்களைப் புரிந்து கொள்வதே எனக்குக் கஷ்டமாக இருக்கிறது" என்றார் அனந்தசாமி. ருக்கு: "நான் அந்தச் சிரமங்களெல்லாம் உங்களுக்குக் கொடுக்க மாட்டேன். நான் பாட்டுக்கு எங்கோ ஒரு வீட்டில் குடியிருப்பேன். நீங்கள் விருப்பமிருந்தால் வரலாம். ஆனால் கட்டாயமாக இல்லை. நாகம்மாள் வீட்டுக்கு அடிக்கடி வருவேன். அப்பொழுது பார்த்துக்கொள்வேன்." சற்று நிறுத்தி யோசித்து விட்டு மீண்டும் சொன்னாள் ருக்மிணி. 'அப்படியெல்லாம் சிரமம் கூட நினைக்காதவள் இங்கு ஏன் மெனக்கெட்டு வர வேண்டும். சொல்ல வேண்டும் என்று நீங்கள் நினைக்கலாம். ஆனால் முப்பது வருஷங்கள் தினம் பத்து தடவையாவது நினைக்கிற ஒருவரிடம் எப்படிச் சொல்லாமலிருப்பது என்று புரியவில்லை. இல்லாவிட்டால் பெண்மனம் ஆறாது. நான் வருகிறேன்." என்று மீண்டும் எழுந்தாள் அவள்.//

இவ்விதமாகத் திருமண நாளன்று சொல்லாமல் கொள்ளாமல் ஓடிச்சென்று , சன்யாசியாக, நாட்டு வைத்தியராக வாழ்ந்து வரும் அனந்தசாமியின் வாழ்வில் மீண்டும் , அவர் திருமணத்தன்று யாரைக் கைவிட்டுச் சென்றாரோ , அந்தப்பெண், ருக்கு (சரித்திரப்பேராசிரியை ருக்மிணி எதிர்ப்படுகின்றாள். நாகம்மாளின் மகள் சந்திராவும் இவருடனும், ருக்மிணியுடனும் அன்பாகப் பாசத்துடன் பழகுகின்றாள். டொக்கி என்னும் பெண்ணொருவரும் தந்தையைப்போல் அனந்தசாமிமீது பாசம் கொட்டி வாழ்ந்து வருகின்றாள். சன்யாசியாக ஓடிப்போனவரின் வாழ்க்கை, முப்பது வருடங்களுக்குப் பின்னர் தன்னால் கைவிடப்பட்ட பெண்ணைச் சந்திப்பதுடன் மீண்டும் மாறுகின்றது.

நாவல் முழுவதும் அனந்தசாமியின் வாழ்க்கையை அற்புதமாக விபரிக்கின்றது.

நாவல் அக்காலத்துச் சென்னையைப்படம் பிடிக்கிறது. தி.ஜா.வின் எழுத்து நடை அற்புதமானது. நாவலில் வரும் பாத்திரங்களுக்கிடையிலான உரையாடல்கள் வாசிக்க

வாசிக்க இன்பத்தைத்தருபவை.  பாத்திரங்களுக்கிடையிலான உரையாடல்களை இயற்கையாக, அலுப்புத்தட்டாமல் எழுத்தில் வடிப்பதில் தி.ஜா.வுக்கு நிகர் தி.ஜா.வேதான். தி.ஜா.வின் எழுத்தைப்பற்றிப்பொதுவாக வைக்கப்படும் விமர்சனங்களில் முக்கியமானது முறை தவறிய காமத்தை மையமாக வைத்தே அவரது கதைகள் இருப்பதாக. என்னைப்பொறுத்தவரையில் அது சரியானதொரு விமர்சனமல்ல. மோகமுள், அன்பே ஆரமுதே போன்ற படைப்புகள் காதலை (காமத்தையல்ல) சிறப்பாக எடுத்துரைக்கும் படைப்புகள்.

# 74. ஸ்ரீ வேணுகோபாலனின் படைப்புகள்




யு டியூப்பில் 'ஒரு ஊதாப்பூ கண் சிமிட்டுகிறது' திரைப்படப்பாடல்களான 'ஆண்டவனில்லா உலகமெது', 'நல்ல மனம் வாழ்க' பாடல்களைக் கேட்டுக்கொண்டிருக்கையில் நினைவுகள் பின்னோக்கிப்பறக்கின்றன.

கவிஞர் கண்ணதாசனின் கவித்துவம் மிக்க சிந்தனையைத் தூண்டும் வரிகள் நெஞ்சைத்தொட்டுச்செல்கையில் எழுபதுகளின் இறுதியில் அல்லது எண்பதுகளின் ஆரம்பத்தில் தினமணிக்கதிர் சஞ்சிகையில் 'ஒரு ஊதாப்பூ கண் சிமிட்டுகிறது' தொடரின் முதலிரு அத்தியாயங்களை வாசித்த நினைவு எழுகின்றது. அதன் பிறகு ஏனோ கதிருடனான தொடர்பு விடுபட்டுப்போயிற்று. அதுவரை ஸ்ரீ வேணுகோபாலன் என்னும் பெயரில் எழுதிக்கொண்டிருந்த எழுத்தாளர் முதன் முதலாக புஷ்பா தங்கத்துரை என்னும் பெயரில் எழுத ஆரம்பித்த முதலாவது தொடர் நாவல் 'ஒரு ஊதாப்பூ கண் சிமிட்டுகிறது'. எழுத்தாளர் புஷ்பா தங்கத்துரை யார் என்பது தெரிந்திருக்காத காலம். பல வருடங்களுக்குப் பின்னரே அவர்தான் எழுத்தாளர் ஸ்ரீ வேணுகோபாலன் என்பது தெரிய வந்தது. அக்காலகட்டத்தில் அதுவரை அனைவரும் படிக்கக்கூடிய சமூக நாவல்களை எழுதி வந்துகொண்டிருந்த எழுத்தாளர்கள் சிலர் எழுத்தில் சிறிது பாலுணர்வுகளைத் தூண்டும் வகையில் எழுத ஆரம்பிக்கையில் பெண்களின் பெயர்களுக்குள் புகுந்து கொண்டு எழுத ஆரம்பித்திருந்தார்கள்.

உதாரணத்துக்கு மணியனைக் குறிப்பிடலாம். இதயவீணை, உன்னை ஒன்று கேட்பேன், காதலித்தால் போதுமா என்று எழுதிக்கொண்டிருந்த மணியன் பிரேமலதா என்னும் பெயருக்குள் புகுந்து கொண்டு லவ்பேர்ட்ஸ் எழுதினார். அதுவரை ஓவியர் மாயாவின்

ஓவியங்களுடன் வெளியாகிக் கொண்டிருந்த அவரது படைப்புகள் ஓவியர் ஜெயராஜின் கவர்ச்சிகரமான ஓவியங்களுடன் வெளிவர ஆரம்பித்தன. லவ்பேர்ட்ஸும் அவ்விதமே ஓவியர் ஜெயராஜின் ஓவியங்களுடன் வெளிவர ஆரம்பித்தது.

கதிரில் எழுத்தாளர் ஸ்ரீ வேணுகோபாலனுக்கும் இதுதான் நடந்தது. கோபுலுவின் ஓவியங்களுடன் வெளியான அவரது படைப்புகள் புஷ்பா தங்கத்துரை என்னும் பெயருடன் வெளிவர ஆரம்பித்ததும் ஓவியர் ஜெயராஜின் கவர்ச்சிகரமான ஓவியங்களுடன் வெளிவர ஆரம்பித்தன. சிவப்பு விளக்குக்கதைகள், சிறைச்சாலைக்கதைகள் என  உண்மைக் கதைகளையும் எழுத ஆரம்பித்தார். எல்லாமே ஓவியர் ஜெயராஜின் ஓவியங்களுடன் வெளியானதாக நினைவு. இன்று எழுத்தாளர் ஸ்ரீ வேணுகோபாலன் என்று கூகுளில் தேடினால் விபரங்கள் எவையும் கிடைக்கா. புஷ்பா தங்கத்துரை என்று தேடினால்தான் கிடைக்கும். இதுதான் காலத்தின் கோலம். புஷ்பா தங்கத்துரை என்னும் பெயரில் எழுதியவற்றில் முக்கியமான படைப்பாக நான் கருதுவது 'ஒரு ஊதாப்பூ கண் சிமிட்டுகிறது', அதற்குக் காரணம் அதன் கதைப்பின்னலே. அது தொடராக வெளிவந்த காலத்தில் வாசகர்கள் மத்தியில் மிகுந்த வரவேற்பைப்பெற்றது. அதன் காரணமாகவே பின்னர் திரைப்படமாகவும் வெளியாகி வெற்றிபெற்றது.

உண்மையில் எழுத்தாளர் ஸ்ரீ வேணுகோபாலன் எனக்கு அக்காலகட்டத்தில் மிகவும் பிடித்த எழுத்தாளர்களிலொருவர். வாசகர் உள்ளங்களை உருக்கி, ஈர்த்து விடும் எழுத்து அவருடையது. கதிரில் ஓவியர் கோபுலுவின் ஓவியங்களுடன் வெளியான 'நீ நான் நிலா' நாவல் மிகுந்த வரவேற்பைப்பெற்ற நாவல். அதன் தொடர்ச்சியாக அவர் 'நந்தா என் நிலா' தொடர்நாவலை எழுதினார். அக்காலகட்டத்தில் கதிர் இலவச இணைப்பாக வெளியிட்ட அவரது 'நடு வழியில் ஒரு இரயில்' எனக்கு மிகவும் பிடித்த குறுநாவல்களிலொன்றாக அவ்வயதில் விளங்கியது. அக்குறுநாவல் ஏற்கனவே கல்கியில் வெளியாகியிருந்தது. பின்னர் கல்கியில் வெளியான கு.அழகிரிசாமியின் 'தீராத விளையாட்டு' நாவலை வாசிக்கையில் அந்நாவலுக்கும், 'நீ நான் நிலா' நிலாவுக்குமிடையில் நாவலின் மூலக்கதையில் சில விடயங்களில் காணப்பட்ட ஒற்றுமையை அவதானித்தேன். இரு நாவல்களிலும் நாயகனின் உளங்கவர்ந்த நாயகி இறுதியில் மறைய , நாயகியின் தங்கை அவனது வாழ்வில் இடம் பிடிப்பாள்.  இப்போக்கில் நிலவிய ஒற்றுமையை மட்டுமே குறிப்பிட்டேன்.

# 75. என்னைக் கவர்ந்த ஜெகசிற்பியனின் 'ஜீவகீதம்'.



எனது மாணவப் பருவத்தில் எனக்கு மிகவும் பிடித்த எழுத்தாளர்களிலொருவர் ஜெகசிற்பியன். அவரது சரித்திரக் கதைகளில் 'நந்திவர்மன் காதலி', 'பத்தினிக்கோட்டம்' ஆகியவை எனக்கு அக்காலகட்டத்தில் பிடித்த நாவல்கள். சமூக நாவல்களைப் பொறுத்தவரையில் கல்கியில் தொடராக வெளிவந்த 'கிளிஞ்சல் கோபுரம்', 'ஜீவகீதம்' ஆகியவை மிகவும் பிடித்திருந்தன. நா.பார்த்தசாரதி, அகிலன் போன்ற வெகுசனப் படைப்புகளை வழங்கிய பலரின் படைப்புகளை அக்காலகட்டத்தில் பிடித்திருந்தாலும், தற்போது வாசிக்கும்போது அன்று என்னைக் கவர்ந்ததைப்போல் இன்று பெரிதாகக் கவர்வதில்லை. ஆனால் ஜெகசிற்பியனின் 'ஜீவகீதம்' நாவலை அண்மையில் வாசித்தபொழுது அன்று என்னைக் கவர்ந்ததுபோல் இன்றும் என்னைக் கவர்ந்திருந்தது எனக்கே ஆச்சரியத்தைத் தந்தது. இதற்குக் காரணமென்னவாகவிருக்குமெனச் சிறிது சிந்தித்துப் பார்த்தேன்.

ஜெகசிற்பியனின் படைப்புகள் இன்றும் என்னைக் கவர்வதற்கு முக்கிய காரணங்களாக அவரது நாட்டுப்பற்று மிக்க, சமுதாயப் பிரக்ஞை மிக்க எழுத்து , பாத்திரப்படைப்பு, படைப்பினூடு அவர் தெரிவிக்கும் கருத்துகள் மற்றும் வர்ணனைகள் போன்றவற்றைக் குறிப்பிடலாமென்று நினைக்கின்றேன்.

அவரது 'ஜீவகீதம்' நாவல் இந்திய மொழிகள் பலவற்றில் 'தேசிய புத்தக அறக்கட்டளை' யினால் மொழிபெயர்க்கப்பட்டு வெளியிடப்பட்டுள்ளது. அவரது சமூக நாவல்களில் மிகவும் புகழ்பெற்ற நாவலாக இதனைக் கூறலாம். இந்நாவல் கூறும் கதைதான் என்ன?

பர்மாவுக்கு உழைப்புக்காகத் தந்தையுடன் தன் சிறுவயதில் புலம் பெயர்ந்த சபேசன் பர்மாவிலிருந்து அகதியாகத் துரத்தப்பட்டு மீண்டும் தாயகமான தமிழகத்துக்குத் திரும்புகின்றான். அவ்விதம் திரும்புகையில் அவனை முதல் கப்பலில் அனுப்பிவிட்டு அடுத்த கப்பலில் தந்தை வருவதாக ஏற்பாடு. சென்னைக்கு இவ்விதம் அகதியாக வரும் சபேசன் தனது சொந்த ஊரில் காத்திருக்கும் தாயாரைச் சந்திப்பதற்கு முன்பாகத் தந்தை




அடுத்த கப்பலில் வரும் வரையில் சென்னையில் தங்கியிருக்க முடிவு செய்கின்றான். அங்கு நச்சி என்கின்ற நச்சினார்க்கினியனைச் சந்திக்கின்றான். நச்சி என்னும் இந்தப் பாத்திரம் தமிழ் இலக்கிய உலகில் இதுவரை யாரும் சந்தித்திராத வித்தியாசயமான பாத்திரமென்று நான் நினைக்கின்றேன். சென்னைப் பேச்சுத்தமிழில் அசத்தும் இவனுக்கும், கணவனை இழந்த ஆங்கிலோ இந்தியப் பெண்ணொருத்தியான லூசிக்குமிடையிலான காதல், , அதற்காக அவள் முன் தான் ஒரு உதவி இயக்குநர், இசை அமைப்பாளர், பாடலாசிரியர் என அவனெடுக்கும் பல்வேறு அவதாரங்கள் நாவலின் சுவையினைக் கூட்டுபவை. இவனது பிறப்பும் வித்தியாசமானது. இவனது தாயான கன்னியம்மாள் ஆங்கிலோ இந்தியக் குடும்பமொன்றின் பணிப்பெண்ணாக வேலை பார்க்கின்றாள். உலக மகா யுத்தக் காலகட்டம் அது. அக்காலகட்டத்தில் அவர்கள் வீட்டிற்கு அடிக்கடி வரும் கறுப்பின இராணுவச் சிப்பாய் ஒருவனுக்கும், கன்னியம்மாளுக்கும் ஏற்பட்ட தொடர்பில் பிறந்தவன்தான் நச்சி.  அவனது தோற்றமும் ஈரினக்கலப்பின் விளைவினை வெளிப்படுத்தும் தன்மையானது.

ஓர் அரசியல்வாதியின் சகோதரிக்கும் , பயில்வான் ஒருவனுக்கும் பிறந்த வேதா என்னும் பெண்ணும் நச்சுவின் தாயாரின் பொறுப்பில் வளர்கின்றாள். வீதியில் அநாதரவாகக் கை விடப்பட்ட குழந்தையான வேதாவை அப்பயில்வான் தம்பையாவே கன்னியம்மாளிடம் வளர்க்கக் கொடுக்கின்றான். நச்சினார்க்கினியன் என்று நச்சுவுக்கும், வேதகுமாரி என்று வேதாவுக்கும் பெயர் வைப்பதும் அந்தப் பயில்வான் தம்பையாதான். தம்பையாவும் வித்தியாசமான பாத்திரம்தான். நாவலின் இறுதியில்தான் பயில்வான் தம்பையாவுக்கே வேதா அவன் மகள் என்னும் விபரம் தெரியும் வகையில் கதையினை நாவலாசிரியர் பின்னியிருக்கின்றார். அதே சமயம் அகதியாகச் சென்னையில் வீடற்றவனாக அலையும் சபேசனின் அன்றாட நகர வாழ்க்கையினை நன்கு விபரித்திருப்பார் ஜெகசிற்பியன்.

இவ்விதமாக நகரும் கதையினூடு ஆசிரியர் அக்காலகட்டத்தில் நிலவிய ஊழல் நிறைந்த அரசியலை, நாயகன் சபேசனின் தேச பக்தி மிக்க இலட்சிய நோக்கினை, உணர்வினை, நகரத்து வாழ்வின் அவலங்களை, கிராமத்து வாழ்வின் இனிமையினை, ஆரோக்கியமான இயல்பினை, அகதிகளின் வாழ்வின் அவலங்களையெல்லாம் (பர்மாவிலிருந்து மற்றும் கிழக்குப் பாகிஸ்தானிலிருந்து அகதிகளாக இந்தியா திரும்பியவர்களின் அவலங்களையெல்லாம்) விமர்சனத்துக்குள்ளாக்கியிருப்பார். சபேசன், நச்சி, கன்னியம்மாள், தம்பையா போன்ற பாத்திரங்களூடு நகர அடித்தட்டுமக்கள் இருப்புக்காக அன்றாடம் போராடுவதை விரிவாகவே நாவலில் விபரித்திருப்பார் ஜெகசிற்பியன். வாக்காளர்களுக்குப் பணம் கொடுத்து வாக்குகளை வாங்கும் அரசியல் கட்சிகளின் செயற்பாடுகளையும், அவ்விதம் பணம் கொடுப்பதன்மூலம் ஊழல் அரசியல்வாதிகளுக்கு மேலும் துணைபோகும் வாக்காளர்களின் செயற்பாடுகளையும் கடுமையாகவே விமர்சனத்துக்குள்ளாக்கியிருப்பார் நாவலாசிரியர். சிந்தனையைத் தூண்டும் ஆரோக்கியமான இலட்சிய நோக்கு மிக்க இவ்வகையான சிந்தனைகளை வெளிப்படுத்தும் படைப்புகள் எனக்குத் தனிப்பட்டரீதியில் பிடிக்குமென்பதால் இந்த நாவலும் அன்றும், இன்றும் பிடித்திருக்கின்றதென்றும் கூறலாம்.

இவ்விதமாகச் செல்லும் நாவலில் நாயகன் சபேசன் ஒரு கட்டத்தில் நகர வாழ்வின் தாக்குதல்களைச் சமாளிக்க முடியாமல் , தந்தையை இனியும் எதிர்பார்ப்பதில் அர்த்தமில்லை என்று முடிவு செய்தவனாகச் சொந்தக் கிராமத்தில் அவனை எதிர்பார்த்திருக்கும் அன்னையைச் சந்திப்பதற்காகச் செல்கின்றான். ஆனால், அங்கும் அவன் ஏமாற்றங்களையும் , துயரையுமே எதிர்கொள்கின்றான். அவன் செல்வதற்கு முன்பாக அவனது அன்னை இறந்து விடுகின்றார். அவனது அத்தை மீனாட்சி தன் கணவருடன் அவனது வீட்டில் குடியிருக்கின்றார். அவர்களும் வறுமையில், இவனும் வறுமையில், இந்த நிலையில் தாயையும் இழந்த நிலையில் சபேசன் மீண்டும் சென்னை மாநகருக்குத் திரும்ப முடிவு செய்கின்றான். அவனது வாழ்வு அதன்பின் பெங்களூர், சென்னையென்று அலைக்கழிகின்றது.

இதே சமயம் அவனுக்கும் , வேதாவுக்குமிடையிலான காதல் உணர்வுகளையும் ஆசிரியர் அவ்வப்போது நயமாக, சுவையாக வெளிப்படுத்திச் செல்கின்றார். பெங்களூருக்கு அரசியலவாதி மாரிமுத்து மற்றும் அவனது அடியாட்களால் ஆசிரியர் வேலைக்கான நேர்காணலென்ற போர்வையில் பெங்களூர் ஹொட்டலொன்றுக்கு அழைத்து வரப்பட்ட வேதாவை அச்சமயம், அங்கு அறைப்பையனாகப் பணிபுரியும் சபேசன் சந்தித்து, அவளது இக்கட்டிலிருந்து காப்பாற்றிச் சென்னைக்கு அழைத்து வருகின்றான்.

இதற்கிடையில் சபேசனின் வாழ்வில் கிழக்கும் பாகிஸ்தானிலிருந்து அகதிகளாக இந்தியா வந்த குடும்பமொன்றைச் சேர்ந்த சந்தியா என்னும் பெண்ணொருத்தியும் அவளது குடும்பத்தவர்களும் எதிர்படுகின்றார்கள். பின்னர் சென்னையிலும் சந்தியா

சபேசனின் வாழ்வில் மீள்பிரவேசம் செய்கின்றாள். சபேசனின் சந்தியா மீதான, வேதா மீதான உணர்வுகளை நாவல் விபரிக்கின்றது.

நாவலின் முடிவு துயரகரமானது. சந்தியாவின் தந்தையார் வேறு சிலருடன் ( ஒரு மலையாளி, ஒரு பெங்காலி மற்றும் ஒரு சீனன்) சேர்ந்து இந்தியாவுக்கெதிராகச் செய்யும் சதியினை சந்தியா மூலமே சபேசன் அறிந்து கொள்கின்றான். சதிகாரர்களின் இருப்பிடத்தில் அவர்கள் கை வசமிருந்த ஆவணங்களைக் கைப்பற்றி வெளியேற முனையும் சமயம் சதிகாரர்களிடம் அகப்பட்டுச் சபேசன் சுட்டுக்கொல்லப்படுகின்றான். நண்பனின் நாட்டுப்பற்றும், அவன் நாட்டுக்காகத் தன் உயிரை இழந்ததும் நச்சியினைப் பெரிதும் பாதித்து விடுகின்றது. அவன் இந்திய இராணுவத்தில் சேர்ந்து தேச சேவை செய்வதுடனும்,. வேதா தன் தாயாருடன் இணைந்து ஆசிரியப் பணியாற்றுவதுடனும் நாவல் முடிவுறுகின்றது.

நாவலினூடு வெளிப்படும் என்னைக் கவர்ந்த கருத்துகளைத் தாங்கிய பந்திகள் சில ஒரு மாதிரிக்காக:

" மண்ணுலகில் பிறந்த ஒருவன் மீண்டும் மண்ணுலகுக்குத் திரும்பிப் போவதற்குள், தான் வாழ்வும் தன்னைச்சார்ந்வர்களை வாழ வைக்கவுமே எத்தனையெத்தனையோ போராட்டங்களை நிகழ்த்த வேண்டியவனாயுள்ள இன்றைய நிலையில், இவையும் அவனுக்குப் போதா என்று தேசம், இனம், மொழி, நிறம், மதம் இவற்றின் பெயரால் அவனை மேலும் மேலும் மிதித்து நசுக்கித் துன்புறுத்துவது என்ன நீதி? மனிதர்களுக்காக உலகமா? உலகத்துக்காக மனிதர்களா? மனிதர்களுக்காகத்தான் இந்த உலகம் என்பதை இந்த மனிதர்கள் எப்போது உணரப் போகின்றார்கள்? அப்படி உணராதவர்களையெல்லாம் - உணரக்கூடியவர்களையும் உணர விடாமல் குறுக்கே நின்று தடுப்பவர்களையெல்லாம் - இன்றே, இக்கணமே அழித்துப் பொசுக்கிச் சாம்பலாக்கிவிடவேண்டும் என்ற ஆத்திரக் குமுறல் அடைந்தான் சபேசன் (பக்கம்ன்340)

'கிராம வாழ்க்கைக்கும் நகர வாழ்க்கைக்கும்தான் எவ்வளவு வித்தியாசம்! நகரங்களுக்கே உரிய பல்வேறு சட்டங்கள் என்னும் திருகாணிகளால் பூட்டப்பட்ட ஓர் இயந்திரம் போலத்தன் மனிதன் அங்கு வாழ வேண்டியிருக்கிறது. பட்டண எல்லைகளில் காலை வைத்ததுமே மனிதனின் பாதிச் சுதந்திரம் பறிபோய் விடுகிறது. ஆனால் கிராமமோ? ... சுயக்கட்டுப்பாட்டில் நின்று நியாயமான சுதந்திரங்கள் அவ்வளவையும் இங்கு அனுபவிக்கலாம். கருகித்துவண்ட அவன் மனம் ஒரு புதிய மலர்ச்சி கண்டு நிமிரவே சிந்தனை மேலும் நீண்டது:

இந்த இனிய சுதந்திர இன்பத்தைச் சில கிராம மக்கள் வெறுத்து - செங்கோலைவிடச் சிறந்ததான ஏர்க்கலப்பையையும் ஏற்றக்கோலையும் பிடிக்க அலுப்படைந்து - சிங்கிள் சாயாவுக்கும், பன் பிஸ்கோத்துக்கும் சாப்பாட்டுக்கூடைக்காரியின் எச்சில் சோற்றுக்கும் நைலான் சேலைக்கும் தினத்துக்கொரு சினிமாவுக்கும் ஆசைப்பட்டு நகரங்களுக்கு ஓடி, அங்கு மானம் மரியாதையினை இழந்து, மனித நாகரிகத்துக்கே புறம்பான பல வேலைகளைச் செய்து, குந்தியிருக்கக் குடிசைகளுமின்றி நடைபாதைகளிலும் சாக்கடைக் கால்வாய் ஓரங்களிலும் சாலை மரத்தடிகளிலும் ஒண்டிக்கிடந்து காலத்தைக் கழிக்கத் துணியும் அறியாமையை என்னென்பது? (பக்கம் 345)

இன்று சொற்சிலம்பமாடும் விரிந்த நாவல்கள் பல வெளிவருகின்றன. அவற்றை வாசிக்கும்போது அவற்றில் பெரும்பாலானவற்றுடன் , 'ஜீவகீதம்' போன்ற நாவல்களுடன் ஒன்றுவதைப்போல், எம்மால் முழுமையாக மனமொன்றிட முடிவதில்லை நாவலொன்றின் வெற்றிக்குச் சொல் ஆளுமை எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியம் கதைப்பின்னல், பாத்திரப்படைப்பு, நாவல் கூறும் பொருள் ஆகியவையும். பல

நவீன நாவல்கள் மொழியில் சிறந்து விளங்கினாலும் நாவலின் ஏனைய கூறுகளில் சிறந்த விளங்காத காரணத்தால் வாசகரின் நெஞ்சங்களின் ஆழத்தைச் சென்றடைவதில்லை. இதனால் அவற்றின் பெரும்பாலானவற்றை வாசித்த மறு விநாடியே மறந்தும் விடுகின்றோம். நாவலொன்றினை வாசிக்கும்போது நாவலின் பாத்திரங்களின் வாழ்வுடன் ஒன்றுவதையும் இழந்து விடுகின்றோம்.

ஜெகசிற்பியனின் 'ஜீவகீதம்' நாவலின் அண்மைய பதிப்பினைத் தமிழகத்தில் வானதி பதிப்பகத்தில் பெற்றுக்கொள்ளலாம்.

## 76. மறக்க முடியாத ஆளுமை 'ராஜு அங்கிள்'

என் பால்ய காலத்து வாசிப்பனுபவங்களைப்பற்றி எண்ணியதும் மறக்க முடியாத ஆளுமைகளில் ஒருவராக என் நினைவில் நிற்பவர் 'ராஜு அங்கிள்' என்றழைக்கப்படும் ராஜநாதன் முத்துச்சாமிப்பிள்ளை. இவர் என் அம்மாவின் கடைக்குட்டித்தம்பி. அவருக்கும் அம்மாவுக்குமிடையில் பதினெட்டு வயது வித்தியாசம். ஆச்சி பதின்ம வயதிலிருந்தே இல்லறபந்தத்தில் தன்னைப்பிணைத்துக்கொண்டவர். அதன் விளைவு இவ்வயது வித்தியாசம். அம்மா இவரைத் தன் தம்பி என்று பார்த்ததை விடத் தனது இன்னுமொரு மகன் போன்றே எப்பொழுதும் கருதி வந்தாரென்று நான் உணர்வதுண்டு. அம்மாவின் இளமைக்காலப்புகைப்படமொன்றில் அம்மாவுடன் காற்,சட்டையுடன் இவரிருந்த புகைப்படமொன்றினைப் பார்க்கும் எவரும் அவ்விதமே கருதுவர்.

இவர் அம்மாவுக்கு மட்டுமின்றி அம்மம்மா, அம்மாவின் ஏனைய சகோதர, சகோதரிகள், அம்மப்பா யாவருக்குமே செல்லப்பிள்ளைதான். குறிப்பாக அம்மப்பாவின் மிகுந்த பிரியத்துக்குரிய கடைக்குட்டி பையனாக இருந்ததால், அவருடன் எப்பொழுதும் அவரது 'நாஷ்' காரில் இவர் திரிவார். சில சமயங்களில் அதில் நண்பர்களுடன் நகரை வலம் வருவதுண்டு. அம்மாவின் இன்னுமொரு தங்கையின் திருமணத்தின் போது அக்காரில் யாழ்நகரில் எங்களையெல்லாம் ஏற்றி விரைவாக ஓட்டிச்சென்றது இன்னும் ஞாபகத்திலுள்ளது. அம்மப்பாவின் இறுதிக்காலத்திலும் கூட எந்நேரமும் அவருடன் அவரது மரணம் வரையில் ஆஸ்பத்திரியில் இருந்தவர் இவர். அம்மா எவ்விதம் இவரைத் தம்பி போன்று கருதாமல், மகன் போன்று கருதினாரோ அவ்வாறே நாங்களும் இவரை மாமா முறையென்றாலும் கூட அவ்வாறு கருதுவதில்லை; எங்களது நண்பர்களிலொருவரைப்போன்றுதான், மூத்த அண்ணர்களிலொருவரைப் போன்றுதான் கருதினோம்; பழகி வந்தோம். அவரும் எங்களுடன் அவ்விதமே மிகவும் இயல்பாகப் பழகி வந்தார்; வருகின்றார்.

இவர் சிவாஜியின் 'புதிய பறவை', 'ஆலயமணி' திரைப்படங்கள் வெளியான காலகட்டத்து இளைஞர்களிலொருவர் என்பதால் சிகரட் பிடிப்பதிலிருந்து, தோள்களைக் குலுக்கிச் சிரித்துக் கதைப்பதிலிருந்து அன்றிலிருந்து இன்று வரை அதே சிவாஜி 'ஸ்டைலை'ப் பின்பற்றி வருபவர். 1970இலேயே கனடாவுக்கு வந்து விட்டார். அதற்கு முக்கிய காரணங்களிலொன்று: அக்காலகட்டத்தில்தான் அம்மப்பாவின் மறைவும் நிகழ்ந்தது. அம்மப்பாவின் சகோதரர் ஒருவருக்கும் இவர் மீது மிகுந்த பிரியம் இருந்தது. அவர் சிறிது காலம் புளியங்குளத்தில் இருந்த தனது பண்ணையொன்றை இவரது பொறுப்பில் விட்டுப் பார்த்தார். ஆனால் அது வெற்றியளிக்கவில்லையென்றே கூறுவேன். எப்பொழுதும் நண்பர்களுடன் 'ஜாலி'யாக நகரத்தில் திரிந்த இவருக்கு வன்னிக்காட்டுப் பகுதி ஒத்துக்கொள்ளவில்லை. ஒவ்வொரு வாரமும் அடிக்கடி அம்மாவிடம் , அப்பொழுது அம்மா வவுனியா மகா வித்தியாலயத்தில் ஆசிரியையாகப் பணியாற்றிக்கொண்டிருந்தார், 'அக்கா, அக்கா' என்று ஓடி வந்து விடுவார்.

அப்பொழுதுதான் நான் அப்பா வீட்டில் வாங்கிக் குவித்துக்கொண்டிருக்கும் தமிழக வார, சஞ்சிகைகளில் என்னை மறந்து வாசிப்பதில் என்னை ஈடுபடுத்திக்கொண்டிருந்தேன். ஒருமுறை அம்மாவிடம் வரும்போது அழகாக 'பைண்டு' செய்யப்பட்டிருந்த , கல்கியில் தொடராக வெளியான அகிலனின் 'வேங்கையின் மைந்தன்' நாவலைக் கொண்டு வந்திருந்தார். அதன் மூலமே எனக்கு எழுத்தாளர் அகிலன் அறிமுகமானார்.

இவர் அடிக்கடி அவ்விதம் வவுனியா வருகிறாரென்றால் குழந்தைகளான எமக்கெல்லாம் கொண்டாட்டமாகவிருக்கும். முக்கிய காரணங்களிலொன்று நிச்சயம் இவர் எங்களைச் சினிமாவுக்குக் கூட்டிச்செல்வார் என்பதால் தான். 'துலாபாரம்' 'செம்மீன்' போன்ற

திரைப்படங்களெல்லாம் அவ்விதம் பார்த்த திரைப்படங்கள்தாம். காட்சி முடிந்து வீடு திரும்புகையில் எம்மை வீட்டு ஓடிச்சென்று சில சமயங்களில் எம்மையெல்லாம் பயப்படுத்துவதில் இவருக்கு மிகவும் பிரியமுண்டு. அச்சமயங்களில் அச்சத்தில் நாம் இவரைத்துரத்திச் செல்லுவோம். அவ்விதம் வந்து பண்ணைக்குத் திரும்பும் சமயங்களில் சில தடவைகள் நானும் இவருடன் புளியங்குளம் பண்ணைக்குச் சென்றிருக்கின்றேன். இயற்கை வளம் கொழிக்கும், கானகச்சூழலில், ஏ-9 பாதையில் அமைந்திருந்த அப்பண்ணைக்குச் சில தடவைகளே சென்றிருந்தபோதும் எனக்கு மிகவும் பிடித்த கானகப்பிரதேசங்களில் ஒன்றாகவும் அப்பிரதேசம் அமைந்து விட்டது. அதன் காரணமாகவே அழியாத கோலங்களிலொன்றாகவும் நெஞ்சில் பதிந்து விட்டது.

ராஜு அங்கிளுடன்இவர் என் வாசிப்பனுபவத்தில் இன்னுமொரு வகையிலும் முக்கியமானவர். என் பால்ய காலத்தில் ஒரு சமயத்தில் நான் மர்மக்கதைகள், காமிக்ஸ் என்று வாசித்துக் குவித்தேன். அதற்கு முக்கிய காரணம் இவர்தான். விடுமுறைகளில் நாங்கள் யாழ்ப்பாணத்திலுள்ள ஆச்சி வீடு செல்வோம். அப்பொழுதெல்லாம் நண்பர்களுடன் சுற்றித்திரிந்து விட்டு வீடு திரும்பும் சமயங்களிலெல்லாம் இவர் மறக்காமல் இந்திரஜால் காமிக்ஸ் புத்தகங்கள், பிரேமா பிரசுர மர்ம நாவல்களையெல்லாம் அள்ளிக்கொண்டு வருவார் எனக்காக. மர்மக்கதை மன்னர்களாக அக்காலகட்டத்தில் விளங்கிய மேதாவியின் 'மாயச் சமாதியில் மர்மப் புதையல்' , சிரஞ்சீவி, சந்திரமோகன் போன்றோரின் திகிலூட்டும் மர்ம, பேய்க்கதைகளையெல்லாம் வாசித்துக் குவித்தது அப்போதுதான்.

இவர் பெரிதாக வாசிப்பதில்லையென்றாலும் ஆனந்த விகடனில் தொடராக வெளிவந்த சாவியின் 'வாஷிங்டனில் திருமணம்' இவருக்கு மிகவும் பிடித்தத் தமிழ் நூல்களிலொன்று. அதற்காகவே அவருக்குத் தமிழகத்திலிருந்து 'வாஷிங்டனில் திருமணம்' வாங்கிக் கொடுத்திருந்தேன். நாவல் வெளியானபோது வெளிவந்த ஓவியர் கோபுலுவின் ஓவியங்களுடன் வெளியான நூல். அந்நூலின் வெற்றிக்கு ஓவியர் கோபுலுவின் ஓவியங்களும் முக்கிய பங்களிப்பு செய்துள்ளன என்பதை மறக்க முடியாது.

இவரைப்பற்றி நினைத்தால் மறக்க முடியாத இன்னுமொரு விடயம் எனது முதலாவது கொழும்புப் பயணம். இவர் கனடா செல்வதற்காகக் கொழும்பு சென்றிருந்த சமயம். அவரை வழியனுப்புவதற்காக அம்மா கொழும்பு சென்றார். அது ஒரு காலை நேரம். யாழ்ப்பாணத்திலிருந்து வரும் காலை யாழ்தேவி வவுனியாவுக்கு எட்டரை மணியளவில் வரும். அதில்தான் அம்மா கொழும்பு செல்வதாகத் திட்டம். அம்மாவுடன் பாடசாலை சென்று கொண்டிருந்த என் மனத்திலோ வேறொரு திட்டம் இருந்தது. அம்மாவைப் புகையிரத நிலையத்தில் விட்டு விட்டு நான் பாடசாலை செல்வதுதான் அம்மாவின் திட்டம். ஆனால் என் திட்டமோ வேறானதாகவிருந்தது. அம்மா கவுண்டரில் கொழும்புக்கோட்டைக்கு ஒரு ஃபுள் டிக்கற் ஃபோர்ட்டுக்கு (Fort) என்று வாங்குவதைப்பார்த்த நான் , அம்மா அப்பால் சென்றதும் என்னிடமிருந்த ஐந்து ரூபாயினைப்பாவிக்க முடிவு செய்தேன். அம்மாவின் full டிக்கற் ஐந்து ரூபாய் என்பதை ஏற்கனவே அவதானித்திருந்தேன். டிக்கற் கவுண்டருக்குச் சென்று ஃபோர்ட்டுக்குக் 'ஹாஃப்' (half) என்றேன். இரண்டரை ரூபாய்தான் அரை டிக்கற். அதன் பிறகு அம்மா புகையிரதத்தில் ஏறியதும் அவருக்குத் தெரியாமல் அடுத்த பெட்டியில் ஏறி அமர்ந்துகொண்டேன். கொழும்புக்கோட்டையை யாழ்தேவி அடைந்ததும் , மெல்ல இறங்கி அம்மா பின்னால் போய் 'அம்மா ' என்றபோது அம்மா அதிர்ந்தே போய் விட்டா. மறக்க முடியாத என் பால்ய காலத்து அனுபவங்களிலொன்று.

அம்மாவின் கடைசித்தங்கை ஏற்கனவே அறுபதுகளில் கனடாவுக்கு வந்திருந்தார். அவர்தான் 'ராஜு அங்கிளை'க் கனடாவுக்கு அழைத்தது. கனடாவில் நீண்ட காலம் மத்திய அரசின் தபால் திணைக்களத்தில் கடமையாற்றி ஓய்வு பெற்ற இவர் சில வருடங்களுக்கு

முன்னர் நடைபெற்ற மோட்டார் சைக்கிள் விபத்தொன்றில் சிக்கி (இவர் மோட்டார் சைக்கிள் பிரியர்களிலொருவர் கூட) தற்போது சிறிது உடல் நலம் குன்றியிருந்தாலும், இன்னும் அதே துடிப்புடன் மகிழ்ச்சியாக இருப்பினை எதிர்நோக்கி வாழ்பவர். வயது எழுபதைக் கடந்தாலும் சுருக்கம் விழாத இவரது முகவாகு என்னை வியக்க வைப்பதுண்டு. எவ்வளவு இக்கட்டான சமயங்களிலும் வாழ்க்கையினை இன்பமுடன் எதிர்கொள்ளும் இவர் தேவையற்ற விடயங்களையெல்லாம் மனத்தில் போட்டுக் குழப்பிக் கொள்ளாதவர். மற்றவர்களின் திறமையினை எப்பொழுதும் மதிப்பவர்.

என் வாசிப்பனுவத்தில் இவரது பங்களிப்பும், இவருடன் கழித்த வன்னி அனுபவங்களும் மறக்க முடியாத அழியாத கோலங்கள்.

# 77. என் வாசிப்பனுவப்படிக்கட்டுகளில் அகிலனின் படைப்புகள்!



எழுத்தாளர் அகிலனின் நூற்றாண்டு வருட நிகழ்வுகள் தமிழகத்தில் நடைபெற்றுக்கொண்டிருக்கின்றன. என் வாசிப்பனுவத்தில் எழுத்தாளர் அகிலனின் படைப்புகளுக்கும் முக்கியமானதோரிடமுண்டு. அகிலனின் புகழ்பெற்ற படைப்புகள் பல கல்கியில் வெளியானபோது அவற்றை நான் அறிந்திருக்கவில்லை. 'வேங்கையின் மைந்தன்', 'கயல்விழி' வெளியானபோது நான் தவழ்ந்துகொண்டிருந்தேன். எனக்கு மிகவும் பிடித்த 'பாவை விளக்கு' கல்கியில் தொடராக வெளியானபோது நான் இவ்வுலகில் அவதரித்திருக்கவில்லை. நான் 'பொன்னியின் செல்வன்' உட்பட வாசிப்பை ஆரம்பித்திருந்த காலகட்டத்தில் ஆனந்தவிகடனில் ஓவியர் கோபுலுவின் ஓவியங்களுடன் 'சித்திரப்பாவை' தொடராக வெளியாகிக்கொண்டிருந்தது. கலைமகளில் 'எங்கே போகின்றோம்' நாவலும் அக்காலகட்டத்தில்தான் தொடராக வெளிவந்தது. ஆனால் அவை என்னைப் பெரிதும் கவரவில்லை.

இந்நிலையில் என் கவனத்தை ஈர்த்த படைப்பாக அகிலனின் 'வேங்கையின் மைந்தன்' நாவலைக் குறிப்பிடலாம். என் அம்மாவின் கடைசித்தம்பி , மாமா, அண்மையில் கனடாவில் மறைந்தவர், 1970இல் கனடா செல்வதற்கு முன் சிறிது காலம் புளியங்குளத்தில் ஏ9 பாதையில் அமைந்திருந்த பண்ணையொன்றை நிர்வகித்து வந்தார். நகரத்து இளைஞரான அவருக்குக் காட்டுச்சூழல் பெரிதும் பிடித்திருக்கவில்லை. அடிக்கடி 'அக்கா, அக்கா' என்று வவுனியாவுக்கு வந்து செல்வார். அவருக்கு என் வாசிப்பார்வம் தெரியும். அவ்விதம் வருகையில் ஒரு தடவை அழகாக 'பைண்டு' செய்யப்பட்ட 'வேங்கையின் மைந்தன்' நாவலையும் கொண்டு வந்து தந்தார்.

அப்பொழுதுதான் 'பொன்னியின் செல்வன்' நாவலில் மூழ்கிக் கிடந்த எனக்கு , முதலாம் இராசராச சோழனின் மகனான முதலாம் இராசேந்திர சோழனின் வரலாற்றைக் கூறும் 'வேங்கையின் மைந்தன்' நாவல் பிடித்து விட்டது. நாவலின் நாயகன் கொடும்பாளூர்க் கோமகன் இளங்கோவேளும், இராசேந்திர சோழரின் மகளான அருள்மொழி நங்கையும் என்னைக் கவர்ந்து விட்டார்கள். இராசேந்திர சோழரால் சிறை பிடிக்கப்பட்டு வந்த இலங்கை மன்னர் ஐந்தாம் மகிந்தரின் மகளான ரோகிணியும் இளங்கோவின்

காதலுக்குரியவளாக வருவாள். தொடராக வெளியானபோது இறுதியில் ரோகிணி இறப்பதாக அகிலன் முடித்திருப்பார். பின்னர் நாவல் நூலுருப்பெற்றபோது அம்முடிவை மாற்றி ரோகிணியைத் தப்ப வைத்திருப்பார். நினைவிலிருக்கின்றது.

இதன் பின்னர் அக்காலகட்டத்தில் வெளிவரத்தொடங்கியிருந்த ராணிமுத்து பிரசுரமாக வெளியான அகிலனின் 'சிநேகிதி' என்னைக் கவர்ந்த அவரது சிறு நாவலாகக் கூறுவேன். அக்காலகட்டத்தில் வெளியான கல்கி, விகடன், தினமணிக்கதிர், கலைமகள் ஆகிய சஞ்சிகைகளின் தீபாவளி மலர்களில் ஏதாவதொன்றில் நிச்சயம் அகிலனின் சிறுகதையொன்றாவது பிரசுரமாகியிருக்கும். அவற்றையும் விரும்பி வாசிப்பேன்.




'வேங்கையின் மைந்தன்' எனக்கு அகிலனின் ஏனைய படைப்புகளையும் தேடி வாசிக்க வேண்டுமென்ற ஆர்வத்தை ஏற்படுத்தியது. அதன் விளைவாக அழகாக 'பைண்டு' செய்யப்பட்ட வடிவில் கிடைத்த 'பாவை விளக்கு', 'கயல்விழி, 'புது வெள்ளம்' ஆகிய

நாவல்களையும் வாசித்தேன். இவற்றை வாசித்தபோது நான் பதின்ம வயதுகளில் நடைபோட்டுக்கொண்டிருந்தேன். அவ்வயது காரணமாகக் காதலை மையமாக வைத்து எழுதப்பட்டிருந்த 'பாவை விளக்கு' எனக்கு மிகவும் பிடித்திருந்தது. உண்மையில் இன்று வரை அகிலனின் சமூக நாவல்களில் என்னைக் கவர்ந்த நாவலாக அதனையே கூறுவேன். அதன் காரணமாகவே 'பாவை விளக்கு' திரைப்படம் மீண்டும் யாழ் றிகலில் திரையிடப்பட்டபோது இரவுக் காட்சியாகச் சென்று பார்த்தேன்.

இதன் பின்னர் அவரது 'வாழ்வு எங்கே' நாவலை யாழ் பொதுசன நூலகத்தில் இரவல் பெற்று வாசித்தேன். அது 'குலமகள் ராதை' என்னும் பெயரில் திரைப்படமாகவும் வெளியானது. அது மீண்டும் யாழ் புது வின்சர் திரையரங்கில் திரையிடப்பட்டபோது பார்த்திருக்கின்றேன். படத்தின் பாடல்கள் எல்லாம் இனியவை.

அகிலன் காந்தியக் கருத்துகளில் ஊறிப்போனவர். இந்திய சுதந்திரப் போராட்டத்தில் கலந்து கொள்வதற்காகத் தனது படிப்பை இடை நடுவில் நிறுத்தியவரென்று வாசித்திருக்கின்றேன். அதே சமயம் அவரது படைப்புகளில் சமூக மீறல்கள் துணிச்சலாக வெளிப்பட்டிருக்கும். பொருந்தா மணத்தைத் துணிச்சலுடன் எதிர்த்து மீண்டும் தம் காதலருடன் இணையும் பெண்களை அவரது சித்திரப்பாவை, சிநேகிதி போன்ற நாவல்கள் வெளிப்படுத்தின. 'வாழ்வு எங்கே' தீண்டாமையைச் சாடிய நாவல். பொதுவாக வெகுசன எழுத்தாளர்கள் பலரிடம் இல்லாத துணிச்சல் அகிலனிடமிருந்ததை இவ்வகைப்படைப்புகள் வெளிக்காட்டின. முற்போக்கு எழுத்தாளராக அறியப்பட்ட எழுத்தாளர் நாரண துரைக்கண்ணனிடமும் இத்தகைய துணிச்சலைக் காணலாம். அகிலனின் நூற்றாண்டு நிகழ்வுகள் பற்றிய இணையச் செய்திகள் மீண்டும் எழுத்தாளர் அகிலனின் நினைவுகளை மீண்டும் ஏற்படுத்திவிட்டன. என் வாசிப்பனுவத்தின் பரிணாமப் படிக்கட்டுகளில் அகிலனின் படைப்புகளுக்கும் நிச்சயம் இடமுண்டு.

# 78. எழுத்தாளர் ஸ்ரீ வேணுகோபாலன் (புஷ்பா தங்கத்துரை)

என் பால்யப் பருவத்தில், எனக்குப் பிடித்த எழுத்தாளர்களிலொருவர். அக்காலகட்டத்தில் தினமணிக்கதிரில் வெளியான 'நீ நான் நிலா' தொடர் நாவலை (ஓவியர் கோபுலுவின் ஓவியங்களுடன் வெளியான தொடர்) விரும்பி வாசித்தேன். கல்கி இதழின் அல்லது தினமணிக்கதிரின் இலவச இணைப்பாக வெளியான இவர் எழுதிய நெடுங்கதையான 'நடு வழியில் ஒரு ரயில்' எனக்கு மிகவும் பிடித்த கதைகளிலொன்றாக அக்காலகட்டத்தில் விளங்கியது. இவையெல்லாம் அவர் ஸ்ரீ வேணுகோபாலன் என்னும் பெயரில் எழுதியவை. இவர் முதன் முதலாக புஷ்பா தங்கத்துரை என்னும் பெயரில் எழுதிய தொடர் நாவல் 'ஒரு ஊதாப்பூ கண் சிமிட்டுகிறது' என்று நினைக்கின்றேன். அது தினமணிக்கதிரில் ஓவியர் ஜெயராஜின் ஓவியங்களுடன் வெளியானது. வெளியான காலத்தில் மிகுந்த வரவேற்பைப்பெற்றிருந்தது.

அறுபதுகளில் கல்கி சஞ்சிகையில் இவரது சிறுகதைகள், நெடுங்கதைகள், சிறப்புச் சிறுகதைகள் பல வெளியாகின. 'நடுவழியில் ஒரு ரயில்' நெடுங்கதை கூட முதலில் கல்கி சஞ்சிகையிலேயே வெளியானது. பின்னர் தினமணிக்கதிரின் இலவச இணைப்பாக வெளியானது. மறக்க முடியாத நெடுங்கதை அது. அவனோ அவளுக்கு எவ்வகையிலும் பொருத்தமற்ற ஆளுமை. ஆனால் அவள் மேல் அவன் உயிரையே வைத்திருக்கின்றான். பிரிந்து விடுகின்றார்கள். ஒரு தடவை அவள் பயணித்த புகையிரதம் நள்ளிரவில் நடு வழியில் நின்று விடுகின்றது. அதனைப் பாதுகாப்பாகக் கரை சேர்க்க வேண்டும். அதனைத் திருத்துவதற்கு அங்கிருந்த யாருக்குமே தெரியவில்லை. இந்நிலையில் படிப்பறிவற்ற, முட்டாள் என்று சமூகத்தால், அவனது அழகான மனைவியால் ஒதுக்கப்பட்ட அவன், தன் அனுபவ அறிவால் நள்ளிரவில் நடு வழியில் நின்று விட்ட அந்தப் புகையிரதத்தைத் திருத்திப் பாதுகாப்பாகப் பயணிகளைக் காப்பாற்றுகிறான. அதில் அவனது மனைவியும் பயணிக்கின்றாள். தன்னால் ஒதுக்கப்பட்ட தன் முன்னாள் கணவனைப் பார்த்து 'எவ்வளவு பெரியவர்' என்று நினைக்கின்றாள். அதை அவனுக்கும் கூறுகின்றாள். அது அவனுக்குப் பெருமையாகவும் இருக்கிறது. புகையிரதம் நகரத்துவங்குகின்றது. தன் அழகியான முன்னாள் மனைவியுடன் நகரமும் புகையிரதத்தைப் பார்த்து அவன் நிற்பதுடன் கதை முடிவுக்கு வருகின்றது. இவ்விதம் கதை நகர்கிறது. முதல் வாசிப்பிலேயே உணர்ச்சிகரமாகப் படைக்கப்பட்ட கதை மறக்காமல் நெஞ்சில் ஆழத்தில் நிலைத்து நின்று விட்டது. இன்றுவரை நிற்கிறது. இது கதாசிரியரின் படைப்பின் வெற்றி. நான் இதனை முதன் முதலில் வாசித்தது தினமணிக்கதிர் இலவச இணைப்பாக வெளிவந்தபோதுதான்.

கல்கி - பெர்க்லி சிறுகதைப்போட்டியொன்றில் இவரது சிறுகதையான 'நாங்களும் நடிகைகள்' இரண்டாவது பரிசு பெற்றிருக்கின்றது. அவ்வருடத்துக்கான அப்போட்டியில் முதற் பரிசினைப்பெற்ற சிறுகதையான 'இவள் என் மனைவி' சிறுகதையினை எழுதியிருந்தவர் எழுத்தாளர் இந்திரா பார்த்தசாரதி. அதுவே இ.பா. எழுதி நான் வாசித்த முதலாவது அவரது படைப்பு.

நான் ஸ்ரீ வேணுகோபாலனின் எழுத்துகள் என் வாசிப்பு அனுபவத்தில் இன்பமளித்த வெகுசன எழுத்துகளில் குறிப்பிடத்தக்கவை. பொதுவாக எழுத்தையே நம்பி வாழும் , வாழ்ந்த எழுத்தாளர்களை நான் பெரிதும் மதிப்பவன். பொருளியல்ரீதியில் அவர்களது பங்களிப்பு சிறப்பாக அமையாது விட்டாலும், அவர்களது எழுத்துலகப் பங்களிப்பு முக்கியமானது என்று கருதுபவன். அவ்வகையில் எழுத்தாளர் ஸ்ரீ வேணுகோபாலனையும் மதிப்பவன்.

வருமானத்தை மையமாக வைத்து புஷ்பா தங்கத்துரை என்னும் பெயரில் அவர் எழுதிய படைப்புகளில் 'ஒரு ஊதாப்பூ கண் சிமிட்டுகின்றது' படைப்பினைத் தவிர ஏனையவை என் கவனத்தைக் கவரவில்லை. அவை பெரும்பாலும் பாலுணர்ச்சியைத் தூண்டி பணம் சம்பாதிப்பதை மையமாகக் கொண்டு எழுதப்பட்ட வணிக எழுத்துகள். ஆனால் ஸ்ரீ வேணுகோபாலன் என்னும் பெயரில் அவர் எழுதிய பல படைப்புகள் இன்னும் நினைவிலுள்ளன. எழுத்தாளர் ஸ்ரீ வேணுகோபாலனின் நினைவு தினம நவம்பர் 10

## இதுவரை வெளியான நூல்கள்

1. மண்ணின் குரல் (நாவல், கவிதை, கட்டுரைத் தொகுப்பு),
2. எழுக அதி மானுடா! (கவிதைத்தொகுப்பு),
3. அமெரிக்கா (நாவல், சிறுகதைகளின் தொகுப்பு),
4. நல்லூர் ராஜதானி நகர அமைப்பு (ஆய்வு)
5. மண்ணின் குரல் ( நாவல்களின் தொகுப்பு) ,
6. குடிவரவாளன் (நாவல்) ,
7.. அமெரிக்கா (நாவல், திருத்திய இரண்டாவது பதிப்பு.)
8. கட்டடக்கா(கூ)ட்டு முயல்கள் (சிறுகதைத்தொகுப்பு) ,
9> வ.ந.கிரிதரன் கட்டுரைகள் ,
10. ஒரு நகரத்து மனிதனின் புலம்பல் (கவிதைத்தொகுப்பு) ,
11. நவீன விக்கிரமாதித்தன் (நாவல்)

நல்லூர் ராஜதானி நகர அமைப்பு ஆய்வு நூல் மற்றும் இவரது சிறுகதைகள் சிங்கள மொழிக்கு எழுத்தாளர் ஜி.ஜி.சரத் ஆனந்தவினால் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. இவரது படைப்புகள் பல அமேசன் - கிண்டில் தளத்தில் மின்னூல்களாகக் கிடைக்கின்றன.

கணையாழி (1995 - 2000 தொகுப்பு, ஞானம் சஞ்சிகையின் ' ஈழத்துப்புலம்பெயர் இலக்கியத்தொகுப்பு', ' பனியும் பனையும்' தொகுப்பு , அமரர் வெங்கட் சாமிநாதன் பற்றிய வாதங்களும், விவாதங்களும் தொகுப்பு ,'வடக்கு வாசல் 'சஞ்சிகையின் இலக்கிய மலர், ஆழி பப்ளிஷர்ஸ் வெளியிட்ட ஆண்டு 'தமிழ்க்கொடி' மலர் ஆகியவற்றில் இவரது படைப்புகள் இடம் பெற்றுள்ளன. எழுத்தாளர் சுஜாதா அறக்கட்டளையும் ஆழி பப்ளிஷர்ஸும் இணைந்து நடத்திய அமரர் சுஜாதா அறிவியல் புனைகதைப் போட்டியில் வட அமெரிக்காவுக்கான விருதினைப் பெற்ற அறிவியற் சிறுகதை 'நான் அவனில்லை'. இச்சிறுகதை ஆழி பதிப்பகம் வெளியிட்ட ‘சுஜாதா நினைவுப் புனைவு 2009’ , அறிவியற் புனைகதைத்தொகுப்பிலும் இடம் பெற்றுள்ளது. விகடனின் பவளவிழா ஆண்டில் இவரது 'பல்லிக்கூடம்' முத்திரைக் கதையாக வெளியானது.

## வெளியான அமேசன் - கிண்டில் மின்னூல்கள். இவை பதிவுகள்.காம் வெளியீடுகள்.

1. வ.ந.கிரிதரன் பாடல்கள்
2. வ.ந.கிரிதரனின் அணிந்துரைகள்
3. அமெரிக்கா!: அமெரிக்கத் தடுப்பு முகாம் அனுபவம்!
4. வ.ந.கிரிதரனின் கட்டுரைகள் (தொகுதி ஒன்று)
5. வ.ந.கிரிதரனின் 'கணையாழி'க் கட்டுரைகள்
6. ஒரு நகரத்து மனிதனின் புலம்பல்!: வ.ந.கிரிதரனின் தமிழ்க் கவிதைத் தொகுப்பு!
7. அருச்சுனனின் தேடலும் அகலிகையின் காதலும் (நாவல்)
8. அண்டவெளி ஆய்வுக்கு அடிகோலும் தத்துவங்கள்: வ.ந.கிரிதரனின் அறிவியற் கட்டுரைகள், சிறுகதைகள்
9. நவீன கட்டடக்கலைச் சிந்தனைகள்!
10.வன்னி மண்: - என் பால்யத்தின் பிரதிபலிப்பு. (நாவல்)
11. பால்ய காலத்துச் சிநேகிதி! (நாவல்)
12. நல்லூர் ராஜதானி நகர அமைப்பு (திருத்திய இரண்டாம் பதிப்பு)
13.குடிவரவாளன்: நியூயோர்க் மாநகரத் தமிழ் அகதி அனுபவம்! (நாவல்)
14. மண்ணின் குரல்: - கனடாவில் வெளியான முதலாவது தமிழ் நாவல். - (நாவல்)
15. கணங்களும் குணங்களும் (நாவல்)
16. வ.ந.கிரிதரனின் கட்டுரைகள் (தொகுதி இரண்டு)
17. இன்று புதிதாய்ப் பிறந்தேன் (வ.ந.கிரிதரன் பாடல்கள் தொகுப்பு 2

## ஆங்கில நூல்கள் (மின்னூல்களாக) - மொழிபெயர்த்தவர் - லதா ராமகிருஷ்ணன்.

1. An Immigrant  (Novel)
2. America (Novel)
3. Nallur Rajadhani City Layout

# வ.ந.கிரிதரன்



தற்போது கனடாவில் வாழ்ந்து வரும் எழுத்தாளர் வ.ந.கிரிதரன் இலங்கையைச் சேர்ந்த தமிழ் எழுத்தாளர். வவுனியா மகாவித்தியாலயம், யாழ் இந்துக்கல்லூரி ஆகிய பாடசாலைகளில் கல்வி கற்ற இவர் , மொறட்டுவைப் பல்கலைக்கழகத்தின் கட்டடக்கலைப் பட்டதாரி. "டொராண்டோ' சென்டனியல் கல்லூரியில் இலத்திரனியற் பொறியியல் துறையில் பட்டம் , தகவற் தொழில் நுட்பம் நுட்பத்துறையில் பல்வேறு கல்வித் தகைமைகளைப் பெற்றவர். இலங்கையிலிருந்த காலத்தில் தன் எழுத்துலக வாழ்வினை ஆரம்பித்த புகலிடத்தில் தொடர்ந்து எழுதி வருகின்றார். பதிவுகள் என்னும் இணைய இதழினை 2000 ஆம் ஆண்டிலிருந்து ஆசிரியராகவிருந்து நடாத்தி வருகின்றார்.

இவரது படைப்புகள் இலங்கை, தமிழகம் மற்றும் புகலிடத்தமிழர்கள் வெளியிட்ட சஞ்சிகைகள், பத்திரிகைகளில் வெளியாகியுள்ளன. தமிழக ஆய்வரங்குகளில் இவரது புகலிடப்புனைகதைகளைப் பற்றிய ஆய்வுக்கட்டுரைகள் சமர்ப்பிக்கப்பட்டுள்ளன. தமிழகப்பல்கலைக்கழகங்களில் இவரது படைப்புகளைப்பற்றி முனைவர் மற்றும், முதுகலைத் தத்துவம் கற்கை நெறிகளுக்காக மாணவர்கள் ஆய்வுகள் செய்திருக்கின்றார்கள். 'பொந்துப்பறவை'கள் என்னும் சிறுகதை சிங்கப்பூர் கல்வி அமைச்சினால் தமிழ் மாணவர்களுக்கான பாடத்திட்டமொன்றில் உள்ளடக்கப்பட்டுள்ளதும் குறிப்பிடத்தக்கது. 'அமெரிக்கா' அமெரிக்கன் கல்லூரியின் (தமிழ்நாடு) பாடத்திட்டத்திலுள்ளது.

ஆனந்த விகடனின் பவள விழாப்போட்டி, எழுத்தாளர் சுஜாதா அறக்கட்டளை மற்றும் ஆழி பப்ளிஷர்ஸ் இணைந்து நடாத்திய உலக அளவிலான அறிவியற் சிறுகதைப்போட்டி ஆகியவற்றில் பரிசுகளைப்பெற்றுள்ளன. கனடாத் தமிழ் இலக்கியத் தோட்டத்தின் இலக்கியச் சாதனைக்கான இயல் விருது 2022 பெற்றவர்.